# கல்கி

KALKI 22.12.2002
ரூ. 6.00

சீஸன் சிறப்புப் பக்கங்கள்






## மீண்டும் ஒரு ரேகா!

Heinz
Trust • Taste • Nutrition

# என்னையே நம்பி இருக்கும் என் குழந்தையின் ஊட்டசத்துக்கு நான் யாரை நம்புவது?




என் குழந்தைதான் எனக்கு ஒப்பற்ற செல்வம். அவன் என்னையே நம்பியிருப்பதால், கொஞ்சம் கவலைப்படுவது இயற்கைதான். பெரும்பாலான தாய்மார்கள், 'அவளுக்கு சரியான ஊட்டசத்து கிடைக்கிறதா, சரியான முறையில் வளர்ச்சி இருக்கிறதா?' என்றெல்லாம் கவலைப்படுகிறார்கள். ஆனால் எனக்கு அந்த கவலை இல்லை. ஏனெனில், ஃபாரெக்ஸ் இருக்கிறதே! ஃபாரெக்ஸை எளிதில் தயார் செய்ய முடியும். எனவே, குழந்தைக்கு பசி எடுத்தவுடனேயே ஊட்டலாம். அதுமட்டுமா? ஃபாரெக்ஸ் ஒரு விசேஷ முறையில் தயாரிக்கப்படுவதால் எளிதில் செரிக்கக் கூடியது. மற்றும், பால், கோதுமை, அரிசி, பழங்கள் மற்றும் காய்கறிகளின் இயற்கையான நற்குணங்கள் அதிசிறப்பாக அப்படியே இருக்கும். மேலும், ஃபாரெக்ஸ் என் குழந்தைக்கு புரோட்டீன்ஸ், கார்போஹைட்ரேட்ஸ், விட்டமின்ஸ் மற்றும் மினரல்ஸின் சரியான கலவை அடங்கிய சமச்சீர் ஊட்டசத்து அளிக்கிறது. எனவே, என் குழந்தையின் சரியான வளர்ச்சிக்கு வீட்டில் தயார் செய்த ஆகாரங்களுடன், நான் நம்புவது ஃபாரெக்ஸைதான்.

எனவே, 50 ஆண்டுகளுக்கும் மேலாக, பல தலைமுறைகளாக தாய்மார்கள் ஃபாரெக்ஸை நம்புவதில் ஆச்சரியம் இல்லை. ஒவ்வொரு முறையும் என் குழந்தை சிரிக்கும் போது, 'நன்றி, ஃபாரெக்ஸ் அம்மா!' என்று கூறுவது போல் இருக்கும்.



## ஃபாரெக்ஸ்®

வளர்ச்சிக்கு சிறந்த வழி

6 ருசிகரமான சுவைகளில்



● ரைஸ், வீட், வீட் வெஜிடபிள், வீட் மிக்ஸ்டு ஃப்ரூட்ஸ், வீட் ஆப்பிள்

● வீட் எக்

இலவச குழந்தை பராமரிப்பு புத்தகத்திற்கு, குழந்தையின் பெயர்/பிறந்த தேதியுடன் எங்களுக்கு எழுதுங்கள்: ஹைன்ஸ் இண்டியா பி. லிட்., த. பெ. எண் : 1907, மும்பை - 400 001.

IMPORTANT NOTICE: MOTHER'S MILK IS BEST FOR YOUR BABY, INFANT FOOD SHALL BE INTRODUCED ONLY AFTER 4 MONTHS OF AGE.

महत्वपूर्ण सूचनाः माँ का दूध आपके बच्चे के लिये सर्वोत्तम है ४ महीने के बाद ही उसे शिशु आहार देना शुरू करें.

கல்கி இன்டர்நெட் முகவரி : www.kalkiweekly.com
புதிய ஈ மெயில் முகவரிகள் :
எடிடோரியல் : kalki@kalkiweekly.com சந்தா : subscription@kalkiweekly.com பிற தகவல்கள் : info@kalkiweekly.com

முதுகெலும்பைப் பதம் பார்க்கும் புத்தகச் சுமை, விடுமுறையிலும் 'விடாத கருப்பாக' மிரட்டும் வீட்டுப் பாடம், கனவிலும் அலறவைக்கும் பள்ளி வளாக கட்டுப்பாடுகள் என்று மெட்ரிகுலேஷன் கல்விமுறையின் சாபக் கேடுகளை, வாய்வலிக்க விவாதித்து முடித்துவிட்டது தமிழ்ச் சமூகம். ஆனால் "இதற்கொரு தீர்வை ஐந்து வருட ஆராய்ச்சி மூலம் உருவாக்கியிருக்கிறோம்" என்கிறார் லதா ரஜினிகாந்த்.

"டாஸ்க் என்ற கல்வியாளர்கள் குழுவை ஐந்தாண்டுகளுக்கு முன்பு நியமித்து, மாற்றுக் கல்வி குறித்த ஆராய்ச்சியில் ஈடுபட்டோம். பெற்றோர், மாணவர்கள், ஆசிரியர் ஆகிய மூன்று தரப்பினரோடும் பல சுற்றுக்கள் கலந்துரையாடல், கருத்துப் பெறுதல்கள், என, தொடர்ந்த ஆராய்ச்சியின் முடிவில் 'சாத்யா'வை உருவாக்கியிருக்கிறோம்" என்னும் லதா ரஜினிகாந்த், புத்தகச் சுமையை முற்றிலும் குறைத்துவிட்டதாகச் சொல்கிறார்.

"தற்போதிருக்கும் கல்வி முறையை நாங்கள் குறை சொல்ல விரும்பவில்லை. அதே நேரம், மாணவர்களிடம் நிலவும் தேவையற்ற அச்சத்தைப் போக்கி, அவர்களுக்குள் இருக்கும் மனிதனைக் கண்டு பிடித்துத் தரும் கல்வி முறையாக இதை உருவாக்கியிருக்கிறோம்." என்னும் இவர், மாணவரின் வயதிற்கு ஏற்ப பாடங்களையும், பாடங்களின் அளவையும், கற்பிக்கும் முறையையும், எளிமைப் படுத்தியிருப்பதோடு, கற்றுக் கொடுக்கும் ஆசிரியரைத் தேர்வு செய்வதும், அவர்களுக்கும் பயிற்சி அளித்து தரமான ஆசிரியராக உருவாக்குவதும், 'சாத்யா'வில் அடங்கும் என்கிறார்.

டாஸ்க் கல்விக்குழு உருவாக்கியிருக்கும் பாடத் திட்டங்களின் அடிப்படையில், எல்.கே.ஜி. தொடங்கி பிளஸ்டூ வரை ஒவ்வொரு வகுப்பிற்கும், ஒரே பாடப் புத்தகத்தில் ஆங்கிலம், கணிதம், சுற்றுச் சூழல் அறிவியல், சமூக அறிவியல் ஆகிய அனைத்துப் பாடங்களையும் அடக்கி விட்டோம் என்கிறார். டிஸ்கவரி என்ற பெயரில், இந்தப் பாடப் புத்தகங்களை மனோஜ் பிரகாசம் பதிப்பகம் அச்சிட்டு வழங்க ஒப்புக் கொண்டிருக்கிறது. 'இந்தியா முழுவது முள்ள எந்தப் பள்ளியும் இந்தக் கல்வி முறையை, தங்கள் அனுமதியோடு பயிற்றுவிக்கலாம்' என்கிறார் லதா ரஜினிகாந்த்.

- ஸ்ரீ சக்கரம்



• லதா ரஜினி

செ**ன்னை பெருநகர நிலத்தடி நீர் (முறைப்படுத்துதல்) சட்டத்தின் கீழ், தமிழக அரசு சமீபத்தில் போட்ட இரு ஆணைகள் சர்ச்சையைக் கிளப்பி இருக்கின்றன.

இந்த ஆணைகளின்படி பலமாடிக் கட்டடங்கள், கட்டாயம் மழை நீர் சேமிப்புக்கான ஏற்பாடுகளைச் செய்ய வேண்டும். குளியலறை மற்றும் வாஷ் பேஸின் மூலம் பயன்படுத்தப்படும் நீர் மீண்டும் சுத்திகரிக்கப்பட்டு, மறுபடி அதே உபயோகத்துக்குப் பயன்படுத்தப்பட வேண்டும். இனிமேல் கழிப்பறையிலிருந்து வரும் பைப்புகள் மட்டுமே தெருவிலிருக்கும் கழிவுநீர்க் குழாயோடு இணைக்கப்படுமாம்.

இவை ஒருபக்கம் இருக்க, மற்றொரு ஆணையில் வீட்டுத் தோட்டத் துக்கும், தொழிற்சாலை உபயோகத்துக்கும் நிலத்தடி நீரைப் பயன்படுத்தவே கூடாது என்று சொல்லப்பட்டிருக்கிறது. வருடத்தில் பல மாதங்கள் மெட்ரோ வாட்டர் குழாய்களில் காற்று மட்டுமே வந்து கொண்டிருக்கிறது, என்பது சென்னைவாசிகளின் அனுபவம். அப்படியே தண்ணீர் வந்தாலும், அதிக பட்சம் பத்துக் குடங்களுக்கு மேல் வராது. இப்படியிருக்க, பெரும்பா லான வீடுகளில் சகல உபயோகங்களுக்கும் நிலத்தடி நீரைத்தான் நம்பி யிருக்கிறார்கள். இந்த நிலையில் தோட்டத்துக்கு நிலத்தடி நீரை விட்டால் வேறு என்ன ஆதாரம்? மேலும் சென்னை புறநகர்ப் பகுதிகளில் ஆயிரக் கணக்கானவர்களுக்கு வேலை வாய்ப்பு கொடுக்கும் தொழிற்சாலைகள், தங்கள் தேவைகளுக்கு நிலத்தடி நீரையே நம்பியிருக்கின்றன.

# கிச்சன், கார்டனுக்கு ஆபத்து?

“சென்னை சுற்று வட்டாரத்தில் நிலங்களை வாங்கிப் போட்டு, சகட்டு மேனிக்கு உறிஞ்சி “தண்ணீர் வியாபாரம்” செய்பவர்களை, இது பாதிக்கும்; தண்டிக்கும்.”

இந்த அரசு ஆணைகள் மென்மேலும் தொல்லைகளுக்குத் தானே வழிவகுக்கும்? நமது சந்தேகங்களைச் சென்னை வளர்ச்சி ஆராய்ச்சி நிலை யத்தில் பணியாற்றும் நீர்வள மேலாண்மை நிபுணர் பேராசிரியர் ஜனக ராஜிடம் கேட்டோம்.

• ஜனகராஜ்





“இந்த ஆணைகள் நல்ல நோக்கத்தில் தான் போடப்பட்டிருக்கின்றன. நிலத்தடி நீர் என்பது அரசு சொத்து. ஆனால் இதில் கூறப்பட்டுள்ளவைகளை அமல்படுத்துவதிலும் கண்காணிப்பதிலும் கடும் சிக்கல் இருக்கிறது. வருடா வருடம் மழை பொழிவு குறைந்து வரும் நிலையிலும், நிலத்தடி நீர்மட்டம் இறங்கிக் கொண்டே போகும் சூழலிலும், அரசாங்கம் சில கட்டுப்பாடுகளைக் கொண்டு வந்தே ஆக வேண்டும்; அதில் சந்தேகமில்லை. வருடத்திற்கு இங்கே 100 சென்டிமீட்டர் மழை பொழிகிறது. ஆனால் இஸ்ரேலில் 20 சென்டிமீட்டர் மழைதான் பெய்கிறது. தமிழக அரசின் ஆணைகளில் கூறப்பட்டுள்ளது போல, பாத்ரூம் மற்றும் வாஷ் பேஸின் தண்ணீரை இஸ்ரேலில் தனி பைப்புகள் மூலம் செலுத்தி, மறு சுழற்சி மூலம் உபயோகிக்கிறார்கள். நீர் மேலாண்மைக்கு இஸ்ரேல் ஒரு நல்ல உதாரணம். அந்த அளவுக்கு இல்லாவிடினும் இங்கேயும் கட்டுப்பாடுகள் கட்டாயம் தேவை.''

**சென்னையின் சுற்று வட்டாரத்திலுள்ள தொழிற்சாலைகள் தங்கள் உபயோகத்துக்கு பெரும்பாலும் நிலத்தடி நீரைத் தானே நம்பியிருக்கின்றன? – அதற்கு என்ன மாற்றுவழி?**

நியாயமான உபயோகத்துக்கு அரசின் உரிமம் பெற்று, பணம் செலுத்தி, குறிப்பிட்ட இடங்களில் எடுக்க எந்தத் தடையும் இருக்காது. ஆனால், சென்னை சுற்றுவட்டாரத்தில் நிலங்களை வாங்கிப் போட்டு சகட்டு மேனிக்கு உறிஞ்சி "தண்ணீர் வியாபாரம்" செய்பவர்களை, இது பாதிக்கும்; தண்டிக்கும்.''

**அதுசரி... ஏதோ சிறிய அளவில் வீட்டில் தோட்டம் போட்டிருப்பவர்கள் மெட்ரோ நீரையும் (வரும் போது) பயன்படுத்தக் கூடாது; நிலத்தடி நீரையும் பயன்படுத்தக் கூடாது என்றால் எப்படி சமாளிப்பது?**

“வீட்டில் சிறிய அளவில் கத்தரிக்காய், வெண்டைக்காய், கீரை தோட்டம் போட்டிருப்பவர்களுக்கு எந்த ஆபத்தும் இல்லை. பெரிய, பெரிய புல்வெளிகளுக்குத்தான் (Lawns) நிலத்தடி நீரைப் பயன்படுத்தக் கூடாது'' என்று ஆணை சொல்கிறது. ஆனால் சட்டத்தின் தெளிவற்ற தன்மை காரணமாக, குடிநீர் இலாகாவின் கீழ் நிலை அதிகாரிகள், 'கெடுபிடி' வசூலில் இறங்கும் ஆபத்து இருக்கிறது.

“கண்கெட்ட பிறகு சூரிய நமஸ்காரம் என்பது போல, இந்த ஆணைகளைப் போட்டிருக்கிறார்கள். ஆனால் நமது நாட்டின் பிரச்னை என்னவென்றால், பல சட்டங்களும் ஆணைகளும் போடப்பட்ட நிலையிலேயே இருக்கின்றன என்பது தான். அதை அமல்படுத்தும் பொறுப்பிலிருப்பவர்கள், அடிப்படையில் செயல்பட்டு, அந்த ஆணைகளைத் தங்களுக்கு ஏற்றபடி வளைத்துக் கொள்கிறார்கள். இந்த ஆணைகளுக்கும் அந்தக் கதி ஏற்படாமல் இருக்க வேண்டும் என்பது தான் கவலை'' என்கிறார் ஜனகராஜ்.

**– ஸ்ரீநிவாசன்**

படங்கள் : **ராஜன்**



# பழைய வீராணம்... புதிய ஊழல்!

சென்ற வாரம் 'வீ' வாரம்! நாகப்பா கொலையைத் தொடர்ந்து வீரப்பன் பிரச்னை நடந்த அமளி துமளி ஒரு பக்கம். மற்றொரு பக்கம், வீராணம் திட்டத்திற்காக டெண்டர் விட்டதில் முறைகேடுகள் என்று புகையத் துவங்கியுள்ள விவகாரம். ஜெயலலிதா அரசு சென்னைக்குக் குடிநீர் ஆதாரங்களை மேம்படுத்த, செயல்படுத்தப் போகும் இந்தத் திட்டத்திற்குப் பெயர் 'புதிய வீராணம்!

## வீராணம் ஏரி!

கடலூர் மாவட்டத்தில் சிதம்பரத்துக்கு அருகில் உள்ள கடல் போன்ற ஏரி! 'பொன்னியின் செல்வனி'ல் கல்கி வீராணம் ஏரிக்கரையில் பதினெட்டாம் பெருக்கு காட்சியைக் கண் முன் கொண்டு நிறுத்தினார். அது அந்தக் காலம். காவிரியில் வெள்ளம் வந்து, கொள்ளிடத்தில் திருப்பி விடப்பட்டு, அதிலிருந்து வடவாறு மூலம் வீராணம் ஏரிக்குத் தண்ணீர் வரும். இப்போது காவிரியிலேயே தண்ணீர் கிடையாது. அப்புறம் கொள்ளிடத்திற்கு ஏது தண்ணீர்? எனவே, வீராணம் ஏரிப் படுகையில் வருடத்தில் பெரும்பாலான மாதங்கள் சிறுவர்களின் கிரிக்கெட் மேட்ச்தான். சென்னையிலிருந்து 226 கி.மீ தொலைவில் உள்ளது வீராணம் ஏரி.

## 'பழைய' வீராணத்தைப் பார்ப்போமா?

அண்ணாவுக்குப் பிறகு கருணாநிதி முதல்வர் ஆனவுடன், சென்னையின் குடிநீர் பிரச்னையைத் தீர்க்க, வீராணம் ஏரியிலிருந்து தண்ணீர் கொண்டு வர முடிவு செய்யப்பட்டது. சத்திய நாராயணா பிரதர்ஸ் என்ற நிறுவனத்துக்கு ஒப்பந்தம் விடப்பட்டது. அந்த நிறுவனமும் மிகச் சுறுசுறுப்பாக ராட்சத சிமெண்ட் பைப்புகள் செய்ய, தொழிற்சாலைகள் நிறுவி வேலையைத் துவங்கியது. சில இடங்களில் பைப்புகளும் பூமியில் புதைக்கப்பட்டன. ஆனால் டெண்டர் விட்டதில் ஊழல் என்ற புகார் எழுந்தது. மேலும் சிமெண்ட் பைப்புகள், குறிப்பிட்ட தரத்தோடு இல்லை என்றும் புகார் செய்யப்பட்டது. இந்தச் சர்ச்சைகள் நடந்து கொண்டிருந்த சமயம், காண்ட்ராக்டர் சத்திய நாராயணா இறந்துபோனார். வேலைகள் நின்று போயின. இந்திரா காந்தியுடன் கூட்டணி வைத்தார்



• குப்புராஜ்



கலைஞர். பின்னர் எமர்ஜென்ஸி வந்தது. சர்க்காரியா கமிஷன் ஊழல்களை விசாரித்தது. 1980ம் ஆண்டு தேர்தலில் மீண்டும் காங்கிரஸ் - தி.மு.க கூட்டணி. ஊழல் விசாரணையில் தொடர் நடவடிக்கையின்றி கிடப்பில் போடப்பட்டது. கோடிக் கணக்கில் பணம் பாழானது. சிலரது பாக்கெட் நிரம்பியது.

## புதிய வீராணம் புறப்பட்டது

**1991** - 1996 ம் ஆண்டு ஜெயலலிதா ஆட்சிக் காலத்தில் மீண்டும் தூசி தட்டி எடுக்கப்பட்டு "புதிய வீராணம்" என்ற பெயர் சூட்டப்பட்டது. முதல் பணியாக சுமார் நூறு கோடி செலவில், வடவாறு கால்வாய் அகலப்படுத்துதல் மற்றும் தூர் எடுக்கும் வேலை, ஏரியை ஆழப்படுத்தும் வேலை, ஆகியவை செய்ய திட்டம் போடப்பட்டன. ஆனால் 1996ல் ஜெ. ஆட்சியை இழக்க, தி.மு.க ஆட்சியில் இந்த வேலைகள் தொடர்ந்தன. ஏற்கெனவே சூடு கண்ட பூனையாக தி.மு.க இருந்ததால், வீராணம் திட்டத்தை மேற்கொள்ளாமல், வீராணம் ஏரியில் கூடுதலாகக் கிடைக்கும் நீரை, சிதம்பரம் நகருக்குக் குடிநீர் கொடுக்கவும், அதிக ஆயக்கட்டுக்குப் பயன்படுத்திக் கொள்ளவும் தீர்மானிக்கப்பட்டது.



• அழகிரி

## புதிய அவதாரம் எடுத்த வீராணம்!

**2001**ல் மீண்டும் ஜெயலலிதா ஆட்சிக்கு வந்தவுடன் 'புதிய வீராணம்' பற்றிய பேச்சுக்களும் துவங்கின.

"இந்தத் திட்டத்தை நிறைவேற்றியே தீருவேன்' என்று சூளுரைத்தார் ஜெயலலிதா. போன வருடம் டிஸம்பர் மாதத்தில் டெண்டர் கோரப்பட்டது. வேலைகள் மொத்தம் ஐந்து பாகங்களாகப் பிரிக்கப்பட்டன. சேத்தியாதோப்பில் தண்ணீரை எடுக்கும் பம்ப் ஹவுஸ், வடக்குத்து என்ற இடத்தில் சுத்திகரிக்கும் தொழிற்சாலை, ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் குழாய்கள் பதிப்பிக்கும் வேலை இரண்டு பாகங்கள், ஐந்தாவதாக இந்த வேலைகளை கண்காணிக்க, ஒரு தனியார் ஏஜென்ஸி (மெட்ரோ வாட்டர் ரொம்ப பிஸி) என்று திட்டமிடப்பட்டது. மதிப்பீடுகள் போடப்பட்டன.

## துவங்கியது பேரம்!

**மு**தல் இரண்டு பாகங்களுக்கும் அரசின் திட்ட மதிப்பீட்டை ஒட்டியே குறைந்த பட்ச டெண்டர் வந்தது. முதல் பாகம் திட்ட மதிப்பீடு 22.21 கோடி, டெண்டர் குறைந்த பட்சத் தொகை 16.14 கோடி. இரண்டாம் பாகம் திட்டமதிப்பீடு 27.31, கோடி. அதே மதிப்பீட்டுக்கு டெண்டர் கொடுக்கப்பட்டது. மூன்றாவது பாகத்தில்தான் விவகாரங்கள் துவங்கின. அதன் திட்ட மதிப்பீடு 275.57 கோடி. பன்காக் நவாகா என்ற மலேஷிய நிறுவனம் குறைந்த பட்சத் தொகையாக 292.57 கோடி குறிப்பிட்டது. அப்போது மெட்ரோ வாட்டர் நிர்வாக இயக்குன

ராக இருந்த நிரஞ்சன் மார்டி (கண்டிப்புக்குப் பெயர் போனவர்) அந்த நிறுவனத்தை டெண்டர் தொகையைக் குறைக்க பேச்சுவார்த்தைக்கு வரும்படி அழைத்தார். ஆனால் பேச்சுவார்த்தை நடக்கும் முன் அவரும், மெட்ரோ வாட்டரின் செயல் இயக்குனரும் மாற்றப்பட்டனர். இது தவிர, அமைச்சர் துரைராஜ் அவர்களிடம் இருந்து அந்த இலாகா பிடுங்கப்பட்டது. இறுதியில் அந்த மலேஷிய நிறுவனம் 292.57 கோடி தொகைக்கு வேலையைப் பெற்றுவிட்டது. அடிக்கடி மலேஷியாவிலிருந்து சென்னைக்கு வந்து போகும் சில 'ஆசாமி'களின் பினாமி நிறுவனம் அது என்கிறார்கள்.

• வீராணம் ஏரி

## நான்காவது பாகத்தில் நடந்த நாடகம்

நான்காவது பாகத்தின் திட்ட மதிப்பீடு 296.72 கோடி. 225.15 கோடிக்கு, குறைந்த பட்ச தொகையாகக் கேட்டது டாட்சல் என்ற மும்பை நிறுவனம். வேலைக்கான ஆர்டரும் கொடுக்கப்பட்டது. ஆனால் திடீரென்று "எங்களால் அந்தத் தொகைக்கு வேலை செய்ய முடியாது, 377 கோடிக்குதான் செய்ய முடியும்" என்று சொல்லி, முன் வைப்புத் தொகை ஒன்றரைக் கோடி ரூபாயை இழந்து ஓடிவிட்டது. மூன்றாவது பாகத்தை வென்ற பன்காக் நயாகாவும், ரஷ்ய கூட்டுறவுடன் நடக்கும் காம்மன் நிறுவனமும் (திமுக ஆட்சியில் மேம்பாலம் கட்டியிருக்கிறது இந்த நிறுவனம்) போட்டியிட்டன. தனது தொகையை 480 கோடியிலிருந்து 360 கோடியாகக் குறைத்துக் கொண்டது காம்மன். ஆனால் பன்காக் தனது தொகையை 312 கோடியிலிருந்து 362 கோடியாக உயர்த்திவிட்டது. உடனே மெட்ரோ வாட்டர், இந்த இரு நிறுவனங்களிடம் மட்டும் மீண்டும் டெண்டர் கோரியது. இறுதியில் 335.69 கோடியைக் குறிப்பிட்டு வேலையைக் கைப்பற்றியது காம்மன். மொத்தத்தில் மூன்றாவது, நான்காவது பாகங்களில் சுமார் 57 கோடிக்கு அதிகமாக டெண்டர் கொடுக்கப்பட்டது.

## சூட்சுமம் எங்கே?

"குறைந்த தொகை கேட்ட டாட்சல் என்ற நிறுவனம் தானாக விலகவில்லை. மற்ற இரண்டு கம்பெனிகளிடம் பேரம் படிந்துவிட்டபடியால், சுமார் மூன்றுகோடி ரூபாய் கொடுத்து ஓரம் கட்டப்பட்டார்கள்" என்று குற்றச்சாட்டு எழுந்துள்ளது. பின்னர், நான்காவது பாகத்துக்கு இரண்டு நிறுவனங்களிடம் மட்டும் டெண்டர் கோரிப் பெற்ற மெட்ரோ வாட்டர் ஏன் டாட்சல் நிறுவனத்தையும் கேட்கவில்லை? நியாயமாகப் பார்த்தால் புதியதாகவே டெண்டர் கோரியிருக்க வேண்டும்.

## அமைச்சர் சொல்கிறார்:

மெட்ரோ வாட்டருக்குப் பொறுப்பான அமைச்சர் சம்பத், "எந்தவிதமான முறைகேடும் நடக்கவில்லை" என்கிறார். அமைச்சர் துரைராஜ் இலாகா மாற்றம் மற்றும் அதிகாரிகள் மாற்றம், வழக்கமான ஒன்றுதான் என்றும், வீராணம் டெண்டர்கள் விவகாரத்திற்கும் அதற்கும் சம்பந்தம் இல்லை என்கிறார். மேலிடம் விருப்பத்திற்கேற்ப சொன்ன இடத்தில் கையெழுத்துப் போட அமைச்சர்கள் தயாராக இருக்கும் நிலையில், அவர்களுக்கு மாற்றுக் கருத்து (நியாயமான கருத்து) இருக்குமா என்பது சந்தேகமே. எனவே அமைச்சர் இலாகா மாற்றலுக்கும் இந்த விவகாரத்துக்கும் தொடர்பு இருக்காது, என்று நம்பலாம். ஆனால் தலைமைச் செயலகத்தில் துறைச் செயலாளராக இருந்த சாந்த ஷீலா நாயர் மாற்றலுக்கும், இந்த விவகாரங்களுக்கும் தொடர்பிருக்கலாம் என்று சொல்பவர்கள் உண்டு. டெண்டர் விவகாரம் பரிசீலனையில் இருக்கும்போது மதிப்பீட்டைத் திருத்தி, மூன்றாவது, நான்காவது பாகங்களுக்கான இறுதித் தொகை 632.21 கோடியாக மெட்ரோ வாட்டர் நிர்ணயித்தது. இவற்றுக்கு பன்காக் மற்றும் காம்மன் கேட்ட மொத்தத் தொகை 628.16 கோடி.

எனவே அரசுக்கு மிச்சம் சுமார் நான்கு கோடி ரூபாய்'' என்கிறார் அமைச்சர்.

## பொறியாளர் புட்டு வைக்கிறார்.

''திட்ட மதிப்பீடு போடும்போதே, எதிர் காலத்தில் சில பொருட்களின் விலை ஏறும் என்பதை எதிர்பார்த்து, இருபது முதல் முப்பது சதம் அதிகப்படி தொகைக்கே திட்ட மதிப்பீடு போடப்படும். இப்படியிருக்க, ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் விலை உயர்வினால் மூன்றாவது பாகத்துக்கு அதிக தொகைக்கு டெண்டர் ஒப்புக் கொள்ளப்பட்டது என்றும், திருத்திய மதிப்பீட்டுத் தொகையின்படி நான்காவது பாகத்துக்கும் டெண்டர் கோரப்பட்டு, பெறப்பட்டது என்றும் சொல்கிறார்கள். இது தவறான நடைமுறை. டெண்டர்கள் பரிசிலனையில் இருக்கும் கால கட்டத்தில், திருத்திய மதிப்பீடு போடவே கூடாது. வேலைக்கான ஆர்டர் கொடுத்து, பணி நடக்கும்போது, அவசியமானால் திருத்தப்பட்ட மதிப்பீடு போடலாம். மேலும் அப்படியே திருத்தப்பட்ட மதிப்பீடு போட்டால்கூட, மீண்டும் புதிதாக டெண்டர்கள் வரவேற்கப்பட வேண்டும். இதுதவிர, ஒப்பந்தக்காரர்களைக் கூப்பிட்டு 'விவாதித்து' முடிவு செய்வது என்பது, பல சந்தர்ப்பங்களில் சில 'உள்நோக்கம்' வைத்தே செயல்படுத்தப்படுகிறது. எல்லாவற்றையும் விட, சுமார் 800 கோடி செலவழித்தாலும் இந்தத் திட்டத்தால் சென்னைக்குக் குடிதண்ணீர் கிடைக்காது. பணம் வீண்! இதைத் தெரிந்து கொண்டுதான் உலக வங்கி கடன் கொடுக்க மறுத்துவிட்டது'' என்கிறார் ஓய்வு பெற்ற தலைமைப் பொறியாளர் சி.எஸ். குப்புராஜ்.



இந்தத் திட்டத்தை தமிழக அரசு கைவிட வேண்டும், என்று பொது நல வழக்கு தாக்கல் செய்திருக்கிறார் இவர். ''இந்தத் திட்டப்படி ஒரு நாளைக்கு 180 லட்சம் லிட்டர் தண்ணீர் சென்னைக்கு பம்ப் செய்யப்படும் என்கிறார்கள். இப்படி 145 நாட்கள் பம்ப் செய்தால்தான், ஒரு டி.எம்.சி வரும். சென்னையில் இப்போது இருக்கும் குடிநீர் ஆதாரங்களைத் தவிர, மேலும் நமக்குத் தேவை 12 முதல் 15 டி.எம்.சி. எனவே ஒன்றுக்கும் உதவாத வீராணம் திட்டத்தைக் கைவிட்டு, விட்டு பள்ளிப்பாளையம் அருகிலிருந்து காவிரித் தண்ணீரை சென்னைக்கு எடுத்து வரும் திட்டத்தை செயல்படுத்த வேண்டும். காவிரி - பவானி கூடுதுறையில் வருடத்திற்கு சுமார் 300 டி.எம்.சி தண்ணீர் ஓட்டம் இருக்கிறது. இது தவிர, ஈரோடு - சென்னை செம்பரம்பாக்கம் இடையே பம்ப் செய்யாமல் தானாகவே தண்ணீர் வரும் அளவுக்குத் திறந்த கால்வாய் அமைக்க முடியும்'' என்று சொல்கிறார் குப்புராஜ்.

அமைச்சரோ, டாடா நிறுவனம் 'வீராணம் சாத்தியமே' என்று அறிக்கை கொடுத்ததாகச் சொல்கிறார்!

## வீராணம் (ஊழல்) புராணம்

கடந்த பல வருடங்களாக கோடைக்காலத்தில் வீராணம் வறண்டே இருக்கிறது. சென்னைக்குத் தேவையான கோடைக் காலத்தில் அது வறண்டு இருந்தால், எங்கிருந்து தண்ணீரை பம்ப் செய்வார்கள்? சுமார் ஒரு லட்சம் ஏக்கர் பாசனப் பகுதியுள்ள ஏரியால் தற்சமயம் ஒருபோகம் பயிருக்குத் தண்ணீர் அளிக்க இயலாமல் திண்டாட வேண்டியிருக்கிறது. உபயோகப்படாத இந்தத் திட்டத்தை கைவிட்டுவிட்டு, 90 சதம் நிறைவேறியுள்ள தெலுங்கு கங்கை திட்டத்தை நிறைவேற்றுவதே சென்னையின் தாகத்தைத் தீர்க்க நிரந்தர வழியாக இருக்கும்'' என்கிறார் காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்த சிதம்பரம் சட்டமன்ற முன்னாள் உறுப்பினர் கே.எஸ். அழகிரி. ''வீராணம் திட்டத்தை விடாப்பிடியாக தமிழக அரசு தொடர்ந்து செயல்படுத்துமேயானால், அப்புறம் 'உள்நோக்கம்' வெட்ட வெளிச்சமாகி விடும்'' என்கிறார் அவர்.

— ப்ரியன்

படங்கள்: ராஜன்

# இதுவும் சங்கீதம்!

எம். டீவி, வீ சேனல் போன்ற மியூஸிக் சேனல்களுடன் போட்டிபோட்டு அவற்றை தென்னிந்தியாவில் பின்னுக்குத் தள்ளிவிட்டு, முதலிடத்தைப் பிடித்திருக்கிறது சதர்ன் ஸ்பைஸ் மியூஸிக் என்கிற சேனல். சுருக்கமாக எஸ்.எஸ். மியூஸிக்.

''தென்னிந்திய பாபுலாரிடியைத் தொடர்ந்து, வடக்கே தடம் பதித்திருக்கிறோம். எடுத்த எடுப்பிலேயே மும்பையிலும், டெல்லியிலும் நல்ல வரவேற்பு, என்கிறார் எஸ்.எஸ். மியூஸிக்கின் தலைமை நிர்வாகியான ரமேஷ் பாபு.

"எம்.டீ.வி.யிலும், வீ. சேனலிலும் முழுக்க முழுக்க இந்தியும், ஆங்கிலமும்தான் இடம் பெறுகின்றன. தென்னிந்தியர்களுக்கு ஏற்றவாறு, தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னட மொழிகளுக்குப் போதிய முக்கியத்துவம் இல்லை என்பதால், முழுக்க முழுக்கத் தென்னிந்திய சினிமாப் பாடல்களுக்கு என்று ஆரம்பித்ததுதான் எஸ்.எஸ். மியூஸிக். நான்கு மொழிகளுக்கும் பொதுவாக தொகுப்பாளினிகள் இங்கிலீஷில் பேசுவார்கள். வடக்கேயும் நல்ல வரவேற்பு என்பதால், இந்தி பாப் ஆல்பங்கள், திரை இசை இவற்றையும் கூடுதலாகச் சேர்த்திருக்கிறோம்'' என்கிறார் ரமேஷ் பாபு.

"இருபத்து நாலு மணி நேரமும் சினிமாப் பாட்டு என்றால் அலுப்பு ஏற்படாதா? என்று மேனேஜர் அஜித் குமாரிடம் கேட்டால், ''எங்கள் சேனலைத் தொடர்ந்து பார்க்கிறவர்களுக்குத் தெரியும். நாங்கள் எத்தனைப் பிரயத்தனப்பட்டு, புதுமைகளைப் புகுத்தி, நிகழ்ச்சிகளை வழங்குகிறோம் என்று. ஷ்ரேயா, சுரேன், சிம்ரன், நவீன், சுஹாஸ், சப்னா, கிரெய்க் என்று எங்கள் வி.ஜேக்கள் இளைஞர்கள் மத்தியில் பாப்புலர்.

எங்கள் சேனலின் நேயர்களிடமிருந்து மிக அதிகமான அளவில் வரும் பாராட்டு என்ன தெரியுமா? ''சினிமாப் பாட்டுகள் எல்லா சேனல்களிலும் வந்து கொண்டு இருக்கின்றன. ஆனால் அவற்றைத் தொகுத்து வழங்குகிறவர்களின் மொழி உச்சரிப்பு சரியில்லை; பேச்சிலே ஒரு செயற்கைத்தனம் இருக்கிறது. எஸ்.எஸ். மியூஸிக்கின் தொகுப்பாளர்களின் தொகுப்புரை, எங்களை மிகவும் கவர்ந்து விட்டது"



என்பது தான்.

''எங்களுடைய இலக்கு பதினைந்து வயது முதல் முப்பத்தைந்து வயது வரையிலானவர்கள் தான். புதிய சேனல் ஆரம்பித்து இரண்டு வருடம் கூட ஆகவில்லை என்பதால், பாரம்பரிய இசை இடம் பெறவில்லை. இப்போது, நாங்களும் ஒரு முன்னணி சேனல். எனவே, பாரம்பரிய இசை வழங்கும் எண்ணத்தை விரைவில் செயல்படுத்தப்போகிறோம்'' என்கிறார் ரமேஷ் பாபு.

இந்த வி.ஜேக்களில் ஏகப்பட்ட ரசிகர்களைக் கொண்டவர்கள் கரெனும், சிம்ரனும்.

''எனக்கு மிகவும் பிடித்த விஷயம் இசை. இன்னொன்று கலகலப்பான பேச்சு. என் அம்மா சொன்னதன் பேரில், என் அதிர்ஷ்டத்தைப் பரிசோதிக்க, விண்ணப்பித்தேன். எஸ்.எஸ். மியூஸிக் சேனல் வி.ஜேவாகத் தேர்வு ஆனேன். எனக்கு இத்தனை பாபுலாரிடி கிடைக்கும் என்று நான் எதிர்பார்க்கவே இல்லை'' என்கிறார் கரென்.

சிம்ரன் என்ன சொல்கிறார்?

''கிரெய்க் என்ற சக தொகுப்பாளருடன் இணைந்து, ஈமெயில், கடிதம் மூலம் இளைஞர்களின் காதல் பிரச்னைகளை, அலசி, ஆலோசனை கூறும் 'இதயம் பேசுகிறது' நிகழ்ச்சிதான் எனக்குப் புகழ் தந்தது. அவரவர் தமது பிரச்னைகளுக்குத் தீர்வு என்ன என்கிற தவிப்போடு, ஆலோசனை கேட்கிறபோது, அவர்கள் கோணத்தில் பிரச்னையைப் புரிந்து கொண்டு, அதன்பின், பிரச்னையை விட்டு வெளியில் வந்து, மூன்றாவது மனிதரின் கோணத்தில் சிந்தித்து, ஆலோசனை சொல்ல வேண்டும் என்றால் அது உண்மையிலேயே ஒரு சவாலாகத்தானிருக்கிறது.

— எஸ். சந்திரமௌலி

• ஷ்ரேயா

• சிம்ரன்

• கரென்

• கிரெய்க்



• பின்னணி நாயகன்!

# டாப் டென் வாசகர்கள் யார்..?

நீங்கள் கேட்டவை – தராசு!

● ஆர். அப்துல் சலாம், திருச்சி - 21

? படிப்பை முடித்து, பணிக்கு வரும் இளம் டாக்டர்கள் இரண்டு ஆண்டுகள் கிராமப் புறங்களில் பணியாற்ற வேண்டும் என்று கட்டாயமாக்க மத்திய அரசு பரிசீலித்து வருகிறதாமே?

! சுத்துக்குட்டிகளை அரசின் கட்டாய உத்தரவு மூலம் கிராமங்களுக்கு அனுப்பிவிடலாம். ஆனால், கிராம மக்கள் அனுபவம் வாய்ந்த நாடி வைத்தியரைத்தான் நாடிப் போவார்கள். ஈ.எஸ்.ஐ. ஆஸ்பத்திரி இருக்கிறதே... அங்கேயே தொழிலாளர்கள் நம்பிக்கையோடு போகக் காணோமே!

● கோ.ராமதாஸன், ஆடுதுறை

? மத்திய அரசின் ஆறுமாத பொருளாதார ஆய்வறிக்கையின் பரிந்துரைகள் எப்படி...?

! பிரதமர் வாஜ்பாய், புதிதாக வாங்கிய பி.எம்.டபிள்யூ. காரைப் பயன்படுத்தப் போகிறார் என்பதைப் பார்க்க, நாட்டின் பொருளாதாரம் ரொம்ப ஜோர்தான், போங்க!

● வி.கஜேந்திரன், குத்தாலம்

? அதிகார ஆசை இல்லாத தலைவர்கள் நம் நாட்டுக்குத் தேவை என்று கலாம் வலியுறுத்தி யிருப்பது குறித்து...?

! ஹஹஹ்ஹ ஹா! ஹா! ஹா!

● கு.ப.இரகுநாதன், சென்னை

? அவினாசி கோயிலுக்குள் புகுந்து தீயிட்டுத் தற்கொலை செய்து கொண்ட நபரின் பின்னணி என்னவாக இருக்கும்...?

! மூட்டை மூட்டையாக மூட நம்பிக்கைகளைச் சுமந்து, பகுத்தறிவு பூஜ்யமாக உள்ள பின்னணியாகத்தான் இருக்கும்.

● டி. காமாட்சி, மயிலாடுதுறை

? அழுக்கு ஷூ-ஸாக்ஸ் எடுத்துச் சென்றதால், ஹர்பஜனுக்கும் சேவக்குக்கும் தலா நூறு டாலர் அபராதம் விதித்தது பற்றி..?

! இவர்கள் அபராதம் செலுத்தி அவமானப்பட்டது ஒரு பக்கம் கிடக்கட்டும்... நியூசிலாந்து அரசும் அதிகாரிகளும், 'சுத்தம் சுகாதாரம் தரும்' என்பதில் எவ்வளவு கண்டிப்பாக இருக்கிறார்கள் என்பது நமக்கும் பாடம். நாம்தான் கற்றுக் கொள்ள மறுக்கிறோம்!

● அ. சின்னசாமி, அம்மாபேட்டை ★

? அரசுத் துறையில் நஷ்டம் என்று தெரிந்தே தனியார் வாங்குவது ஏன்...?

! சில்லறை கொட்டக்கூடிய தொழில் வியாபாரம் கூட, அரசு ஏற்று நடத்தினால் ஓட்டைச் சட்டிதான் மிஞ்சும் என்பது ஊரறிந்த ரகசியமாக இருப்பதால்.

● சு.நா.இராஜேஸ்வரன், மொரட்டுப் பாளையம்

? இன்றைய சினிமா பாடல் வரிகளின் தரம் எங்கே போய்க் கொண்டிருக்கிறது?

! 'பதினெட்டு வயசில் என்ன பிடிக்கும்?' என்று ஒரு பாடல், பட்டி - தொட்டியெல்லாம் அலறிக் கொண்டிருக்கிறது. ஆனால், ஜெயா டி.வி.யில் பாடலை ஒளிபரப்பி, பாடல் வரிகளையும் தெள்ளத் தெளிவாக அச்சுக்கோத்துத் திரையில் காட்டி 'தமிழ்த் தொண்டாற்றிய' போதுதான் பாடல் வரிகளின் நீலம் அதிர வைத்தது!

● பி.ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி

? இந்திய கிரிக்கெட் அணி உள்நாட்டில் விளையாடுவதற்கும் வெளிநாட்டில் விளையாடுவதற்கும் என்ன வேறுபாடுங்க...?

! ஃபாரின் போனால் பிட்சைப் பதப்படுத்த முடியாதுங்க!

● ஒய்.எஸ்.ப்ரீதா, சென்னை - 12

? தங்களுக்குப் பிடித்தவர் நடிகர் சேரனா? டைரக்டர் சேரனா...?

! முன்னால் நின்றால் ஜொலிப்புதான்! ஆனால், காமெராவுக்குப் பின்னால் நின்றால் பிறரை ஜொலிக்க வைப்பாரே... அதனால் (காமெராவுக்



• புதிதல்ல...

குப்) பின்னால் உள்ள சேரன்தான் நம்ப சாய்ஸ்!

**● செ.ரா.ரவி, ஒட்டன்சத்திரம்**

**? டாப் டென் வாசகர்களைக் கூறுங்களேன்...?**

! இந்த பதிலைப் படித்துவிட்டு, சர்குலேஷன் லைப்ரரியைப் புறக்கணித்து, கல்கி சந்தா கட்டுகிற முதல் பத்து வாசகர்கள்.

**● எஸ்.பாலச்சந்தர், திருவாரூர்**

**? பெயருடன் ஜாதியைப் போட்டுக் கொள்பவர்களும் ஊனமுற்றவர்கள்தான் என கமலஹாசன் துணிச்சலாகக் கூறியிருக்கிறாரே?**

! இதுக்கு என்னங்க துணிச்சல் தேவை...? அவர் என்ன இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்திலா இருக்கிறாரு...?

**● எஸ். முரளி, குறிஞ்சிப்பாடி ❒**

**? ஆரம்ப சுகாதார நிலைய டாக்டர்களுக்கு அபார்ஷன் பயிற்சி அளிக்கப் போகிறார்களாமே...?**

! விபரீதம். அதோடு, அபார்ஷனைத் தூண்டும் மாத்திரைகளை குக. திட்டத்தின் கீழ் விநியோகிக்கும் திட்டமும் இருக்கிறது. உருவாகிய பின் கருவைக் கலைப்பது குடும்பக் கட்டுப்பாடு இல்லை; சிசுக் கொலை! பெண்களின் உடல், மனம் - இரண்டுமே சொல்லொணா பாதிப்புக்கு உள்ளாகும்.

**● ஆர்.கர்ணன், தனக்கர்குளம்**

**? அக்கால மந்திரிகள் - இக்கால அமைச்சர்கள்... ஒப்பிடுக.**

! அக்காலம் - மந்திரி... இக்காலம் எந்திரி!

★ ரூ.50 பரிசு பெறுபவர் : ஆ.சின்னசாமி, தலைவர் நூலக வாசகர் வட்டம், 18, தியாகி நடேசன் தெரு - ஒன்று, அம்மாப்பேட்டை, சேலம் - 636 003.

❒ ரூ.100 பரிசு பெறுபவர் : எஸ்.முரளி, 41/10எ, ரெட்டியார் காலனி, குறிஞ்சிப்பாடி - 607 302.



● அழக்கும்...

● ...அபாரதமும்!



• படத்தில் - நந்தாவுடன், ரேகா

# மீண்டுமொரு ரேகா!

கோடம்பாக்கத்திலிருக்கும் அந்த நவீன அடுக்குமாடிக் கட்டடத்தில் 'புன்னகை பூவே' ஷூட்டிங்.

பார்வையில் குறுகுறுப்பும் நிறைய புன்னகையுமாய் அமர்ந்திருந்தார் கதாநாயகி. ஏற்கெனவே இரண்டு மூன்று ரேகாக்கள் திறமை காட்டிய தமிழ் சினிமாவில் மீண்டுமொரு ரேகா!

கேமராவின் முன்னால், நடிகை காவேரியிடம் முறைத்துக் கொண்டு, வந்தமர்ந்தவரிடம் பேச்சுக் கொடுத்தோம்.

"தெலுங்கு, கன்னடத்துல எனக்கு அறிமுகம் அவசியமில்லை. தெலுங்குல பண்ணிய முதல் படமும், கன்னடத்துல நடித்த முதல் படமும் நல்ல ஹிட்! இப்ப பண்ற 'புன்னகை பூவே'யும் நிச்சயம் ஹிட் ஆகும். அப்புறம் இரண்டு பக்கமும் செம பிஸி. இருந்தாலும் தமிழ் சினிமா மேல எனக்கொரு கண் இருந்தது. இங்க வந்துதான் நிறையப் பேர் சாதிச்சிருக்காங்க. திறமை உள்ளவங்களை தமிழ் ரசிகர்கள் கைவிட மாட்டாங்கன்னு நம்பிக்கை இருக்கு. அப்படி யோசிச்சிட்டிருக்கும் போதுதான், திடீர்னு தாணு சார் ஆபிஸிலிருந்து ஃபோன்.

"பழம் நழுவிப் பாலில் விழுந்த மாதிரி சந்தோஷம். கதை கேட்டேன். ரொம்பப் பிடிச்சிருந்தது. பதினான்கு வருடமா ஒண்ணா பழகுற தோழிகளுக்குள்ள ஏற்படற சின்னச் சின்ன பிரச்னைகள், என்னென்ன விளைவுகளை ஏற்படுத்தறதுங்கறதுதான் கதை. நடிக்கறதுக்கு நல்ல 'ஸ்கோப்' உள்ள ரோல். எனக்குத் தோழியா நடிகை காவேரி. ரெண்டு பேருமே, போட்டி போட்டுக் கொண்டு நடிச்சிருக்கோம்.

"டைரக்டர் சபா சார் ரொம்ப வித்யாசமான காட்சியமைப்பில் கலக்கியிருக்கார். சமீபத்துல படத்துக்காக மலேஷியா, சிங்கப்பூரெல்லாம் போய்ட்டு வந்தோம். ரொம்ப இன்வால்வ்மெண்டோட நான் நடிச்சிருக்கேன். என் திறமையை வெளிப்படுத்த இந்தப் படம் நிச்சயம் உதவும்னு நினைக்கிறேன்" என்கிற ரேகாவுக்கு ஏகப்பட்ட மொழிகள் தெரியுமாம்.

"நடிகை ஜோதிகா எனக்கு ஃப்ரெண்ட். அவளோட துறுதுறுப்பும், சிம்ரனோட பெர்பாமன்ஸும் எனக்கு ரொம்பப் பிடிக்கும். இந்த இரண்டு பேரோட கலவையா நடிக்கணும்னு நினைக்கிறேன்" என்கிற ரேகா, பூ மாதிரிதான் புன்னகைக்கிறார்.

- அப்பு

கர்நாடக அரசின் கௌரவம்

நாகப்பா

தமிழக அரசின் கௌரவம்



கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா
- பாரதியார்.

# நாகப்பா மரணம் – யார் பொறுப்பு?

நாகப்பாவின் மரணம் கர்நாடக அரசுக்கும் காவல் துறைக்கும் மட்டும்தான் தலை குனிவு என்று தட்டிக்கழித்துவிட முடியாது. அவர்களுடன் ஒத்துழைக்க மறுத்த தமிழக அரசுக்கும் காவல் துறைக்கும் கூட இந் நிகழ்வினால் சமமான அளவில் அவமானம் ஏற்பட்டிருக்கிறது.

வீரப்பன் நிபந்தனைப்படி, கொளத்தூர் மணியைத் தூது அனுப்புவதில் சட்டச் சிக்கல் எழுந்ததும், நீதிமன்றம் அனுமதி மறுத்ததும் கர்நாடக அரசாங்கத்தை நெருக்கடியில் ஆழ்த்தியது உண்மையே.

ஆனால், கொளத்தூர் மணியை அனுப்பு மாறு வீரப்பன் கேட்டது 106 நாள் நாடகத்தின் இறுதிக் கட்டத்தில்தான். மூன்று மாத காலத்துக்குக் கர்நாடக அரசும் தமிழக அரசும் பிரச்னையை அலட்சியப்படுத்தி, ஆறப்போட்டு விட்டன. போதாக்குறைக்கு, இறுதிக் கட்



2002 டிசம்பர் 22
சித்ரபானு மார்கழி 7
மலர் : 61
இதழ் : 21




டத்தில், 'கொளத்தூர் மணி தமிழக எல்லையைத் தொட்டால் கைது செய்யப்படுவாராக்கும்!' என்று தமிழக அரசின் சார்பில் மிரட்டல் வேறு எழுந்தது!

ராஜ்குமார் கடத்தப்பட்டபோது, அவர் உயிருக்கு ஆபத்து வந்தால், தமிழக – கர்நாடக மாநிலங்களின் அமைதியே குலைந்து போகும் என்கிற அபாயம் இருந்தது. ஆகவே இரு அரசுகளும் துடிப்பும் சுறுசுறுப்பும் காட்டின. நாகப்பா விஷயத்தில் அத்தகைய பெரும் அபாயம் இருக்கவில்லையென்பதால், இரு அரசுகளுமே மன்னிக்க முடியாத அலட்சியப்போக்கை மேற்கொண்டன. இதன் மூலம் இரு அரசுகளும், வெவ்வேறு மனித உயிர்களுக்கு வெவ்வேறு மதிப்புப் போட்டிருப்பதைப் புரிந்து கொள்ள முடிகிறது. இது கேவலம் அல்லவா!

போதாக் குறைக்கு, காவிரிப் பிரச்னையினால் எழுந்த கசப்பும் விரோதமும் இரு மாநிலங்களிடையேயான உறவையும் ஒத்துழைப்பையும் பாதித்தது.

கொளத்தூர் மணியைத் தூது அனுப்ப முடியாத நிலையில், அதற்குப் பதிலாக வேறு நிபந்தனைகளுக்கு உட்படுகிறோம், என்று வீரப்பனுக்கு உணர்த்தியிருந்தால் நாகப்பாவைக் காப்பாற்றியிருக்க முடியும்.

ஆனால் வேறு தூதர்களை அனுப்ப முடியாதபடிக்கு, இரு அரசுகளும் ஏற்கெனவே சென்ற தூதர்களிடம் நடந்து கொண்ட விதம் தடுத்துவிட்டது. 'காரியம் ஆகிறவரை காலைப்பிடி, அப்புறம் மென்னியைப்பிடி' என்றால் யார் ஒத்துழைக்க முன் வருவார்கள்?

நாகப்பா, பிணைக் கைதியாக ஒரு முரட்டுக் கொலைகாரனிடம் அகப்பட்டுக் கொண்டிருக்க, ஏதேனும் ஒரு விலை கொடுக்காமல் அவரை விடுவிக்க முடியாது என்ற உண்மையைச் சந்திக்க இரு அரசுகளும் மறுத்துவிட்டன.

நாகப்பாவின் உயிர் ராஜ்குமாருடையதைக் காட்டிலும் எவ்வகையில் தாழ்ந்தது? அல்லது உயர்ந்தது?

வீரப்பன் ஒரு சமூக விரோதி. அரசியல் மெத்தனமும் நிர்வாகச் சீர்கேடுகளும் அவனை




பலம் மிக்கவனாக வளர அனுமதித்துவிட்டன. அடுத்தடுத்த அரசுகள் செய்த தப்புக்கு, இன்று விலை கொடுத்திருப்பது நாகப்பாவின் குடும்பம். இது எந்த வகையிலும் நியாயப்படுத்த முடியாத கோரம்.

இன்று நாகப்பாவுக்கும் அவர் குடும்பத்துக்கும் நடந்திருக்கும் பயங்கரம், நாளை வேறு யாருக்கு வேண்டுமானாலும் நடக்கலாம். அரசு பாதுகாப்பு அளிக்கும் என்றோ, காப்பாற்ற முன்வரும் என்றோ எந்த அடிப்படையில் நாம் நம்பிக்கை கொள்வது?

'வீரப்பனைப் பிடித்தே தீருவோம்' என்று தீவிரமாக இப்போது பேசுவது நகைப்புக்கிடமாய்த் தான் இருக்கிறது. நாகப்பா இறந்துபோன மறுதினமே, 'தமிழக சிறப்புக் காவல் படை தனது தேடல் முயற்சியைத் தொடரும்' என்று முதல்வர் ஜெயலலிதா அறிவித்தது, வேதனையையும் வயிற்றெரிச்சலையும்தான் எழுப்பியிருக்கிறது.

வீரப்பன் வேட்டை எத்தனை காலமாக நடக்கிறது! எவ்வளவு வீர சபதங்களைக் கேட்டாயிற்று!

ராஜ்குமார் விடுதலையான உடனே இதே சூளுரையைத்தானே இரு மாநில போலீஸும் செய்தனர்? அதன் பிறகு, நாகப்பா மீண்டும் பிணைக்கைதியாகும் வரை, பலகாலம் தேடல் வேட்டையில் தோல்விதானே கண்டார்கள்? இப்போது மறுபடி அதேபோல் மார்தட்டுகிறார்கள்!

காட்டில் சல்லடை போட்டுத் தேடி வீரப்பனைப் பிடிப்பது அல்லது கொல்வது சுலபமான காரியம் இல்லைதான். ஆனால், இரு அரசுகளுமே இதுவரையில் இதற்குப் போதுமான அளவு முயற்சி மேற்கொள்ளவில்லை என்பது ஊரறிந்த உண்மை.

இனியும் தாமதியாமல் அம்முயற்சியை மேற்கொள்ளட்டும். தேடுதல் வேட்டையில் வீரப்பன் கொல்லப்பட்டால், அது கூட ஏற்கக் கூடிய துர்ச்சம்பவமாக இருக்கும். ஆனால், திரும்பவும் ஓர் அப்பாவி மனிதர் வீரப்பனின் பிணைக்கைதியாவாரேயானால், தமிழக – கர்நாடக முதல்வர்கள் தலை நிமிரவே முடியாது! ○




# கேசட் விற்க மந்திரம் இருக்கா?

நடனக் கலைஞர் ஸ்ரீநிதி சிதம்பரத்தின், "க்ரியா கிரியேட்டிவ் சவுண்ட்' இசை நிறுவனம் "தனவிருத்தி" என்ற ஒலிநாடாவை சமீபத்தில் வெளியிட்டிருக்கிறது.

தொழிலில் லாபம் செழிக்க, கடன் தொல்லை தீர, எதிரிகள் ஒழிய, வியாபாரத்தில் திருட்டைத் தடுக்க, என்று பலவித நோக்கங்களுக்கான தெய்வீகப் பாடல்களும் மந்திரங்களும், இவற்றில் இடம் பெற்றுள்ளதாக அறிவிக்கிறது ஒலிநாடா உறை!

இந்தியத் தொன்மையையும் பண்பாட்டையும் இளம் உள்ளங்களில் விதைப்பதற்காக (இந்த வாசகம் முதல் ஒலிநாடாவின் உறையில் இடம் பெற்றிருந்தது) தமது நிறுவனத்தைத் தொடங்கிய ஸ்ரீநிதியின் நோக்கத்தில் ஏன் இந்த மாற்றம்? ஸ்ரீநிதியிடமே கேட்டோம்.

இந்தக் கேசட்டை ஓடவிட்டாலே, அடுத்த நாள் பணம் கொட்டும் அல்லது கடன் தீர்ந்துவிடும், அல்லது எதிரிகள் ஒழிந்து விடுவார்கள் என்று அர்த்தமல்ல. ஆனால் இந்தப் பாடல்களுக்கே உரிய ஒரு சக்தி நிச்சயம் இருக்குமென்றே நம்புகிறோம். தவிர, இவையெல்லாம் நம்பிக்கையைப் பொருத்த விஷயங்கள்.

"ஒலிநாடாக்களை வெளியிடுவது என்று தீர்மானிக்கும் போதே, அதில் பொருளாதாரத்துக்கும் முக்கியப் பங்கு உண்டு. நிறுவனத்தைத் தொடங்கியபோதே கர்நாடக இசை, தமிழ் பக்திப்பாடல்கள், இந்திய கலாசாரத்தைக் குழந்தைகளிடையே வளர்க்கும் விதமான முயற்சிகள் என்று எல்லா விதங்களிலும் எங்கள் எல்லைகளைப் பரப்ப வேண்டும் என்றுதான் எண்ணியிருந்தேன். சீக்கிரமே மீதமுள்ள பல புதிய எல்லைகளைத் தொட்டு விடுவோம் என்ற நம்பிக்கை இருக்கிறது.

தன ஆகர்ஷண மந்திரங்களை வெளியிடுவதால் எங்கள் நோக்கம் திசை திரும்பி நீர்த்துவிட்டதாக ஒப்புக் கொள்ள மாட்டேன்..!"

"கேசட் அதிகம் விற்க ஏதாவது பாடலோ மந்திரமோ இருக்கிறதா?'' என்று கேட்டோம். அழகாகப் புன்னகைத்தார் ஸ்ரீநிதி. இருக்கிறதோ என்னவோ!

— ஜி.எஸ்.எஸ்.










• அப்பாவுடன் மகன்

# அருண் சரண்யா

## புக் பேங்க்

# இப்போது நிற்கும் மீண்டும் பொழியும்!

**கா**லத்தைக் கடந்து நிற்கும் பாடல்களைப் பாடியவர் சீர்காழி கோவிந்தராஜன்.

1988ல் மறைந்த, அவரது சரிதை சற்றுத் தாமதமாகவே வெளி வந்திருக்கிறது. 'மகன் தந்தைக்காற்றும் உதவி'யாக இதை எழுதி முடித்துள்ளார் சிவசிதம்பரம். இருவரும் பாடகர்கள் என்பதோடு, டாக்டர்களும் கூட (தந்தை இசைக்காகவும் மகன் மருத்துவத்துக்காகவும் பெற்ற பட்டங்கள்).

சீர்காழியின் பாடல் ஆர்வம் வெளிப்பட முக்கியக் காரணம் - பேய்கள்! அவரது குடும்பம் குடியிருந்த தெருவிலிருந்து கடைத் தெருவுக்குப் போகும்போது, ஆறுமுக முதலியார் என்பவரின் வீட்டைக் கடந்து செல்ல வேண்டும். அந்த வீட்டில் ஒருவர் தற்கொலை செய்து கொண்டு இறந்துவிட்டதால் அங்கே, பேய் உலாவுவதாக ஒரு வதந்தி. மாலை வேளைகளில் அந்தப் பக்கம் போக வேண்டிய அவசியம் சிறுவன் சீர்காழிக்கு ஏற்பட்டது. பயத்தை மறைத்துக் கொள்ள உரத்தகுரலில் பாடிக் கொண்டே வீட்டைக் கடந்து செல்வாராம். வாழ்க பேய்கள்!

சீர்காழியின் சில சுவாரசியமான தனித் தன்மைகள் சிறு சிறு நிகழ்ச்சிகள் மூலம் புலப்படுகின்றன. திருவிளையாடல் படத்தில் இடம் பெற்ற "ஒரு நாள் போதுமா?" பாடலை இவர்தான் பாடுவதாக இருந்தாராம். ஆனால் அது போட்டியில் தோல்வியுறும் பாடல் என அறிந்ததும், அதனைப் பாட மறுத்திருக்கிறார். (இதில் "பாட்டும் நானே" என்ற வெற்றி பெறும் பாடலைப் பாடிய டி.எம்.எஸ். "அகத்தியர்" படத்தில் சீர்காழியோடு சேர்ந்து பாடிய "வென்றிடுவேன்" பாடலில் (கதைப்படி) தோற்க ஒப்புக் கொண்டது, நூலில் காணப்படாத வேறொரு சுவையான விவரம்!).

நூலில் நிறையப் புகைப்படங்கள் இடம் பெற்றுள்ளன (சுமார் ஐம்பது பக்கங்கள்). அவற்றில் ஒன்றில், சுமார் நாற்பது விருது மெடல்கள் குத்தப்பட்ட உடையுடன் சீர்காழி காட்சி தருவது அவருக்குள் இருந்த குழந்தைத்தனத்தை வெளிக்காட்டுகிறது.

**ப**னி மூட்டத்தினால் திருவண்ணாமலையில் சிறிது நேரம் கார்த்திகை தீபம் தெரியாதிருந்தபோது, சீர்காழி உருக்கமாகப் பாடியதும், பனி விலகி தீபம் தெரிந்ததாம். திருவாளப்புத்தூர் என்ற ஊர் மழையின்றி வரண்டு கிடக்க, சீர்காழி, விநாயகர் கிருதி பாடியவுடன் பெருமழை பெய்ததாம். கொழும்பு நகர் கச்சேரியின்போது 'இப்போது மழை நிற்கும். என் கச்சேரி முடிந்ததும் மீண்டும் மழை பொழியும்' என்று அவர் கூற அப்படியே நடந்ததாம். இதுபோன்ற செய்திகளை ஏற்க மறுப்பவர்கள்கூட 'அப்படியெல்லாம் ஒருவரது குரல்வளத்தால் இயற்கையை மாற்ற முடியுமென்றால், அது சீர்காழி போன்ற ஒரு சிலரால் மட்டுமே முடியும்' என்று முடிவுக்கு வருவார்கள்!

ஒரு வார இதழ் பேட்டியில் "என் அப்பா பாடல்கள் பாடிக் கிடைத்த வருமானத்தில் இந்த வீட்டைக் கட்டினார். என் பாடலால் கிடைக்கும் வருமானத்தில் அதற்கு வெள்ளையடிக்கக் கூட முடியாது போலிருக்கிறதே" என்று ஆதங்கப்பட்டிருந்தார் டாக்டர் சிவ சிதம்பரம். அதனாலென்ன, சீர்காழி கோவிந்தராஜனின் ரசிகர்களின் மனத்தில், இந்த நூலின் மூலம் அழகான நினைவு மண்டபத்தைக் கட்டி முடித்திருக்கிறாரே!

***(மணிவாசகர் பதிப்பகம், 32, சிங்கர் தெரு, பாரிமுனை, சென்னை - 600 108. விலை ரூ.50)***

glow with gold

# 1928 முதல் உங்கள் மகிழ்ச்சியில் பங்குகொள்ளும்

தங்கம், வெள்ளி, வைரம், பிளாட்டினம் நகைகள்




2003 - PLATINUM JUBILEE YEAR




## ANS JEWELRY
## ANS ஜுவல்லரி

SALEM

ANS ஜுவல்லரி
284 ஓமலூர் மெயின் ரோடு
ஸ்வர்ணபுரி, சேலம் 636004
Tel (0427) 2440703, 2440704
Fax (0247) 2442946

கும்பகோணம் ஜுவல்லர்ஸ்
184 கடை வீதி
சேலம் 636001
Tel (0427) 2264221, 2265180
Fax (0247) 2267516

World Gold Council

ANS : சேலத்தில் முதன்மையாக வழங்கும்




BIS (ISI) அங்கீகாரம் பெற்ற ஹால்மார்க்டு நகை மாளிகை



# காதல் பிசாசே 8

*இடது கால் பெருவிரலில்*
*முள் தைத்ததற்காக*
*உயிர் கசிந்த கண்களில்*
*தெரிகிறதுன்*
*பித்த வெடிப்புப் பாதம்*
*அந்த*
*இடைவெளிக்குள்ளாவது*
*என்னை*
*நிரப்பிக் கொள்ளக் கூடாதா?*

அப்பாவின் சிநேகிதர்கள் அப்பழுக்கற்றவர்கள். அப்பாவைப் போலவே எளிமையும் பண்பும் இயல்பாகக் கொண்டவர்கள். அப்பாவோடுதான் எனது முதல் வாக்குவாதம் தொடங்கியது என ஞாபகம். கடவுளில்லை என்கிற கம்யூனிஸ்ட்காரர் அவர். நெற்றியில் திருநீரோடு அம்மாவின் முந்தியைச் சுற்றிக் கிடந்தவன் நான். எவ்வளவோ புத்தக மேற்கோள்கள் அவர் சொல்லக்கேட்டிருக்கிறேன். அப்படியானதொரு சூழலில், என்னை ஒரு கூட்டத்திற்கு அழைத்துப் போனார். தெரு முனைக் கூட்டம்தான். பிரசாரப் பாடல்களை யாரோ ஒரு கருத்த மனிதர் பாடத் தொடங்கினார்.

மேடைகளால் இந்த நாட்டின் அடிமைத் தனம் விரட்டப்பட்டிருக்கிறது. இந்த தேசத்தில் மறுமலர்ச்சி உருவாக்கப்பட்டிருக்கிறது. இன்றைய மேடைகள் அப்படியா? என்பதை நீங்களே அறிவீர்.

*அமுத மழையில்*
*என் கவிதை நனைகிறது*
*நிலவே கொஞ்சம் வழிவிடு*

– என்கிற ஷாஜகானின் அந்தப் பாடலை உயிர் கசியப் பாடியவர்,

*இளைய மேகங்கள்*
*வாழ்வில் கூடுகிற*
*அதிசயமான நேரமிது*
*ஒரு இதயம் நழுவி*
*மறு இதயம் நுழைகிற*
*புது சுகம் காணும் காலமிது*

– என்றதும் நான் மட்டும் கைதட்ட, பிறகு மொத்தத் தெருவும் கைதட்ட, அப்பா மெல்ல என்னைப் பார்த்து புன்னகைத்தார். அந்தப் புன்னகை என்னை மெச்சிய முதல் தரிசனம்.

நரம்பு புடைக்கிற எத்தனையோ பாடல்களுக்கு மத்தியில், கரிசல் கிருஷ்ணசாமி மெட்டமைத்த இந்தப் பாடலை எத்தனைமுறை வேண்டுமானாலும் கேட்கலாம். இதயம் நழுவி மறு இதயம் நுழைதல், எவ்வளவு பெரிய சொல்லாடல்!

வெகுஜன ரசனை என்பது மக்களைக் கூத்தாட வைப்பது



## யுகபாரதி

மட்டுமல்ல. 'தெய்வாம்சம் பொருந்திய' என்பார்களே, அது இயல்பாக இருக்க வேண்டும். அந்தக் காலத்துப் பாடல்கள் என்று பெருமையோடு பேசுகிற பலரும், மேடைகளில் பாடப்படுகிற இந்தப் பாடல்களைச் சிலாகிப்பதில்லை என்பது வருத்தம்தான். வைய்யம்பட்டி முத்துசாமி, கே.ஏ. குணசேகரன், நவகவி, தணிகைச் செல்வன், புதுகை வெற்றி நிலவன், பரிணாமன், பிரளயன் இன்னும் இன்னும், பலரின் பாடல்கள் மேடைகளில் மட்டுமே பாடப் படுகின்றன. இதயங்களை வருடிய போதும், நமது இல்லங்கள் கேட்கக் கூடியதாக அவை எப்போது மாறுமோ?

காத்தெல்லாம் செம்பகமாம்
கனவெல்லாம் ஓம்மொகமாம்
ஆத்தி நீயா ஒரு வார்த்தை
ஆதரவா பேசி புட்டா
ஆமணக்கு இனிச்சிருமா
அலுவாதான் கசிந்திருமா?

ஒவ்வொரு பாடகனுக்குள்ளும் ஒரு காதலன் இருக்கிறான். ஓங்கிக் குரலெடுத்து உச்சஸ்தாயியில் பாடினாலும், அவன் உள்ளே அமைதியாக ஒரு காதலி கண்மூடித் தூங்கிக் கொண்டிருக்கிறாள். ரமணனின் பாடலிலும், அந்தக் காதலியைக் காண முடிகிறது. காதலி உறங்கும்போது, அருகில் அமர்ந்து கண்களால் விசிறிவிடுகிற பாக்கியம், எத்தனை பேருக்குக் கிடைக்கும்?

நாட்டுப்புற, பாடல்கள் மேடைகளால் தான் பிரபலமாயின. எனினும், அவை பிரபலமானதற்கு மேடைகள் மட்டுமே காரணமில்லை. நமது மரபான இசை உணர்வுகள், ரத்த நாளங்களை உசுப்பிவிட; காட்சி ஊடகங்கள் அவற்றின் செல்வாக்கைக் கைப்பற்றிக் கொண்டன. புஷ்பவனம் குப்புசாமி, விஜயலக்ஷ்மி நவநீதகிருஷ்ணன், கோட்டைச்சாமி – ஆறுமுகம், பரவை முனியம்மா, கொல்லங்குடி கருப்பாயி, தேனிசை செல்லப்பா ஆகியோர் எமது பாட்டுப் பரம்பரையின் கூட்டுப் புறாக்கள். இவர்கள் எல்லோரிடமும் காதல் பாடல்களை, காதலின் மென்மையோடு கேட்க முடிவதற்கு குரலினிமை மட்டுமே காரணமில்லை. காதலின் தட்ப வெப்பத்தை, சமூகத்தோடு கலந்து தருவதுதான் விசேஷம். சமூகத்தில் காதல் எப்படியிருக்கிறது என்பதற்கும், இவர்களது பல பாடல்கள்

மிகச்சிறந்த உதாரணங்கள். ரோட்டோரம் வீட்டுக்காரி; ரோசாப்பூ ரவிக்கைக்காரி என்கிற கே.ஏ.ஜி.யின் பாட்டில் காதல் மனைவியின் தளும்பல்களும், குடும்ப உறவுகளின் விசும்பல்களும் பதிவு செய்யப்பட்டிருக்கின் றன.

*வாழ்வான வாழ்வெனக்கு*
*வந்ததென்று நினைத்திருந்தேன்*
*பாழான வாழ்விதென்று*
*பார்த்தவர்கள் கூறவில்லை*
*தேனாகப் பேசியதும்*
*சிரித்து விளையாடியதும்*
*பாழாகப் போகுமென்று*
*பார்த்தவர்கள் கூறவில்லை.*

இந்தப் பாடல் வரிகளை ஏற்கெனவே ஒரு திரைப்படத்தில் கேட்டிருப்பீர்கள். காதலன் காதலிக்காக மருகிப் பாடுவதாக வருகிறது. உண்மையில், பாவலர் வரதராஜனின் காதல் மனசுக்குக் கிடைக்காமல் போன அந்தப் பற வையே என் கண்களில் பறக்கிறது. சொற்கள் உறுத்தாமல், செட்டுசெட்டாக உணர்வுகளை அடுக்குகிற வித்தை; சோகத்தைச் சொல்கிற போதும், நழுவி நழுவி அழகு மிளிர்கிற தமிழ் _ மேடைப் பாடல்கள் காதலின் மேன்மைக் காகவே உணரப்படுகின்றன போல;

*தண்ணி எடுக்கப் போனாலும்*
*தளும்பி குடத்தில் வாராண்டி*
*கண்ணை மூடிப் படுத்தாலும் _ மனச்*
*சன்னலைத் திறந்து வாராண்டி.*

குடம் தூக்கிப் போகிற வளின் தண்ணீரில் தளும்பு கிறவன், மனச் சன்னலைத் திறந்து கொண்டு எட்டிப் பார்க்கிறான். காட்டுமரக் கிளையிலே... என்கிற தொகுப்பில் வையம் பட்டி முத்துசாமி வடித்துத் தந் திருக்கிறார்.

அப்பாவோடு செல்லப் பிணக்கு கொண்டு பல நாள் பேசாமல் இருக்கும் போது, எங்கேயாவது இந்தப் பாடல்களைக் கேட்க நேர்ந்தால் உடனே அழுதுவிட வேண்டும் போல் தோன்றுகிறது. சமூகத்தைத் தனது தோள் களின் சிவப்புத் துண்டு களில் தூக்கிச் சுமக்கிற கோடானுகோடி தோழர்கள், காதலுக்காக இரத்தம் சிந்தியிருக்கிறார்கள். காதல்தான் சாதியை, மதத்தைத் தகர்க்க வல்லதென்று நம்பிக்கை நடவு செய்திருக்கிறார்கள். அறுவடைக்கு முன்பே காதலின் மகசூல் கணக்கைக் கணித்திருக்கிறார்கள்.

*அழுது கரைய*
*ஆசை என்றேன் அவளிடம்*

*ஆகிய காரணங்கள்*
*அனைத்தையும் சொன்னேன்*
*அவள் அழுதாள்*

*அதில் என் சிரிப்பைக்*
*கழுவிக் கொண்டேன்.*

அவளின் அழுகையில் சிரிப்பைக் கழுவிக் கொள்வதெனில், அந்தச் சிரிப்பில் எத்தனை வேதனைக் கறைகள் படிந்திருக்கும். அழுது கரைய ஆசை என்றதும் அழுது விடுகிறாளே, அவள் எவ்வளவு இணக்கமானவள். ராமலிங் கத்தின் சிரிப்பு, காதலியின் கண்ணீரில் கழுவப் பட்டதென்றால், அது உண்மை ததும்பும் சிரிப்பு. அந்தச் சிரிப்பை நேரில் கண்டவர்கள் கடிதம் எழுதினால் சந்தோஷம்.

மேடைகளில் பாடல்களைப் பிரசாரத்திற் குப் பயன்படுத்துவது இயக்கங்களின் தேவை. அங்கேயும் காதல் ஓர் இயக்கமாக உருவெடுத் திருப்பது சமூகத்தின் தேவை. காதலைப் பிர சாரம் செய்து வளர்க்க முடியாது. ஆனால், பிரசாரத்தின் மூலம் காதல் விதைகளை நட முடியும். உருதுக் கவிதை களும், ஓரியக் கவிதை களும் இதைத்தான் சொல்கின்றன. ஆகாய வீதியில் அழகு நடை பயிலும் பொற்சித்திரம்; அவள் கொலுசிலிருந்து தப்பியவைதாம் நட் சத்திரம்: அமுத மழை யில் என் கவிதை நனை கிறது என பாடத் தொடங்குகிறான் தம்பி. அவனைப் பார்த்ததும் அப்பாவிடமிருந்து ஒரு சின்ன புன்முறுவல் பூக் கிறது. அவன் ரசனைக் கும் கிடைக்கிற முதல் அங்கீகாரம் இது தான்.

(அடுத்த இதழில்)

"Thiefன்னா திருடன் தானே...?"

''மாமூல் மாமாவை அப்படி யெல்லாம் சொல்லக் கூடாதுடா செல்லம்...! அப்பா கோவிச்சுப்பார்!''

— ஜி. வினோத்



* ஐஸ்வர்யா



* ராம்கோபால் வர்மா

ஆசிரியர் தந்த மேட்டரை மேய்ந்து கொண்டிருந்தபோது "ஒரு வெள்ளை மழை இங்கு பொழிகின்றது" என்று பாடியபடியே ஜாவி மூடில் வந்தமர்ந்தது ஊர்க்குருவி.

"நீயா? நீ எங்க இங்க?" என்றதும் உடலைச் சிலுப்பி முறைத்தது. சிலுப்பிய இறக்கையிலிருந்து ஜில்லென்று தண்ணீர் தெறிக்க, "என்ன இவ்ளோ தண்ணி, எங்க குளிச்ச?" என்றோம்.

"கிண்டலா? இந்தப் பனியில நீங்களே இந்த ஆட்டம் ஆடறீங்களே, அமெரிக்காவுல சரியான பனிப்புயல்! ரோடு வீடெல்லாம் ஆறேழு இன்ச்சுக்கு ஐஸ் மூடி, வெள்ளைப் பிரதேசமா ஆகிப் போச்சு.



ஏகப்பட்ட மரங்கள் ஒண்ணோடு ஒண்ணு சிக்கி, விழுந்ததுல நிறைய ஆக்ஸிடென்ட். கரோலினாவுல 1.2 மில்லியன் மக்கள் கரண்ட் இல்லாம தவிச்சிட்டாங்க. அப்புறமென்ன, அசுரகதியில நிவாரண நடவடிக்கையில அவங்க இறங்க, விழுந்து புரண்டு எழுந்து வந்ததுலதான் இந்த ஜில்!"

"ஓ... அதான் வெள்ளை மழை பாட்டா?" சரி, என்ன வேர்ல்டு லெவல் நியூஸெல்லாம் சொல்றே?"

"பாலிவுட் நியூஸ் ரெண்டு மூணு இருக்கு. கேளு..."

"கேட்கறதுக்குத்தானே இருக்கேன், சொல்லு..."

"'தேவதாஸ்' படம் எக்குத்தப்பா ஓடித் தொலைச்சதால, கோடிகளைக் கொட்டிப் படமெடுக்கத் தொடங்கிட்டாங்க இந்தி இயக்குனர்களும், தயாரிப்பாளர்களும்!"

"அப்படியா?"

"ஆமாமா.. நம்ம ராம்கோபால் வர்மா இருக்கிறார்ல அவர், அறுபத்தைந்து கோடி ரூபா செலவுல ஒரு அரசியல் திரில்லர் படம் பண்ணப் போறாராம். அமிதாப்



# உதடசைத்தால் கேட்கும்!

ஹீரோ. ஷில்பா ஷெட்டி, அஜய்தேவ்கன் இவங்களோட, ஹாலிவுட் நடிகர்களையும் களமிறக்கப் போறாராம் வர்மா!"

"ஹாலிவுட் நடிகர்களையா?"

"ஆமா... இந்தப் படத் தயாரிப்புல முக்கியமான ரோலை பிரபலமான ஹாலிவுட் படத் தயாரிப்பு நிறுவனமான ட்வன்டித் செஞ்சுரி ஃபாக்ஸ் நிறுவனமில்ல பண்ணப் போகுது."

"அடடா.. மெல்ல மெல்ல பாலிவுட்டுக்குள்ள ஹாலிவுட் நுழையறதப் பார்த்தா சினிமாக்காரங்களுக்குக் கொண்டாட்டம்னு சொல்லு."

"நிச்சயமா. நம்ம ஐஸ்வர்யா ராய் கூட ஹாலி வுட் படத்துல நடிக்கப் போறாங்களே."

"அப்படியா?"

"சமீபத்துல ஒரு ஷோவுக்காக யு.எஸ். போன 'ஐஸ்'ஸை நிறைய படக் கம்பெனிங்க மொய்க்க ஆரம்பிச்சுட்டுதாம். உடனேயே கதை சொல்லி நடிக்கிறீங்களான்னு கேட்க, ஊருக்குப் போயி தகவல் சொல்றேன்னு வந்த ஐஸ், இப்ப ஓ.கே. சொல்லியாச்சாம். அடுத்த வருஷம் சர்வதேச நடிகையா இவரைப் பார்க்கலாம்."

"நல்ல முன்னேற்றம்தான்."

"முன்னேற்றம்... எலக்ட்ரானிக்ஸ்ல வந்திருக்கற முன்னேற்றத்தைக் கேட்டா ஷாக் ஆயிடுவீங்க."

"அப்படியென்ன கண்டுபிடிப்பு?"

"ஒரு செல்போனை வச்சக்கிட்டு, பஸ் ஸ்டாண்ட்ல, ஆபிஸ்கள்ல, தியேட்டர்கள்ல உங்க ஆளுங்க பண்ற ரவுசு தாங்க முடியுதா? அதான் இப்படிக் கண்டுபிடிச்சிருக்காங்க"

"எப்படி?"

"சப்தம் கொடுக்காம ஃபோன்ல உதட்டசைச்சா போதும், எதிர்முனையில இருக்கறவங்களுக்கு என்ன பேசறீங்கன்னே கேட்கும்"

"உதடசைச்சா கேக்குமா? நீ கூட இப்ப கதைவிட ஆரம்பிச்சிட்டியா?"

"இது கதையல்ல நிஜம்பா. ஃபோனோட மவுத் பீஸில் ஒரு சென்ஸார் இருக்கு. அது பக்கத்துல வாயசைச்சா போதும். சட்டுனு அந்த மின் சிக்னலை, இழுத்துக்கிட்டு, கருவியோட உள்ளே இருக்கும் ஸ்பீச் சின்தஸைஸர்'ங்கற பாகம் இதைப் பேச்சா மாற்றி எதிர்முனைக்குக்கொண்டு செல்லுமாம்."

"இது நல்லாயிருக்கே."

"போலீஸ் டிபார்ட்மெண்ட் காமெடி ஒண்ணு கேக்கறியா?"

"அதென்ன காமெடி?"

"செங்கல்பட்டு சரக உயர் போலீஸ் அதிகாரி ஒருத்தர், தனக்குக் கீழே உள்ள வில்வித்தைக்காரன் பெயர் கொண்ட அதிகாரியைத் திட்டித் தீர்த்தாராம். கடுப்பான வில்வித்தை அதிகாரி, ஜீப்பில் வீட்டுக்குக் கிளம்பியிருக்கிறார். டிரைவரிடம் ஏதோ சொல்லிவிட்டு இருக்கும்போது எதிர்ல, சற்றுமுன் திட்டிய உயர் போலீஸ் அதிகாரியின் கார், 'ஐயையோ, இந்த நேரத்துல வீட்ல என்னைப் பார்த்தா இன்னும் அதிகமா திட்டுவாரே'ன்னு பயந்து, பக்கத்து வீட்டுச் சுவரை ஏறிக் குதித்திருக்கிறார். வந்த கார் கிறீச்சிட்டு நிற்க, அதில் வேறொரு போலீஸ் அதிகாரி! "என்னய்யா ஒருத்தன் உன் முன்னாலேயே சுவர் ஏறிக் குதித்தான். நீ பாத்துட்டு நிற்கற, போய் புடிய்யா'' என்று டிரைவர் போலீஸிடம் வந்த அதிகாரி சொல்ல, அவருக்கு தர்ம சங்கடம். பிறகு விஷயத்தை விளக்கியதும் பயங்கரமாக அங்கேயே சிரித்துவிட்டாராம் வந்த போலீஸ் அதிகாரி. இந்தக் காமெடிதான் இப்போது போலீஸ் வட்டாரத்தில் டாக்!"

"ஷாக் நியூஸ் சொல்றேன் கேளு. பெரம்பூர்ல நாலாங்கிளாஸ் படிக்கற பையனும், பொண்ணும் லவ் லெட்டர் பரிமாறியிருக்காங்க. இதைப் பார்த்து நொந்து போன டீச்சர், ரெண்டு பேரையும் சாத்து சாத்துனு சாத்தி வீட்டுக்கு அனுப்பிட்டாங்களாம். விஷயம் கேள்விப்பட்டு, பசங்களோட பெற்றோர் நொந்து போயிட்டாங்களாம். இதுக்கு மீடியாவைக் குற்றம் சொல்லியா? பெற்றோரைக் குற்றம் சொல்லியா? யோசிச்சு வையி. வர்றேன்" என்று பறந்தது ஊர்க் குருவி.

'இன்னும் பத்து வருடங்களில் இந்தியாவில் ஹார்ட் அட்டாக் வந்து மரணம் அடையப்போகிறவர்களின் எண்ணிக்கை, தொற்று நோய் மரண எண்ணிக்கையையும் தாண்டிவிடும்' என்று உலக சுகாதார அமைப்பு அபாயச் சங்கு ஊதியிருக்கிறது.

இதயத் தசைகளுக்கு இரத்தம் கொண்டு செல்லும் தமனி பழுதாகிப் பாதிப்பை உண்டாக்குகிறதே, இதை கரோனரி ஆர்ட்டரி டிஸீஸ் என்பார்கள். இந்த நோய் அமெரிக்கர்களையும் ஐரோப்பியர்களையும்விட, இந்தியர்களைத் தாக்கும் வாய்ப்பு ஆறு மடங்கு அதிகம்!

ஆஞ்சியோபிளாஸ்ட்டி செய்யும்போது உபயோகித்தால், அடைப்பு மறுபடி ஏற்படாத வண்ணம் மருந்து செயல்படுகிறதாம்.

இந்த சிரோலிமஸ் பூச்சுள்ள ஸ்டென்ட்டை இப்போது இறக்குமதி செய்ய ஒரு லட்சத்து முப்பதாயிரம் ரூபாய் ஆகிறது. ஆனால் பல நிறுவனங்கள் இதைத் தயாரிக்க முன்வரும் போது, விலை கணிசமாகக் குறைய வாய்ப்பு இருக்கிறது. அப்படி வந்தால், 'கரோனரி ஆர்ட்டரி டிஸீஸே வா, உன்னை ஒரு கை பார்க்கிறேன்!' என்று தைரியமாகச் சொல்ல ஆரம்பித்து விடுவார்கள்.

பை - பாஸ் அறுவைச் சிகிச்

# இதய நோய்: அறுவை சிகிச்சை வேண்டாம்!

கரோனரி ஆர்ட்டரி டிஸீஸைக் குணப்படுத்த 'ஆஞ்சியோபிளாஸ்டி'யும் வேண்டாம்; அறுவைச் சிகிச்சையும் வேண்டாம். சிரோலிமஸ் பூசிய ஸ்ட்டென்ட்'டுகளைக் கொண்டு நடத்தப்பட்ட பரிசோதனை முயற்சிகளில், ஒட்டு மொத்தமாக எல்லா இதயநோய்ச் சிகிச்சை நிபுணர்களும் சமீபத்தில் பிரமிக்கத்தக்க முடிவுகளைக் கண்டிருக்கிறார்கள்.

1977-ல் கண்டுபிடிக்கப்பட்ட கரோனரி ஆஞ்சியோபிளாஸ்ட்டி, இதயத் தசைகளுக்கு இரத்தம் கொண்டு செல்லும் தமனி பழுதடைந்த நோயாளிகளுக்கு ஒரு வரப்பிரசாதமாக அன்று அறிமுகமாயிற்று. நோயாளியை முழுதாக மயக்கமடையச் செய்ய வேண்டாம். அந்தப் பகுதிக்கு மட்டும் அனஸ்தீசியா கொடுக்கப்பட்டால் போதும். ஆஞ்சியோகிராஃபி மாதிரியே இதைச் செய்து, தமனியில் உள்ள அடைப்புகளை எளிதில் நீக்கிவிடலாம். நோயாளியும் ஒரே வாரத்தில் பழையபடி வேலைக்குத் திரும்பலாம்.

இந்தப் பத்து வருடங்களில் 'ஸ்டென்ட்' மூலம் செய்யப்பட்ட ஆஞ்சியோபிளாஸ்ட்டியினால் ஒரு பிரச்னை எழுந்தது. ஆறு மாதங்களுக்குள்ளேயே மறுபடி தமனியில் அடைப்பு உண்டாகிக் குறுகிவிடுகிற பிரச்னைதான் அது.

இப்போது, பல வருட ஆராய்ச்சிகளுக்குப் பிறகு, கரோனரி ஆர்ட்டரி டிஸீஸ் மற்றும் ரெஸ்ட்டினோஸிஸ் - இரண்டுக்கும் நவீன ஆஞ்சியோபிளாஸ்ட்டியில் விடிவு கிடைக்கும் என்கிறார்கள்.

'ஸ்ட்டென்ட்'டின் மீது, சிரோலிமஸ் எனப்படும் மருந்தைப் பூச்சுப் போல அமைத்து,



சையைவிட ஆஞ்சியோ பிளாஸ்ட்டி பாதுகாப்பானது மட்டுமல்ல; கலவரமில்லாதது. சில நாட்களிலேயே பழையபடி வேலைகளைக் கவனிக்கலாம். மறுபடி பாதிப்புக்குள்ளான இருபது சதவிகிதம் பேருக்கும் சேர்த்தே இந்தப் புதிய உத்தி, புதுத் தெம்பை அளிக்கும் எனலாம்.

- சித்தார்த்

# ஆனந்தி



**எ**ம்.எஸ், பாட, நாங்கள் அபிநயம் பிடித்தோம். தனித் தனியாகவும், சேர்ந்தும் படங்களை எடுத்தார், அப்போது மிகப் பிரபலமான போட்டோகிராபராக இருந்த நாகராஜ ராவ்.

அதுவரை எல்லா அயிட்டங்களையும் சேர்ந்தே பயிற்சி செய்து கொண்டிருந்த எங்களுக்கு, ஒரு வார காலமாக தனித் தனியாக ஆடப் பழக்கினார் ராமையாப் பிள்ளை. ஒரே அபிநயத்தை இரண்டு பேர் செய்தால் யாரைப் பார்ப்பது என்று புரியாமல், முழு உணர்ச்சி பாவத்தையும், பார்க்கிறவர்கள் அனுபவிக்க முடியாது, என்பது டி.கே.சியின் அபிப்பிராயம். அவர் சொல்வது சரியென்று எல்லாரும் ஒப்புக்கொள்ளவே, நானும் ராதாவும் நிருத்தம் சேர்ந்து செய்வது என்றும், அபிநயம் தனித் தனியாகச் செய்வது என்றும், ஏற்பாடாயிற்று.

தேசீய கீதத்தை பரத நாட்டிய பாணியில் நடனமாக ஆடியது ஒரு புதுமையாகவும், காலத்துக்குப் பொருத்தமாகவும் அமைந்தது.



• சிறுமியாக கட்டுரை ஆசிரியர்

அரங்கேற்றத்துக்கு நடன உடைகள் தைக்க ஒரு சிங்கர் தையல் இயந்திரம், பீஸ் பீஸாகத் துணிகள், ஜரிகை பார்டர்கள், டிசைன் போட்ட புத்தகங்கள் எல்லாம் கல்கி பூங்காவின் மாடியில் சேகரித்து விட்டு, ஒரு தையல்காரரையும் வீட்டோடு அமர்த்தி விட்டார்கள். இத்தனைப் பொறுப்பையும் நிர்வகித்து, எங்கள் உடைகளைத் தைப்பதற்கு, இரவும் பகலும் பாடுபட்ட இளைஞர் அனந்தநாராயணனை மறக்கவே முடியாது.

சதாசிவ மாமா, "ருக்மிணி தேவி

## ஆடுவோமே-



• ராஜாஜியுடன் ராதா, எம்.எஸ்...

யின் டிரஸ் மாதிரி தைக்க முடியுமா பாரு!" என்று சொல்லிவிட்டுப் போய்விட்டார். பாவம், அந்தத் தையல்காரர் ஓர் அப்பாவி, "அவங்க யாருங்க? எங்கே உடுப்பு தைக்கிறாங்க!" என்று கேட்டபோது, நான் எல்லாரிடமும் சொல்லிச் சொல்லி சிரித்தது இன்னும் ஞாபகம் இருக்கிறது.




"புடைவை உடுத்திய மாதிரி இருக்கணும், பைஜாமா மாதிரியும் இருக்கணும்" என்பதால் அந்த டெய்லரும் ரொம்ப சிரத்தையாகக் காகிதத்தில் கத்தரித்துப் பார்த்துப் பிறகு, மட்ட ரகத் துணியில் (அப்போது சீட்டி என்று சொல்வோம்) தைத்துப் பார்த்து, பிறகு கொஞ்சம் நல்ல துணியை வெட்டித் தைத்து, நாங்கள் உடுத்திப் பார்த்தோம்.

பச்சை ஸாடின் துணியில் தங்க ஜரிகை. ராதாவுக்கும் எனக்கும், மழமழவென்று அந்தத் துணியைத் தொட்டுப் பார்ப்பதிலேயே மகிழ்ச்சி.

சதாசிவமும் எம்.எஸ்.ஸும் பார்த்து விட்டு, "ரொம்பப் பளபளன்னு இருக்கு. நன்னா இல்லை..."என்று சொல்லி விட்டார்கள்!

பிறகு எம்.எஸ்., தாம் மீரா படத்தில் உடுத்திக் கொண்ட நீலமும் தங்க நிறமும் கலந்த புடைவையை எடுத்துக் கொடுத்தார். அந்தப் புடைவையை வெட்டவே டெய்லருக்கு மனமில்லை!

அதைத் தைத்துப் போட்டுக் கொண்டதும் 'அப்ரூவ்' ஆயிற்று! நான் கொஞ்சம் பெரியவளானதால், எனக்குச் சிறிய தாவணி போட வேண்டும் என்று என் அம்மா சொல்லிவிட்டார். இருவருக்கும் ஒரே மாதிரி இரண்டு உடைகள் தைத்தாயிற்று.

நகைகளிலும் கூர்ந்து கவனம் செலுத்தினார்கள். வர்ணம் வரை மாங்காய் மாலை (இரவல்), அபிநயத்துக்கு முத்துச் சரத்தில் மகரிப்பதக்கம், 'ஆடுவோமே'க்கு பூமாலை என்று புதுமைகள்.

# பாடுவோமே!



நிகழ்ச்சி நிரலும் நூதனமாகத் தயாராகி விட்டது. ஒவ்வொரு பக்கத்திலும் ஒரு பாடல். அந்தப் பாடலுக்குரிய பாவத்தோடு ஒரு படம். இந்தச் சிறு புத்தகத்தை இரண்டு சலங்கைகளுடன் நூல் கோத்துத் தைத்திருந்தார்கள். வாத்தியார், எம்.எஸ் படங்களும் இருந்தன.

அரங்கேற்றத்துக்குத் தலைமை வகிக்க திருப்புகழ் மணி, டி.எம். கிருஷ்ணசாமி ஐயரை அழைத்திருந்தார்கள். முதல் மணி அடித்து, திரை விலகியது. சிறப்புத் திரையில் நந்தி பகவான் காட்சியளித்தார்.

திருப்புகழ் மணி வருவதற்குச் சில நிமிடங்கள் தாமதமாயிற்று. சபையோர் பலர் நின்று கொண்டிருந்தார்கள். பத்து நிமிடங்களிலேயே பொறுமை இழந்த சிலர் "சற்றே விலகி இரும்பிள்ளாய்;

சந்நிதானம் மறைக்குதாம்" என்று நந்தி திரையைப் பார்த்துப் பாடத் தொடங்கி விட்டார்கள்! ஒரே சலசலப்பும் பரபரப்பும் ஏற்பட்டது.

அன்று வந்த அந்தக் கூட்டத்தைப் பற்றி அதிசயமாகப் பேசிக் கொண்டார்கள். நாங்கள் குழந்தைகள்தானே! எங்கள் நடனத்தைப் பார்க்கத்தான் இப்படிக் கூட்டம் என்று நினைத்துக் கொண்டோம். எம்.எஸ். சுப்புலக்ஷ்மி பதம் பாடியதுதான் கூட்டத்திற்குக் காரணம், என்று பிறகுதான் தெரிந்தது.



"அந்த தவில்காரனை நம்பாதீங்க... கண்ணை மூடிக்கிட்டு முப்பது நிமிடமெல்லாம் ராகம் ஊதாதீங்கன்னு அடிச்சுக்கிட்டேன்... கேட்டீங்களா!"

"இப்ப என்ன ஆயிடுச்சு செம்பகம்?"

"உங்க நாதஸ்வரத்தில் நாலு மெடல்களைக் காணோம்!"

- புளியரை கணேசன்

தோளில் குறுக்காக பூ மாலையை அணிந்துகொண்டு "ஆடுவோமே பள்ளுப் பாடுவோமே" என்ற பாடலுக்கு நாங்கள் நடனமாடத் தொடங்கியதுமே, சபையில் ஒரே ஆரவாரம். முதலில் பாடலின் உணர்ச்சிச் செறிவு. சுதந்திரம் பெறுவதற்கு முன் அல்லவா? பிறகு இசையமைப்பின் கவர்ச்சி, பாடியவரின் குரல் வளம், நடன அமைப்பு எல்லாம் சேர்ந்து, அந்தப் பாடலுக்குப் பெரிய வரவேற்பு. அடிக்கு அடி கைதட்டினார்கள்.

*பூமியில் எவர்க்குமினி அடிமை*
*செய்வோம் பரி*
*பூர ணனுக்கே அடிமை செய்து*
*வாழ்வோம்*



என்று எம்.எஸ். பாட, நாங்கள் ஆட, ரசிகர்களுக்கு எக்களிப்பே உண்டாகிவிட்டது.

ஒரு தேசிய கீதத்தை பரத நாட்டிய பாணியில் நடனமாக ஆடியது ஒரு புதுமையாகவும், காலத்துக்குப் பொருத்தமாகவும் அமைந்தது.

கல்கி புனைந்திருந்த 'மாலைப் பொழுதினிலே' பாடலும், ரசிகர்களுக்கு ஒரு புதிய அனுபவத்தை அளித்தது. இதற்கும் எஸ்.வி. வெங்கட்ராமனே இசையமைத்திருந்தார். நான் நாயகியாகவும், ராதா முருகப் பெருமானாகவும் நடனமாடினோம். அன்று அது ஒரு புதிய உத்தி. வேடம் போட்டு ஆடவில்லை. தனித்தனியாக பாவம் பிடிப்பதில், அது ஒரு புதிய நாடக பாணியாக அமைந்தது.

*புள்ளி மயில் வீரன் மோஹனப்*
*புன்னகை தான் புரிந்தான்*

என்று ராதா கள்ளமற்ற சிரிப்புச் சிரித்ததும் சபையோர் சிரித்து மகிழ்ந்தனர்.

ஒரு பரத நாட்டிய அரங்கேற்றம். மூன்று மணி நேரமும் ஆடியவர்கள் பன்னிரண்டு வயதுக்குட்பட்ட சிறுமிகள், சம்பிரதாயமான, ஆனால் புதுமையான உடை அலங்காரங்கள், அளவான மேக் அப், திருத்தமான நடனம், உயர்ந்த சங்கீதம், கச்சிதமாக எடிட் செய்யப்பட்ட உருப்படிகள், மயிலை சங்கீத சபாவின் சிறந்த ரசிகர்கள், என்று நிகழ்ச்சியின் வெற்றிக்குப் பல காரணங்கள். எல்லாமே தமிழ் உருப்படிகளாக இருந்ததால், சிறிது கூடத் தொய்வு ஏற்படவில்லையென்பதில் கல்கி, டி.கே.சி இருவருக்கும் பெருமிதம்.

சில நாட்களில் பாரதி விழா எட்டயபுரத்தில் நடந்தது. 'ஆனந்தி -ராதா' நடனம் வேண்டும் என்று ரசிகமணி கூறிவிட்டார். எம்.எஸ்.ஸின் இன்னிசைக் கச்சேரி - எங்கள் நடனக் கச்சேரி இரண்டும் ஏற்பாடாயிற்று.

பாரதி விழாவுக்காக மகாகவியின் புதிய பாடல் ஒன்றை அப்பா தேர்ந்தெடுத்தார்.

'வெற்றி எட்டுத்திக்கு மெட்ட
கொட்டு முரசே' என்று மோஹன ராகத்தில் இசையமைத்தார் எஸ்.வி. வெங்கடராமன்.

வழக்கமான அலாரிப்பு, வர்ணத்தைச்

சுருக்கமாக முடித்துக்கொண்டு, 'ஆடுவோமே' என்று எம்.எஸ். எடுத்ததும், அடாடா, அந்தக் கரகோஷம், நிஜமாகவே விண்ணை முட்டியிருக்கும். வெற்றி எட்டுத் திக்கும் எட்ட, கைகளைத் தட்டினார்கள்!

இப்படி தேசியப் பாடல்களுக்கு அபிநயம் செய்வதைப் பல பெரியோர்கள் பாராட்டினார்கள். இந்த இரண்டு பாடல்களும் அதே வர்ண மெட்டில், ஏ.வி.எம். எடுத்த 'நாமிருவர்' திரைப்படத்தில் குமாரி கமலா, ஆடி, நாடு முழுவதும் பிரசித்தமாயிற்று. பாடியவர் டி.கே. பட்டம்மாள்.

பிறகு சென்னை ராஜாஜி ஹாலில் கம்பர் விழா நடந்தது! ரசிகமணி அகத்துறை சாயலுடன் ஒரு பாடலையும், ராமபிரானுடைய அழகை மிதிலாபுரியின் கன்னியர் எவ்வாறு பார்த்துத் திகைத்தார்கள், என்ற பொருள் பொதிந்த பாடலையும், எடுத்துக் கொடுத்தார். "தோள் கண்டார் தோளே கண்டார்" என்ற பாடல் தத்துவார்த்தம் கொண்டது. பெண்களை முன்னிலைப் படுத்தி, பக்தியின் முதிர்ச்சி வெளிப்பாட்டை அலங்காரமாகக் கூறுவது.

இதற்கும் இசை அமைத்தவர் எஸ்.வி. வெங்கடராமன்தான்.

நடனம் தொடங்குவதற்கு முன்னால், டி.கே.சி. அப் பாடலை எடுத்து அவருக்கே உரிய பாணியில் விளக்கினார்.

'கருணை செய்திடலாகாதா' என்ற ஒரே வர்ணத்தைத் திரும்பத் திரும்பச் செய்து அலுத்து விட்டது.

பாபனாசம் சிவனிடம் தமிழில் ஒரு பத வர்ணம் இயற்றும்படி கேட்டுக்கொண்டார் சதாசிவம்.

"நீ இந்த மாயம் செய்தால்" என்ற தன்யாசி ராக வர்ணம் இயற்றி, ஸ்வர, தாளக் குறிப்புக்களுடன் அனுப்பி வைத்தார் சிவன். சிருங்கார ரஸமானாலும் சிறுமிகளான நாங்கள் ஆடுவதற்கு ஏற்றவாறு, மிக அழகாக அர்த்த பாவத்துடன் அமைந்திருந்தது.

ஆழ்வார் பாசுரங்களை எடுத்துக் கொண்டு, அதை வர்ணம் போல் அமைத்துக் கற்றுக் கொடுத்தார் ராமையா பிள்ளை. 'பச்சை மாமலைபோல் மேனி' என்ற பாசுரத்தை ஏற்கனவே, எம்.எஸ் ரிகார்டு கொடுத்திருந்தார்கள். இப்படியாகத் தமிழ் மொழி எங்கள் கச்சேரிகளில் முதலிடம் பெற்றது. அந்தக் கால கட்டத்தில் இவை எல்லாமே புதிது.

தெலுங்கோ, வடமொழியோ வேண்டாமென்று அவர்கள் ஒதுக்கவில்லை. பரத நாட்டியக் கலையை எல்லாரும் புரிந்துகொண்டு அனுபவிக்க வேண்டும், தமிழ் நாட்டில் நடனக் கலைக்கு வரவேற்பு ஏற்பட வேண்டும் என்பதே, அவர்களுடைய எண்ணமாக இருந்தது.

"உன் மகள் நீ பார்த்திருக்கிற வரனை வேண்டாம்னு சொல்றாளா, ஏன்?"
"ஏற்கனவே ரெண்டு பேரும் காதலிச்சுப் பிரிஞ்சுட்டாங்களாம்!"
- ஆர். தங்கராஜ்



தெலுங்கில் 'மதுரா நகரிலோர்' பாடலுக்கும், 'ஸரஸிஜாக்ஷுலு' என்ற சப்தத்துக்கும்கூட, நாங்கள் நடனமாடியிருக்கிறோம்.

கல்கி கிருஷ்ணமூர்த்தி, ரசிகமணி டி.கே.சி, எம்.எஸ். சதாசிவம் சேர்ந்து நாட்டியக்கலைக்கு ஒரு சிறப்புத் தொண்டாற்றினார்கள். கல்கி, சிவகாமியின் சபதம் எழுத ஆரம்பித்தபோது பரதக்கலை மேலும் பிரபலமடைந்தது. தமிழ்நாடு முழுவதும் சலங்கை ஒலி கேட்கவும், தமிழ்ப் பாடல்கள் ஒலிக்கவும், இவர்கள் காரணமாக இருந்ததை, மறுக்கவோ மறக்கவோ முடியாது.

பெரியோர்களெல்லாம் சேர்ந்து சொல்லாலும், செயலாலும், எழுத்தாற்றலாலும், இசையாற்றலாலும், தமிழகத்தில் ஒரு மறுமலர்ச்சியை உண்டாக்கினார்கள். அதில் நாங்கள் எங்களை யறியாமலேயே பங்கெடுத்துக் கொண்டு வாழ்ந்தோம், என்பதை இன்று நினைத்துப் பார்க்கும்போது ஆச்சரியமாக இருக்கிறது. ○



# இனியாவது உடைக்காமலிருக்க...

ஒலியாண்டு வெளி நடந்து
விரல் உயர்ந்தது
இங்கு கண்ணாடி உடைந்தது
குரல் வளங்கள் உறைந்து
இலையுதிர்த்தன.
இன்னும் கண்ணாடி உடைந்தது.
இரு தரப்பின் நியாயங்கள்
மீண்டும் மீண்டும்
கழுவேற்றப்பட
இன்னொரு கண்ணாடி உடைந்தது.
அந்த இறுதி நாள்
கருணையின் பெறப்பட்டால்
புனர் ஜீவம் ஏறுமோ
கல்லறை வாசத்தின்
பெயர் ஒற்ற கண்டத்தில்?
சஞ்சலத்தில்
கண்ணாடி உடைந்தது.
நூறாயிரம் நிலவுகளின்
சாற்றைத் தேக்கி
ஒரு பூர்ணிமை
இன்னமும் உண்டோ?
இரங்கி மீண்டும்
கண்ணாடி உடைந்தது.
குருட்டன்பு துழாவித்
தேடுமிடம் நிகர
கண்ணாடித் துகள்கள்.

—மாலதி

டி.டி. வாசு

# ரசிக்க உதவிய கேள்வி ஞானம்!

என் தகப்பனார் டி.டி.கே. சங்கீதப் பிரியர். அடிக்கடி சங்கீத வித்வான்களை அழைத்து கச்சேரி ஏற்பாடு செய்வார். அதற்குப் பிறகு இரவு விருந்தும் உண்டு. மகாராஜபுரம் விசுவநாதய்யர், அரியக்குடி, செம்மங்குடி எல்லாம், மூன்று முதல் நான்கு மணி நேரம் பாடிக் கேட்டிருக்கிறேன். அந்த விதத்தில் நான் ஓர் அதிர்ஷ்டசாலிதான்! இவை எல்லாம் என்னைக் கர்நாடக சங்கீதத்தில் ஆர்வமும், ஈடுபாடும் கொள்ள வைத்த நிகழ்ச்சிகள். என் தகப்பனாரே நன்றாகப் பாடுவார். நல்ல ரசனையும் உள்ளவர். வீணை தனம்மாள் இசையை ரசித்துப் பாராட்டுவார்.

அவர் மத்திய அமைச்சராக டில்லியில் இருந்தபோது, எம்.எஸ்., டி.கே. பட்டம்மாள், செம்மங்குடி எல்லோரும் அங்கே வருகிறபோது அங்கேயே தங்கியிருப்பார்கள். அதனால், அவர்கள் பாடுகிறபோது பெறுகிற 'கேள்வி ஞானம்', இசையை வெகுவாக ரசித்து மகிழ உதவியது.

1983ல், என்னுடைய நலம் விரும்பும் நண்பர்கள், 'உங்கள் தகப்பனாரின் பணியை நீங்கள் தொடர வேண்டும்' என்று சொன்னபோது பெருமிதமாக இருந்தது. அதிலும், கே.சீனிவாசன், டி.டி.கே., போன்றவர்கள் தலைமை ஏற்று நடத்திய நிறுவனம் மியூசிக் அகடமி. கே.வி. கிருஷ்ணசாமி ஐயர், டி.எல்.வேங்கடராமய்யர் போன்ற மேதைகள்





"அந்த நடிகை கல்யாணத்துக்கு அப்புறம் நடிக்க மாட்டாங்களாமே?"

"இப்போ மட்டும் என்ன பெரிசா நடிக்கறாங்களாக்கும்!"

\- யமுனா ரங்கநாதன்



"உன் பிள்ளை பைனான்ஸ் கம்பெனி ஆரம்பிச்சாரே! எப்படி நடக்குது?"

"ஏதோ ஓடிக்கிட்டு இருக்கு!"

"ஆரம்பத்திலேயாவா?"

\- ரமணி ரங்கநாதன்



"கிளார்க், ஆபீஸ் ஆரம்பிக்கற டயத்துக்கு, சரியா போன் பண்ணிடுவாரு..."

"அது என்னய்யா கணக்கு...?"

"லேட்டா வருவேன்னு போன் பண்ணுவாரு..."

\- தமிழ்

ஒழுங்குமுறைகளைக் கடைபிடிப்பதிலும், கட்டுப்பாட்டிலும் பெயர் பெற்றவர்கள். அவர்களோடு தொடர்புடைய நிறுவனத்துக்கு நான் தலைமைப் பொறுப்பு ஏற்க வாய்ப்புக் கிடைத்ததை, ஒரு பெரும் பேறாகவே கருதினேன்.

அகடமியின் நிதி நிலையைச் சீராக்கினேன். அகடமி கட்டடத்தைப் பழுது பார்த்து, ஏர் கண்டிஷனிங், அரங்க நாற்காலிகள், ஒலியமைப்பு என்று ஒவ்வொன்றாகத் திருத்தி அமைத்தேன்..

இன்று வசதியான நிதி நிலைமை இருக்கிறது. நிறைய அறக்கட்டளைகள், ஒவ்வொரு வருடமும் பிரபல இசைக் கலைஞர்களின் வருடாந்தர இசை நிகழ்ச்சிகளுக்கு நிதி கொடுத்து உதவுகின்றன.

இது பவழவிழா வருடம் என்பதால் இசை மேதைகளான செம்மங்குடி, எம்.எஸ்., டி.கே. பட்டம்மாள், சிதார் கலைஞர் ரவிசங்கர் ஆகியவர்களைக் கௌரவித்து மகிழ்கிறது அகாடமி. முதன் முதலாக, இந்தியக் குடியரசுத் தலைவர் அப்துல் கலாம் தலைமை. (இதுவரை குடியரசு துணைத் தலைவர்கள்தான் தலைமை ஏற்றிருக்கிறார்கள்.)

இந்த வருடம் சதஸுக்கு, வயலின் மேதை டி.என். கிருஷ்ணன் தலைமை தாங்குகிறார். அவருக்கும் இவ்வாண்டு பவழவிழா ஆயிற்றே!

இளைய தலைமுறையைச் சேர்ந்த இசை – நடனக் கலைஞர்களை ஊக்குவிக்க, பதினைந்து ஆண்டுகளுக்கு முன், 'ஸ்பிரிட் அஃப் யூத்' நிகழ்ச்சிகளைத் தொடங்கி வைத்தேன். சுரேஷ் கிருஷ்ணாவிடம், அவர் தாயார் அம்புஜம் கிருஷ்ணா நினைவாக அதை நடத்தலாமே என்று கேட்டுக் கொண்டேன். இதில் சிறந்த நடனம் வழங்கும் கலைஞருக்கு 'எம்.ஜி.ஆர். நினைவு விருது' அளிப்பதோடு, அகடமி துவக்க விழா அன்று நடனம் ஆடும் வாய்ப்பையும் வழங்குகிற ஏற்பாட்டைக் கொண்டு வந்தேன்.

இந்தப் பொறுப்பை வகித்ததால், பல இசை – நடனக் கலைஞர்களின் நட்பும், ஆலோசனையும் எனக்குக் கிடைத்ததுதான் நான் அடைந்த நன்மை. அதில் எனக்கு மகிழ்ச்சியும்கூட.

ஒவ்வொரு வருடமும், இசைவிழா அழைப்பிதழ் தயாரானதும், திருப்பதியில் பெருமாள் – தாயார் இருவர் சந்நிதியிலும் அதை வைத்து, முதலில் ஆசி பெறுவது வழக்கம். இந்த வருடமும் அந்த பாக்கியம் எனக்குக் கிடைத்ததில் அளவற்ற சந்தோஷம்.

**த**யாரிப்பாளர் தனசேகர் இடிந்து போய் உட்கார்ந்திருந்தார். அவரின் படம் 'பார்வையாலே வந்தாள்' ஊத்திக் கொள்ள, நாலு கோடி லாபம் எதிர்பார்த்தவர்; நாலு கோடி நஷ்டத்தில் இருக்கிறார்.

ஆக மொத்தம், அவர் கணக்குப்படி எட்டுக் கோடி 'போயே போச்சு!'

ஒரே ஆறுதல் அவர் மனைவிதான்.

"என்னங்க? இதுக்குப் போய் இப்படி இடிஞ்சுட்டீங்களே? நம்மகிட்ட நாலு கார் இருக்கு. ரெண்டு ஃபாரின் கார். வித்தா இருபது லட்சம் வரும். இந்த வீடு அறுபது இல்ல எண்பது வரும். அப்புறம் ஒரு பத்து ஏக்கர் ஃபார்ம் ஹவுஸ் இருக்கா? அதையும் வித்துட்டா ஒண்ணு ஒண்ணேகால் முழுசா வராதா?"

"நாலு கோடின்னா பாக்கி?"

"பினாமி பேர்ல இருக்கறது எல்லாம் பெரிசா ரெண்டு தேறாதா? மொத்தம் மூணு ஆச்சு. எல்லாரும் நீங்க பாத்து வளர்த்து விட்டவங்க. பெரிய ஆர்ட்டிஸ்ட்டை கொறைச்சுக்கச் சொல்லலாம். கடன் எல்லாம் அடைஞ்சிடும்."

"உன் நகைகளை விட்டுட்டியே! அது மேல அவ்வளவு..." சொல்லி



முடிக்கவில்லை, அவள் குறுக்கிட்டாள்.

"எல்லாத்தையும் தரேன். இப்ப நான் போட்டுண்டா இருக்கேன்? பேங்க் லாக்கர்லதானே இருக்கு? இருபது இருபத்தி அஞ்சு லட்சம்தான் வரும். சின்னதா பத்து பதினஞ்சுல ஒரு ஃப்ளாட் வாங்கிண்டு மிச்சத்தை பேங்க்ல டிபாசிட் போட்டா, வர்ற வட்டி நம்ம ரெண்டு பேர் செலவுக்குப் போறுமே!"

அவள் போடும் கணக்குச் சரியாக இருக்குமோ? தனசேகர் யோசித்தார்.

"வேற வழியே தெரியலையா உனக்கு? வேற ஐடியா சொல்லேன்."

"மஞ்சக் கடிதாசு தரலாம்... ஃபீல்ட்ல கெட்ட பேரு வரும். எந்த ஃபைனான்ஷியரும் யாருக்கும் சட்டுனு கடன் தர மாட்டாங்க!"

அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் பிரசுரத்துக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட வைட்டமின் சிறுகதை - 16

# ஆத்தா எல்லாம் உன் அருள்!

கே. ராமச்சந்திரன்

அவன் கூறுவது சரி என்று எண்ணியவர், வாசலில் யாரோ வருவது போல் இருந்ததால் ஒன்றும் பதில் சொல்லவில்லை.

"வணக்கம் சார்... ராமகிருஷ்ணன்... நீயா? நானா? நானா நானா?'ன்னு மொதல்ல ஒரு படம் எடுத்தீங்களே! அதில் அசிஸ்டன்ட்



டைரக்டர் ராமு... ராமுன்னு கூப்பிடு வீங்களே!"

தனசேகருக்குச் சட்டென ஞாபகம் வர, ஆச்சரியப்பட்டார். இத்தனை ஆண்டுகளுக்குப் பிறகு, அதுவும் இந்த நேரத்தில் வந்து தன்னைப் பார்ப்பானேன்?

"ஞாபகம் இருக்காம்மா? அந்தப் படம் நூறாவது நாள் காத்தாலே என் மனைவிக்கு ஒரு பட்டுப் புடைவை குடுத்தீங்களே. அம்மாவைப் பார்க்கறச்சே மல்லிகைப் பூ வாங்கிண்டு போய் நான் குடுத்ததா குடுன்னு சொன்னா... அதாம்மா... எடுத்துக்குங்க!"

"வீட்ல சௌக்கியமா? நின்னுகிட்டே பேசிக்கிட்டிருக்கீங்க? உட்காருங்க. குடிக்கறதுக்கு ஏதாவது கொண்டு வரேன்."

சொல்லிவிட்டு உள்ளே போய் விட்டாள்.

தனசேகர் ராமுவின் க்ஷேமலாபங்களை விசாரிக்கும் போது, இரு கண்ணாடி தம்ளர்களில் ஜூஸ் கொண்டு வந்து வைத்து விட்டு, தானும் ஒரு சோபாவில் அமர்ந்தாள்.

"என்ன ராமு? என்ன சமாசாரமா என்னைப் பார்க்க வந்திருக்கீங்க?" ஜூஸை உறிஞ்சிக் கொண்டே தனசேகர் கேட்டார்.

பெரிய பீடிகையுடன் ஆரம்பித்தான் ராமு.

"சார்... இப்பல்லாம் சினிமா சரியாப் போறது இல்ல.. டீ.வி.தான். சின்னத்திரைல ஒரு மெகா தொடர் செஞ்சீங்கன்னா..."

"உம்... மேலே சொல்லுங்க ராமு... என்ன ஐடியா?"

"வாரம் மூணு நாள். திங்கள், புதன், வெள்ளி. வருஷத்துக்கு நூத்தி அம்பது எபிசோட். ரெண்டு வருஷத்துக்கு முன்னூறு. எபிசோடுக்கு பத்து, பதினைஞ்சு மீந்தாலும் அம்பது லட்சம் லாபம்."

கணக்கு என்னவோ சரிதான். நடக்குமா? யோசித்தார்.

"இப்போவெல்லாம் டீ.வில ஸ்லாட் கிடைக்க மாட்டேங்கறதே? ப்ரைம் டைம் ரேட்டும் கூட... கட்டுப்படி ஆகுமா?"

"சார்! 'என் என்' டீ.வின்னு ஒரு புது

சேனல் வரப் போகுது. அந்த சேனல் ஜெனரல் மேனேஜர் எங்க ஊர்க்காரர். நான் சிப்பா நல்ல டயம் கேட்டு வாங்கித் தரேன்."

சிறிது யோசித்தவர், ராமுவிடம் கதை ஏதாவது உண்டா? எனக் கேட்டார்.

"சொல்றேன் சார்! ஒரு வீட்ல.. மாமியார் மருமகள் ஒத்துப் போகலை. இதை வெச்சு..."

"எல்லா சேனல்லையும் இதே கதை தானே வருது?"

"நான் சொல்றது ஆரம்பம்தான் சார்... கேளுங்க. ரெண்டு பேரும் வெவ்வேற ரூம்ல இருந்து ஈமெயில், சேட்டிங், செல்ஃபோன்ல தான் சண்டை போடுவாங்க. ஹைடெக் சமாசாரம், கிராஃபிக்ஸ் பண்ணலாம்."

ஒன்றும் புரியாமல் இருவரும் ராமுவைப் பார்த்தார்கள்.

"ஒருநாள் தான் குளிக்க வெச்சிருந்த தண்ணீரில் மருமகள் குளித்து விடுகிறாள். பெரிய சண்டையாகி, மாமியார் கிராமத் துக்குப் போய் கிணத்துலேர்ந்து தானே தண்ணி இழுத்துக் குளிக்கிறாள். குளத்துல குளிக்கிறாள்.. ஆத்துல குளிக்கிறாள்."

"எதுக்கு இவ்வளவு குளியல் சீன்? மாமியார் வயசானவங்களா இருப்பாங்க. அவங்க குளிக்கறதையெல்லாம்..."

"நல்ல கேள்வி கேட்டீங்க சார்! மொதல் படம் அதான். 'நானா நானா'வுல குளியல் சீனுக்காகத்தானே நூறு நாள் ஓடிச்சு? அதுதான் செண்டிமெண்ட்டலா வெச்சிருக் கேன். கிராஃபிக்ஸ்ல ஃப்ளாஷ்பேக்ல மாமியாரை சின்னப் பொண்ணா மாத்திட லாம்... குளத்துல... ஆத்துல... அவங்க மட்டும்தான் குளிப்பாங்களா? எத்தனை பேர்! சின்ன வயசுப் பொண்ணுங்க. ஒரு பாட்டுக் கூடப் போடலாம்."

தலையில் அடித்துக் கொள்ள வேண்டும் போலிருந்தது தனசேகரின் மனைவிக்கு. ராமு தொடர்ந்தான்.

"ஹீரோ அமெரிக்கா போறார். அங்கே ஒரு பொண்ணோட நட்பு கிடைக்கிறது. அவ தன் புருஷன் மேல வெறுப்பினால நம்ம ஹீரோவோட இருக்கா. அவ ஒரு நாள்..."

கொஞ்சம் நிறுத்தி விட்டுச் சொன்னான்.

"ரெண்டு பேரும் கார்ல போறச்சே.. அவ கணவன் பார்த்துட்டு தன் காரை எடுத் துண்டு துரத்தறான். அப்ப ஏற்படற விபத் துல அவன் செத்துப் போக, ஹீரோவுக்கு மனசு கேக்கல்லே."

"அப்புறம் என்ன ஆச்சு? டபுள் ஆக்ட்டா? யாராவது அவன் மாதிரியே வரானா?"

"சாப்பிடும்போது கூட நம்ம தலைவருக்கு உள்ளூர பயம்தான்..!"

"எப்படிச் சொல்றே..?"

"கடல் மீன் வேணுமா? கம்மாய் மீன் வேணு மான்னு கேட்டா 'ஜாமீன்' வேணுங்கிறாரே..!"

— புன்னகை மன்னன்

---

"இல்லே சார்! ரெண்டு பேரும் சான்ஃபிரான்சிஸ்கோ பெருமாள் கோயிலுக் குப் போறாங்க. அங்க நம்ம கேரள ஜோஸி யர் சோழி போட்டுப் பார்த்துட்டு, 'யாரோ செய்த பாவம் உங்களை சுத்துது... அதனால உலகத்தை நீங்க ஏழு தடவை சுத்திட்டு வரணும்'னு சொல்றார்."

"ஏழு தடவையா? எப்படி சீரியல் எடுக் கறது?"

"ரொம்ப ஈஸி சார்! லாட்டரில பரிசு விழறது. அந்த ஜோடிக்கு ராக்கெட்ல ஏழு டிரிப் உலகத்தை சுத்தலாம்னு வெச்சுப் போம்."

"ஹீரோவும் அந்தப் பொண்ணும் கணவன் மனைவி இல்லியே?"

தனசேகரின் மனைவி கேட்டதைப் பார்த்து, ராமு சிரித்தான்.

"அம்மா! ஜோடின்னா... அமெரிக்காவுல ஓர் ஆண், ஒரு பெண்தான். நம்ம ஊர் போல கணவன் மனைவி இல்லை. வேணாட்டி ஒரு தடவை மட்டும் உலகத்தைச் சுத்த வைப் போம்."

"சரி! சரி! ஒண்ணே போறும்... மேலே சொல்லுங்க."

"அவங்க சான்ஃபிரான்ஸிஸ்கோ பெரு மாள் கோயில், சிகாகோ கோயில், நியூயார்க் ஸ்ரீ மகாவல்லப கணபதி கோயில், அங்கேயே வெங்கடேஸ்வரர் மஹாலட்சுமி சன்னதி, லண்டன்ல ஹரே கிருஷ்ணா ஹரே ராமா கோயில், அப்புறம் பாரீஸ் பிள்ளையார் கோயில், சிங்கப்பூர் சுப்ரமணியர் கோயில் போயிட்டு, ஆஸ்திரேலியாவுல சிட்னில.. கோயில் பேரு மறந்து போயிடிச்சு, போயிட் டுத் திரும்பி சான்ஃபிரான்ஸிஸ்கோ போறாங்க."

தனசேகரின் மனைவி கேட்டாள்.

"தலைகீழா சுத்தறாங்களே? இடதுபக்கமா பிரதிக்ஷணமா இல்லே போகணும்?"

"அது வந்து அம்மா... நம்ப ஊர்லதான் பிரதிக்ஷணமா போகணும். அங்கெல்லாம் அப்படி இல்லை... சோழி போட்டுச் சொன் னவர் உலகத்தைச் சுத்தித்தான் வரச் சொல் றார்!"



"அங்கெல்லாம் போய் ஷூட்டிங் பண்ணினா ரொம்பச் செலவாகுமே?"

"நாம போக வேண்டாம் சார்! நமக்குத் தெரிஞ்சவங்க மூலமா எடுத்து நியூமேடிக் டேப்பை வாங்கிடலாம். ஹீரோ, அந்தப் பொண்ணையும் கிராஃபிக்ஸ் மூலமா உள்ளே போக வெச்சு.. டப்பிங்.. மியூஸிக் எல்லாம் இங்கேயே செஞ்சுடலாம்.. அவங்களுக்கு அல்வா பேமெண்ட் தந்துடலாம்!"

தனசேகருக்குப் புரியவில்லை.

"அது என்ன அல்வா பேமெண்ட்?"

"அதான் சார்! நம்பர் டூ பேமெண்ட் மாதிரி... அங்கே செலவாறதை இங்கே அவுங்க ஆளுக்குத் தந்துடலாம்."

அவருக்குப் புரிந்து விட்டது.

"சரி... சரி... நீ சொல்றது ஹவாலா பேமெண்ட்."

"ஹி.. ஹி.. அதான் சார்! அப்புறம் அவங்க மறுபடியும் போய் சோழி போட்டுப் பார்க்கறாங்க. இந்தியாவுக்குப் போய் உங்க கிராமத்துல குலதெய்வத்துக்குப் பொங்கல் படையுங்க, அப்படிங்கறார். அவங்க இங்கே வராங்க."

"புரியுது! புரியுது! கிராமத்துல பொங்கல் படைக்கறச்சே... தன்னோட அம்மாவைப் பார்க்கிறார்... சரியா?"

"கரெக்ட் சார்! ஹீரோ சொல்றார். 'தாயே எங்களை ஏத்துக்கோ' அப்படின்னு. அம்மாக்காரி, அதான் மாமியார் வந்து மகனே மருமகளேன்னு அணைச்சுக்கிறாங்க. முன்னூறு எபிசோட்."

தனசேகரின் மனைவிக்கு ஒரு பெரிய சந்தேகம் வர, கேட்டாள்.

"மாமியார்காரிக்குத் தன் மருமகள் யாருன்னு தெரியாதா? தொடர் பார்க்கறவங்களுக்குத் தெரியாதா?"

"மாமியாருக்கு வயசாயிடுத்து. கண் பார்வை சரியில்லைன்னு வெச்சுடலாம். தொடர் பார்க்கறவங்க பழசெல்லாம் மறந்துடுவாங்க."

"ஆமாம்! நீ சொல்றது சரி... என்ன பேர் வெச்சிருக்கே?" தனசேகர் கேட்டார்.

" 'ஆத்தா எல்லாம் உன் அருள்'னு பேர். ஒரே ஒரு டைட்டில் சாங். நூறு எபிசோடுக்கு அப்புறம் ட்யூனை மாத்தி மாத்தி, ரெண்டு மூணு பேர் பாடுவாங்க.. கொஞ்சம் புது மாதிரியா இருக்கும்."

புரிந்தது போலவும், புரியாதது போலவும் இருந்தது தனசேகருக்கு.

"யார் வசனம் எழுதப் போறாங்க?"

"கேப்பீங்கன்னு நெனைச்சேன் சார்! முதல் நூறு எபிசோடு சந்திரா கோவிந்தராஜன் சார்கிட்டே தரலாம். ரெண்டாவது நூறு பாலதேவன் சார் கிட்டே.. அவர் பிஸியா இருந்தா, ராஜகுமாரன் சார்... கடைசி நூறு எபிசோடு 'நம்ம வீடு' நமசிவாயத்துகிட்டே தரலாம். க்ளைமாக்ஸ் சூப்பரா எழுதுவார். ஒவ்வொரு வெள்ளிக் கிழமையும் ஒரு பதில் தர்றோம். அதுக்குச் சரியான கேள்வியை எழுதற பத்துப் பேருக்கு அட்மாஸ்ஃபியர் ஆடியன்ஸ் வேஷம் தர்றோம்."

"பாட்டெல்லாம் யார் எழுதுவாங்க?"

"யார்கிட்டே வேணும்னாலும் கேக்கலாம் சார்! மாலி நல்ல கவிஞர். ஃபீல்ட்ல ரொம்ப பிராபல்யம். இல்லே புதுக் கவிஞர்கள் வேணும்னாலும் லிஸ்ட்டே தரேன் சார்!"

"பாடப் போறது?"

"அதான் சொன்னேனே சார்! ட்யூன் மாத்தி மாத்தி ரெண்டு மூணு பேர்... ஸ்ரீசத்யா.. ராமதாஸ்... இல்லாட்டி சின்ன கிருஷ்ணன்... எல்லாரும் பாப்புலர் சிங்கர்ஸ் தான் சார்!"

இது சரிப்படுமா என யோசித்த தனசேகர் கேட்டார்.

"ராமு... ஐடியா நல்லாத்தான் இருக்கு... எதுக்கும் ஒன் லைன் எழுதி, சீன் பிரிச்சு, எபிசோட் வாரியா எழுதி.. அப்புறம் வாங்க, பார்க்கலாம்."

விடைபெற்றுக் கொண்டு ராமு சென்றவுடன், சோபாவில் சாய்ந்து, கண்களை மூடிக் கொண்டார் தனசேகர்.

அவர் மனக்கண் முன் முன்னூறு எபிசோடுகள் ஓடிக் கொண்டிருந்தன.

அவரைப் பார்த்து, அவரின் மனைவி கேட்டாள்.

"என்னங்க? இப்பத்தான் நாலு கோடி... எட்டுக் கோடின்னு கவலைப்பட்டீங்க? சும்மா இருக்க மாட்டீங்களா?"

சபரிகிரி செல்லுவோம்! சாஸ்தா நாமம் சொல்லுவோம்!

# கார்த்திகை முதல் மகர ஜோதி வரை ஐயப்ப பக்தர்களுக்கு சபரிமலையில் அன்னதானம் செய்திட அரிய வாய்ப்பு!

பேரன்புடையீர்!

வணக்கம். சபரிநாதன் வீற்றிருக்கும் மலை, ஸ்ரீராமனுக்கு சபரி கனி கொடுத்த இடம், ஐயன் ஹரிஹரசுதன் ஐயப்பன் அமர்ந்து அருளாட்சி புரிந்து மகரஜோதியாக காட்சி தரும் திருமலைதான் சபரிமலை.

எல்லையில்லாப் பேருளைப் பொழியும் ஐயப்பன் மனிதகுலத்தின் தொல்லைகளைக் களையவே அவதாரம் எடுத்தவர். வேண்டிவரும் பக்தர்களுக்கு, விரைவாக வரம் தரும் தெய்வம்தான் நம் சபரிமலை ஐயப்பன்.

விரதங்களுக்கும் முழுவடிவம் தந்த தெய்வம், ஒழுக்கத்திற்கு பாதை வகுத்த தெய்வம் என நமக்குத் தெரிந்தாலும், நோன்பிருந்து வழிபாடு செய்ய முடியாதவர்கள் ஆயிரம் ஆயிரம் பேர்கள், நோன்பிருந்து வழிபட்டாலும் நடந்து சென்று மலையேறி, பதினெட்டு படி மிதிக்க முடியாதவர்கள் ஆயிரமாயிரம் அன்பர்கள்.

பாமரர் முதல் மெத்தப் படித்தவர்கள் வரை, பரம ஏழை முதல் பல கோடிக்கு அதிபதிகள் வரை வித்தியாசம் பாராமல் சரண கோஷம் பாடி, பேட்டை துள்ளி ஆடி, பம்பாவிலிருந்து நடந்து சென்று, பக்திப்பரவசத்தோடு பதினெட்டு படிகள் ஏறி, வில்லாளி வீரனை, வீரமணிகண்டனை தரிசித்து ஆனந்தம் அடைபவர்கள் கோடானுகோடி பக்தகோடிகள்.

மகர ஜோதியை நேரில் தரிசிக்க முடியாதவர்களுக்கும் மனக்கண்ணில் மகரஜோதி காட்டவே, ஐயனின் திருவருளைப் பெறவே கார்த்திகை முதல் மகர ஜோதி வரை மண்டல விரதம் இருந்து செல்லும் ஐயப்ப பக்தர்களுக்கு சபரிமலையில் (பம்பாவில்)"ஸ்ரீ அன்னபூரணி அன்னதான ஸேவா டிரஸ்ட்" மூலம் அன்னதானம் செய்ய உள்ளோம். சபரிமலையில் அன்னதான திருப்பணிக்கு தங்களால் இயன்ற நன்கொடையை அனுப்பி ஐயனின் பேருளைப் பெற வேண்டுகிறோம்.

- ★ தாங்கள் அளிக்கும் நன்கொடை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்ளப்படும்.
- ★ ரூ.500/- அனுப்பும் ஆன்மீக அன்பர்களுக்கு, 'ஆன்மீகம்' மாத இதழ் ஒரு ஆண்டிற்கு அனுப்பி வைக்கப்படும்.
- ★ ரூ.1000/- அனுப்பும் ஆன்மீக அன்பர்களுக்கு, 'ஆன்மீகம்' மாத இதழ் இரண்டு ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.
- ★ ரூ.5000/- அனுப்பும் ஆன்மீக அன்பர்களுக்கு, 'ஆன்மீகம்' மாத இதழ் பத்து ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.

**ரூ.500, ரூ.1000, ரூ.5000 அனுப்பும் ஆன்மீக அன்பர்களுக்கு சபரிமலையில் ஐயப்பன் பாதங்களில் பூஜிக்கப்பட்ட ஐயப்பன் வெள்ளி டாலருடன் பிரசாதங்களும் அனுப்பி வைக்கப்படும்.**

★ பிள்ளை வரம் வேண்டும் ★ கல்வியில் முதல் நிலை பெறவேண்டும் ★ தொழிலில் முன்னேற்றம் வேண்டும் ★ நோய், நொடி பிணிகளிலிருந்து விடுபட வேண்டும் ★ வழக்குகளிலிருந்து விடுதலையாக வேண்டும் ★ குடும்பத்தில் திருமணம் போன்ற சுபநிகழ்ச்சிகள் தங்குதடையின்றி, தாமதமில்லாமல் நடைபெற வேண்டும் ★ கடன்கள் வசூலாக வேண்டும் ★ மனதில் நிம்மதி நிலவ வேண்டும் ★ வீட்டில் மகிழ்ச்சி பொங்க வேண்டும்

இதில் எந்த வேண்டுதல் என்பதைக் குறிப்பிட்டு யாருக்காக இந்த பிரார்த்தனை செய்து அன்னதானம் செய்ய வேண்டும் என்பதை பெயர், நட்சத்திரம், கோத்திரம், பிறந்த நாள் அல்லது திருமண நாள் இவைகளையும் தெளிவாக முழுவிலாசத்தோடு எழுதி அனுப்பவும். உங்களுக்காக ஐயப்பனிடம் பிரார்த்தனை செய்து உங்கள் பெயரில் சபரிமலையில் (பம்பாவில்) ஐயப்ப பக்தர்களுக்கு அன்னதானம் செய்கிறோம்.

அன்னதானத் திருப்பணிக்கு நீங்கள் அனுப்பும் நன்கொடையை, (Sri Annapoorani Annadhana Seva Trust, Chennai - 4) என்ற பெயரில் Cheque/D.D/M.O மூலம் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பி ஐயப்பனின் பேருளைப் பெற அன்புடன் வேண்டுகிறோம்.



நன்கொடைகளுக்கு 80 G பிரிவின்படி வரிவிலக்கு உண்டு.

*Cheque / D.D / M.O* அனுப்ப வேண்டிய முகவரி :

## ஸ்ரீ அன்னபூரணி அன்னதான ஸேவா டிரஸ்ட்

## SRI ANNAPOORANI ANNADHANA SEVA TRUST (Regd.)

68, Nadu Street, (Opp: Sri Kapaleeswarar Temple), Mylapore, Chennai - 600 004.

Tel : 4959302 Fax : (044) 7102308 E-mail: siva siva@vsnl.net

மகரஜோதியன்று சபரிமலையில் அன்னதானம் செய்தால் எல்லையில்லா புண்ணியம் பெறலாம்!

# சிவகாமியின் சபதம்

## இருபத்து ஒன்பதாம் அத்தியாயம்

## காற்றும் நின்றது

**அமரர் கல்கி**

மறுநாள் அதிகாலையில் நமசிவாய வைத்தியரிடமும் அவருடைய குடும்பத்தாரிடமும் விடை பெற்றுக் கொண்டு மாமல்லரும் பரஞ்சோதியும் புறப்பட்டார்கள். பாண்டிய சைனியத்தை முறியடித்துச் சின்னா பின்னமாக்கித் துரத்தி அடித்த வீரபல்லவ சைனியம் கொள்ளிட நதியைக் கடந்து அக்கரையில் ஆயத்தமாயிருந்தது. அதிர்ஷ்டவசமாக நதியில் தண்ணீர் குறைவாயிருந்தபடியால் நதியைக் கடப்பது எளிதாயிருந்தது. மாமல்லரும் பரஞ்சோதியும் கொள்ளிடத்தைக் கடந்ததும் குதிரைப் படையை மட்டும் தங்களைத் தொடர்ந்து வரும்படியும், காலாட்படையைப் பின்னால் சாவகாசமாக வரும்படியும் கட்டளையிட்டு விட்டு மேலே சென்றார்கள். சூரியன் அஸ்தமிக்கும் சமயத்தில் தென் பெண்ணைக் கரையை அடைந்தார்கள்.

அன்றைய தினம் வழிப் பிரயாணத்தின்போது மாமல்லர் அவ்வளவு குதூகலமாயில்லை. அவர் உள்ளம் கவலை கொண்ட சிந்தனையில் ஆழ்ந்திருந்ததை அவரது முகக்குறி காட்டியது.

கவலைக்கும் சிந்தனைக்கும் தக்க காரணம் இருந்தது. முதல்நாள் மாலை மாமல்லர் திருநாவுக்கரசரைத் தரிசிக்கச் சென்றிருந்த போது அந்தப் பெருந்தகையார் எல்லையற்ற அன்புடன்

மாமல்லருக்கு ஆசி கூறினார். பாண்டியனைப் புறங்கண்டது பற்றி வாழ்த்தினார். வாதாபிச் சக்கரவர்த்தி சண்டையை நிறுத்திச் சமாதானத்தைக் கோரியது பற்றியும், தமது மகிழ்ச்சியைத் தெரிவித்தார். மாமல்லரின் வேண்டுகோளின்படி காஞ்சிக்குக் கூடிய சீக்கிரத்தில் திரும்பி வருவதாகவும் வாக்களித்தார்.

அப்போது காஞ்சி மடத்தில் கடைசியாக மாமல்லரைப் பார்த்த சம்பவம் நாவுக்கரசருக்கு நினைவு வந்தது.

"பல்லவ குமாரா! ஆயனர் சுகமாயிருக்கிறாரா? அவருடைய மகள் சிவகாமி சௌக்கியமா? அன்றைக்கு மடத்தில், 'முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள்' என்ற பாடலுக்கு அந்தப் பெண் அபிநயம் பிடித்த காட்சி அப்படியே என் மனக் கண் முன்னால் நிற்கிறது. முடிவில் உணர்ச்சி மிகுதியால் மூர்ச்சித்தல்லவா விழுந்து விட்டாள்? தந்தையும் மகளும் சௌக்கியமாயிருக்கிறார்களா?"

இவ்விதம் சுவாமிகள் கேட்டுக் கொண்டிருந்தபோது மாமல்லருக்கும் ஏதேதோ பழைய ஞாபகங்கள் வந்தன. சிறிது தயக்கத்துடன், "காஞ்சி முற்றுகைக்கு முன்னால் அவர்களை நான் பார்த்ததுதான். வராக நதிக்கரையில் மண்டபப்பட்டுக் கிராமத்தில் இருக்கிறார்கள். போகும்போது அவர்களைப் பார்க்க எண்ணியிருக்கிறேன்" என்றார்.

அதைக் கேட்ட நாவுக்கரசர், "அப்படியா? மண்டபப்பட்டு வெகு அழகான கிராமம். அவர்களைப் பார்த்தால் நான் ரொம்பவும் விசாரித்ததாகச் சொல்ல வேணும். அந்தப் பெண் சிவகாமியை நினைத்தால் என் மனம் ஏனோ உருகுகிறது. பல்லவ குமாரா! ஆயனரிடம் அப்போதே சொன்னேன். சிவகாமியை அன்றைக்குப் பார்த்த போது, எதனாலோ 'இந்தப் பெண்ணுக்கு ஒன்றும் நேராமலிருக்க வேண்டுமே!' என்ற கவலை எனக்கு உண்டாயிற்று. ஏகாம்பரநாதர் கருணை புரிய வேண்டும்" என்றார்.

மேற்கூறிய மொழிகள் மாமல்லருடைய உள்ளத்தில் பதிந்து அவருடைய உற்சாகத்தையெல்லாம் போக்கடித்து விட்டன.

"சிவகாமிக்கு ஒன்றும் நேராமலிருக்க வேண்டுமே" என்பதை ஒரு மந்திரம் போல் அவருடைய மனம் ஜபித்துக் கொண்டிருந்தது. அந்த நிமிஷமே சிவகாமியைப் பார்க்க வேண்டும் என்ற அபரிமிதமான ஆசை அவருடைய இருதயத்தின் அந்தரங்கத்திலிருந்து பொங்கி எழுந்து அவருடைய உடம்பின் ஒவ்வோர் அணுத்துவாரம் வழியாகவும் வெளியே வியாபித்தது. அவருடன் கிளம்பிய குதிரைப்படை வெகு தூரம் பின் தங்கும்படியாகத் தம் குதிரையை அவர் எவ்வளவோ வேகமாகச் செலுத்திக் கொண்டு போன போதிலும் அந்த வேகங்கூட அவருக்குப் போதவில்லை.

"பிரபு! குதிரையைக் கொன்று விடுவதாக உத்தேசமா?" என்று பல தடவை பரஞ்சோதி எச்சரிக்கை செய்து அவரை நிறுத்த வேண்டியதாயிருந்தது.

இரண்டு நாள் முன்னதாகவே மண்டபப்பட்டுக்கு அவர் அனுப்பியிருந்த கண்ணபிரான் எதிரே வந்து ஏன் செய்தி சொல்லக்கூடாது என்று அடிக்கடி எண்ணமிட்டார்.

இந்த எண்ணம் அவர் தென்பெண்ணையைத் தாண்டிச் சிறிது தூரம் போனதும் நிறைவேறியது. கண்ணபிரான் ரதத்தை வேகமாக ஓட்டிக் கொண்டு எதிரே வந்தான். ஒரு கணம் ரதத்தில் வேறு யாராவது இருப்பார்களோ என்று ஆவலுடன் மாமல்லர் பார்த்தார். உடனே, அவ்விதம் எதிர்பார்ப்பதற்கு எவ்வித நியாயமும் இல்லையென்று தாமே சமாதானம் செய்து

கொண்டார்.

கண்ணபிரான் கொண்டு வந்த செய்தி மாமல்லருக்கு முதலில் ஏமாற்றத்தையளித்தது. பிறகு, அதுவே ஓரளவு ஆறுதலையும் மனச் சாந்தியையும் அளித்தது.

அந்தச் செய்தியானது, மகேந்திர பல்லவர் இரண்டு வாரத்துக்கு முன்பே தூதர்களை அனுப்பி ஆயனரையும் சிவகாமியையும் காஞ்சிக்கு வரவழைத்துக் கொண்டார் என்பதுதான்.

இதனால் தாம் போகிற வழியில் சிவகாமியைப் பார்க்க முடியாமலிருப்பது உண்மையே. அதனால் என்ன? காஞ்சியில் அவர்கள் பத்திரமாயிருப்பார்கள் அல்லவா?

யுத்தம் முடிந்ததும் முதல் காரியமாக மகேந்திர பல்லவர் ஆயனரையும் சிவகாமியையும் நினைவு கூர்ந்து அவர்களைக் காஞ்சிக்குத் தருவித்துக் கொண்டது மாமல்லருக்கு மிக்க திருப்தியையளித்தது. இதிலிருந்து பல ஆகாசக் கோட்டைகளைக் கட்டத் தொடங்கினார். எதற்காக அவர்களை அவ்வளவு அவசரமாக மகேந்திர பல்லவர் காஞ்சிக்கு வருவித்துக் கொண்டார்? எதற்காகத் தம்மையும் பாண்டிய சைனியத்தைத் தொடர்ந்து போகாமல் திரும்பி வரும்படி கட்டளையிட்டிருக்கிறார்?

ஒருவேளை தமது மனோரதத்தை அறிந்து விரைவிலேயே விவாகத்தை நிறைவேற்றி விடலாம் என்ற எண்ணமாயிருக்குமோ?

இத்தகைய பற்பல மனோராஜ்யங்களிலும், அவற்றைக் குறித்துத் தளபதி பரஞ்சோதியிடம் பேசுவதிலுமாக மாமல்லருக்கு அன்றிரவு நேரம் வராக நதிக் கரையில் சென்றது. இதற்குள் பின் தங்கிய குதிரைப் படையும் வந்து சேர்ந்தது.

மறுநாள் அதிகாலையில் எல்லோருமாகக் காஞ்சியை நோக்கிக் கிளம்பினார்கள். அன்றிரவே காஞ்சியை அடைந்து விடலாம் என்ற எண்ணத்தினால் எல்லோருக்குமே பரபரப்பு அதிகமாயிருந்தது.

வராக நதியிலிருந்து ஒரு காத தூரம் போனவுடன், எதிரே இரண்டு குதிரை வீரர்கள் வருவதைப் பார்த்ததும் எல்லாருடைய பரபரப்பும் உச்ச நிலையையடைந்தது. வருகிறவர்கள் காஞ்சியின் தூதர்களாகத்தான் இருக்க வேண்டும். என்ன செய்தி கொண்டு வருகிறார்கள்?

அருகில் நெருங்கியதும் வந்தவர்கள் குதிரை மீதிருந்து குதித்திறங்கி மாமல்லருக்கு வணக்கம் செலுத்தினார்கள். ஒருவன் மாட்டுக் கொம்பில் வைத்துப் பத்திரமாய்க் கொண்டு வந்திருந்த ஓலையைப் "பிரபு! சக்கரவர்த்தியின் ஓலை!" என்று கூறியவண்ணம் மாமல்லரிடம் கொடுத்தான். இன்னொருவன் தான் கொண்டு வந்திருந்த மற்றோர் ஓலையைப் பரஞ்சோதியிடம் கொடுத்தான்.

இருவரும் உடனே ஓலைகளைப் படிக்கத் தொடங்கினார்கள்.

அவர்கள் ஏறியிருந்த குதிரைகள் நின்றன.

ஓலைகளைக் கொண்டு வந்திருந்த தூதர்கள் நின்றார்கள்.

மாமல்லரைத் தொடர்ந்து வந்த வீரர்கள் நின்றார்கள்.

அவர்களுக்குக் கொஞ்ச தூரத்துக்குப் பின்னால் பெரும் புயலைப் போலப் புழுதிப் படலத்தைக் கிளப்பிக் கொண்டு வந்த பதினாயிரம் குதிரைப் படை வீரர்களும் நின்றார்கள்.

சற்று நேரம் காற்றுக்கூட வீசாமல் நின்றது.

மரக்கிளைகளும் இலைகளும் அசையாமல் நின்றன.

மகேந்திர பல்லவரின் ஓலையின் முதல் சில வரிகளைப் படித்ததும் மாமல்லருக்குச் சந்தேகம் உண்டாயிற்று. ஓலையை முன்னும் பின்னும்

புரட்டி அந்தரங்க அடையாளம் சரியாயிருக்கிறதா என்று பார்த்தார். தூதனையும் உற்றுப் பார்த்தார். சந்தேகமில்லை; உண்மையாகவே தந்தை எழுதிய ஓலைதான்.

உடம்பெல்லாம் படபடக்க, புருவங்கள் நெறிந்தேற, முகத்தில் முத்து முத்தாக வியர்வை துளிர்க்க, கண்கள் கலங்கிக் கண்ணீர் பெருகி அடிக்கடி எழுத்தை மறைக்க, ஒருவாறு ஓலையை மாமல்லர் படித்து முடித்தார். ஓலையில் எழுதியிருந்ததாவது.

''அருமைப் புதல்வன் வீர மாமல்லனுக்கு கர்வபங்கமடைந்த தந்தை மகேந்திர வர்மன் கண்ணில் கண்ணீருடனும் மனத்தில் துயரத்துடனும் எழுதிக் கொண்டது.

''குழந்தாய்! என்னுடைய சாணக்கிய தந்திரமெல்லாம் கடைசியில் பயனற்றுப் போய்விட்டன. நான் ஏமாந்து விட்டேன். உன்னுடைய நேர்மையான யோசனையைக் கேட்காமல் போனதற்காக அளவற்ற துயரமடைந்திருக்கிறேன். மகனே! அந்தப் பாதகப் புலிகேசி என்னை வஞ்சித்துவிட்டான். இரண்டு வாரம் காஞ்சி அரண்மனையில் விருந்துண்டு நட்புரிமை கொண்டாடிச் சல்லாபம் செய்துவிட்டுப் போனவன், மகத்தான துரோகம் செய்துவிட்டான். தொண்டை மண்டலத்துக் கிராமங்களையும், பட்டணங்களையும் கொளுத்தவும், சிற்பங்களையெல்லாம் உடைக்கவும், குடிகளை இம்சிக்கவும் அந்த மூர்க்க ராட்சதன் கட்டளையிட்டிருக்கிறானாம். ஐயோ! குமாரா! எப்படி உன்னிடம் சொல்வேன்? பல்லவ ராஜ்யத்தின் சிறந்த கலைச்செல்வம் பறிபோய் விட்டதோ என்றும் ஐயுறுகிறேன்.

''மாமல்லா! என்னை மன்னித்து விடு! இதோ என்னுடைய தவறுகளுக்குப் பிராயச்சித்தம் செய்து கொள்ளப் புறப்படுகிறேன். மூர்க்க சளுக்க வீரர்களின் கொடுமைகளிலிருந்து நமது குடிகளைக் காப்பாற்றப் புறப்படுகிறேன். கோட்டையிலுள்ள சைனியங்களை அழைத்துக் கொண்டு கிளம்புகிறேன். சேனாபதி கலிப்பகையும் என்னுடன் வருகிறார்.

''குமாரா! காஞ்சி சுந்தரி பாதுகாப்பாரின்றி அனாதையாக இருக்கிறாள். நீயும் உன் தோழன் பரஞ்சோதியுந்தான் அவளைக் காப்பாற்ற வேண்டும். காஞ்சிக் கோட்டைக்கு நான் திரும்பி வருவேனா என்பது சந்தேகம். உன்னை உயிரோடு பார்ப்பேன் என்பதும் நிச்சயமில்லை. போர்க்களத்தில் எனக்கு வீர மரணம் கிடைத்தால், அதைக் காட்டிலும் நான் பெறக்கூடிய பேறு இனிமேல் வேறு ஒன்றும் இல்லை.''

''மகனே! நான் செய்த துரோகத்தை மன்னித்து, மறந்து விடு! என்னையும் அடியோடு மறந்துவிடு! ஆனால் அறுநூறு ஆண்டுகளாக வாழையடி வாழையாய் வந்த பல்லவ வம்சத்துக்கு இனிமேல் உன்னைத் தவிர வேறு கதியில்லையென்பதை மட்டும் மறந்து விடாதே!''

மாமல்லர் மேற்படி ஓலையைப் படித்து முடிப்பதற்கு வெகு நேரத்துக்கு முன்னாலேயே தளபதி பரஞ்சோதி தமக்கு வந்த ஓலையைப் படித்துவிட்டார். அது மாமல்லருக்கு வந்த ஓலையைப் போலன்றி மிகவும் சுருக்கமாயிருந்தது.

''அருமைப் பரஞ்சோதிக்கு!

'நீ என்னைப் பலதடவை 'நீங்கள் வாழ்க்கையில் தவறே செய்தது கிடையாதா?' என்று கேட்டதுண்டு. நானும் அகம்பாவத்துடன் 'கிடையாது' என்று சொல்லி வந்தேன். இப்போது என் வாழ்க்கையில் மகா பயங்கரமான தவறைச் செய்துவிட்டேன். இராஜ தந்திரத்தினால் சத்துருவை நண்பனாகச் செய்து கொள்ளப் பார்த்தேன். நேர் மாறான பலன் கிடைத்தது. அந்தத் தவறுக்குப் பிராயச்சித்தம் செய்வதற்காக

இதோ போர்க்களத்துக்குப் புறப்படுகிறேன்.

"இச்சமயம் என் பக்கத்தில் நீ இல்லையே என்று வருத்தமாயிருக்கிறது. ஆனாலும் மாமல்லன் அருகில் இச் சமயம் நீ இருப்பதுதான் அதிக அவசியமானது.

"நான் பல தடவையும் உன்னிடம் சொல்லியிருப்பதை மறந்து விடாதே. பல்லவ வம்சம் சந்ததியின்றி நசித்துப் போகக்கூடாது. மாமல்லனை உன்னிடம் ஒப்படைக்கிறேன்."

மாமல்லர் ஓலையை இரண்டு மூன்று தடவை படித்த பிறகு பரஞ்சோதியிடம் ஏதோ சொல்ல முயன்றார். ஆனால் வார்த்தைகள் வரவில்லை. எனவே ஓலையைச் சிநேகிதரின் கையில் கொடுத்தார்.

பரஞ்சோதி அதை விரைவிலேயே படித்து முடித்துவிட்டு, "ஐயா! நான் குதிரைப் படையுடன் முன்னதாகப் போகிறேன். தாங்கள் இங்கேயே தங்கிப் பின்னால் வரும் காலாட் படையையும் அழைத்துக் கொண்டு வந்து சேருங்கள்!" என்றார்.

"நல்ல காரியம் தளபதி! என் உடம்பு இங்கே இருக்கிறதே தவிர என் உயிர் ஏற்கெனவே என் தந்தைக்கருகில் போய்விட்டது. இனிமேல் வழியில் தங்குவது என்பது கிடையாது. காலாட்படை வருகிறபடி வரட்டும். குதிரைப் படையுடன் நாம் முன்னதாகப் போக வேண்டியதுதான்" என்றார் மாமல்லர்.

சற்று நேரத்துக்கெல்லாம் அந்தப் பிரதேசமானது நாலு கால் பாய்ச்சலில் சென்ற ஆயிரக்கணக்கான குதிரைகளின் காலடியினால் அதிர்ந்தது. கண்ணுக் கெட்டிய தூரம் ஒரே புழுதிப் படலமாயிற்று.

## முப்பதாம் அத்தியாயம்

## "சிவகாமி எங்கே?"

ஆயனர் தமது பழைய சிற்ப வீட்டை அடைந்ததிலிருந்து நரக வேதனை அநுபவித்துக் கொண்டிருந்தார்.

மலையிலிருந்து விழுந்ததினால் முறிந்து போயிருந்த அவருடைய வலது கால் சொல்ல முடியாத வலியையும் வேதனையையும் அவருக்குத் தந்து கொண்டிருந்தது.

சிவகாமியை இழந்ததினால் அவருடைய உள்ளம் அளவில்லாத துன்பத்தை அனுபவித்துக் கொண்டிருந்தது.

மண்டபப்பட்டிலிருந்து ஆயனரும் சிவகாமியும் சக்கரவர்த்தி அனுப்பிய பல்லக்கில் அவசரமாகக் கிளம்பிய போது ஆயனரின் சகோதரியைப் பின்னால் சாவகாசமாக வண்டியில் வந்து சேரும்படி சொல்லியிருந்தார்கள். அதன்படியே அந்த அம்மாள் முக்கியமான வீட்டுப் பொருள்களுடன் ரதியையும் சுகரையும் வண்டியில் ஏற்றிக்கொண்டு பழைய அரண்ய வீட்டுக்கு வந்து சேர்ந்திருந்தாள். அந்த அம்மாள் அவ்விதம் முன்னாடியே வந்து சேர்ந்திருந்தபடியாலேயே ஆயனர் இன்னும் உயிரோடிருப்பது சாத்தியமாயிற்று.

அவருக்கு வேண்டிய சிகிச்சைகளையும் சிசுருஷைகளையும் அந்த அம்மாள் மிக்க பக்தி சிரத்தையோடு செய்து அவரை உயிர் பிழைக்கப் பண்ணியிருந்தாள்.

ஆனாலும் அவள் அடிக்கடி கேட்டு வந்த ஒரு கேள்வியானது புண்ணிலே கோலெடுத்துக்குத் குத்துவது போல் அவருடைய இருதயத்தை நோகச் செய்து கொண்டிருந்தது.

அந்தக் கேள்வி, "சிவகாமி எங்கே?" என்பது தான்.

சோகக் கடலில் ஆழ்த்தும் மேற்படி கேள்வியை நிறுத்துவதற்காக ஆயனர் ஏதேதோ மறுமொழி சொல்லிப் பார்த்தார். அவையொன்றும் சிவகாமியின் அத்தைக்குப் பிடிபடவே இல்லை. எனவே அவள் கேள்வி கேட்பதை நிறுத்தவில்லை.

இது போதாதென்று ரதியும் சுகரும் அடிக்கடி ஆயனரிடம் வந்து முகத்தைத் தூக்கிக் கொண்டு நின்று சப்தமற்ற குரலில் தங்களுடைய மௌனக் கேள்வியை அடிக்கடி கேட்டுக் கொண்டிருந்தார்கள். ஆயனர் கடுமையான குரலில் அதட்டி அவர்களை அப்பால் போகும்படி செய்வார்.

சுகப்பிரம்மரிஷி இப்போதெல்லாம் அதிகமாகத் தம் குரலை வெளியில் காட்டுவதில்லை. சில சமயம் திடீரென்று நினைத்துக் கொண்டு பலமான கூக்குரல் போடுவார். அப்போது அவருடைய தொனி "சிவகாமி எங்கே?" என்று கேட்பது போலவே இருக்கும்.



ரண்ய வீட்டுச்சுற்றுப் பக்கமெல்லாம் ஏதோ பெரிய அல்லோலகல்லோலம் நடந்து கொண்டிருந்ததாகத் தோன்றியது.

திடீர் திடீரென்று காட்டிற்குள்ளும் அப்பாலும், சமீபத்திலும் தூரத்திலும் பலர் கூச்சலிட்டுக் கொண்டு ஓடும் சப்தம் கேட்கும்; போர் முழக்கங்கள் கேட்கும், அழுகையும் புலம்பலும் சில சமயம் கேட்கும். இரவு நேரங்களில் சுற்றுமுற்றும் பார்த்தால் திரள் திரளாகப் புகையும் நெருப்புச் சுவாலையும் எழுவது தெரியும்.

அந்த வனத்தில் வசித்த பட்சிகளிடையே என்றும் காணாத மௌனம் சில சமயம் நிலவியது. திடீரென்று பல்லாயிரம் பட்சிகள் ஏக காலத்தில் கூச்சலிடும் சப்தம் கேட்டது.

ஒரு நாள் அந்த அரண்யத்துக்கு வெகு சமீபத்தில் எங்கேயோ ஒரு பெருஞ் சண்டை நடக்கிறதென்பதற்கு அறிகுறிகள் தெரிந்தன.

போர் முரசங்களின் பேரொலியும், போர் வீரர்களின் ஜய கோஷமும், குதிரைகளும் மனிதர்களும் நடமாடும் சத்தமும், ஆயுதங்கள் மோதும் ஓசையும் இடைவிடாமல் கேட்டுக்



## அருள்வாக்கு

பொதுவாகவே பணத்தின் 'டச்' (ஸ்பரிசம்) வந்துவிட்டால் அதோடு ஒரு காரியத்தில் அநேகக் கெடுதல்கள் வந்துவிடும். பொதுத் தொண்டு செய்யப் புறப்படுகிறவர்கள் பண விஷயத்தில் ரொம்பவும் ஜாக்கிரதையாயிருக்க வேண்டும். நல்ல ஆதரவு, திரவிய ஸஹாயமாகவும், நம் கார்யத்துக்குக் கிடைத்தால்கூட, அதனால் over-enthusiastic ஆகி (அதீத உத்ஸாஹம் அடைந்து) ambitious planning (அதி ஆசைத் திட்டம்) போட்டு நிறையப் பணம் 'கலெக்ட்' பண்ண ஆரம்பிக்கக் கூடாது. இப்படி ஆரம்பித்தால் அதற்கு ஒரு முடிவே இருக்காது. இதனாலே பரோபகாரம் என்கிற அன்பு எண்ணத்தையும், அதில் அங்கமாகச் செய்கிற தேவாலய கைங்கர்யங்களின் பக்தி எண்ணத்தையும் கூட, 'வசூல் எண்ணம்' முழுங்கி விடும். எப்போது பார்த்தாலும் ரசீது புஸ்தகமும் கையுமாக அலைவதும், 'பேப்பர்காரர்களைப் பிடித்து அப்பீல் பண்ணலாமா? அட்வர்டைஸ்மென்ட் பிடித்து ஸோவனீர் போடலாமா?' என்பதே சிந்தையாகத் தவித்துக் கொண்டிருக்கும்படியும் ஆகும். நிறையப் பணம் சேர்ந்து, அதைக் கையாள வேண்டியிருக்கும்போது நாமே எப்படி மாறிப் போய்விடுவோமோ என்ற பயம் ஸதாவும் இருக்கணும். அதுவுமில்லாமல், ரொம்பவும் பணம் சேர்த்தால் ஊரிவிருப்பவர்களுக்கும் அது ஸரியாகப் பிரயோஜனமாகிறதா என்ற ஸந்தேஹம் எழும். இதோடு கூட இஷ்டமில்லாதவனையும் நிர்ப்பந்தப்படுத்தி வாங்குவதும், இப்படி வாங்கி விட்டதால் அப்புறம் அவனிடம் பந்தப்பட்டு நிற்பதும் நம் பணியையே அசுத்தம் செய்து விடும். ஆனதால் எந்த நல்ல காரியமானாலும் 'அதி'யாக அதைக் கொண்டு போய்விடாமல், அவசியத்தோடு நிறுத்திக் கொண்டு, செட்டும் கட்டும் சிக்கனமுமாகவே அதற்கான வரவு செலவுகளை நிர்வஹிக்க வேண்டும்.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்**

கொண்டிருந்தன.

சாயங்காலம் திடீரென்று ஐந்தாறு வீரர்கள் மேலெல்லாம் இரத்தக் காயங்களுடன் "தண்ணீர்! தண்ணீர்!" என்று கூவிக் கொண்டு ஆயனர் வீட்டுக்குள் நுழைந்தார்கள். அவர்கள் பல்லவ வீரர்கள்தான் என்று தெரிந்து கொண்டதும், ஆயனர் தாம் படுத்திருந்த இடத்திலிருந்தே அவர்களை வரவேற்றுத் தம் அருகில் உட்காரச் சொல்லிச் சகோதரியைக் கொண்டு அவர்களுக்குத் தண்ணீரும் கொடுக்கச் செய்தார். பிறகு, அவர்கள் எங்கே எப்படி காயமடைந்தனர் என்பது பற்றி விசாரித்தார்.

"இதென்ன உங்களுக்கு ஒன்றுமே தெரியாதா?" என்று அவ்வீரர்கள் வியப்புடன் கேட்டனர்.

ஆயனர் அவர்களுக்குத் தமது முறிந்த காலைச் சுட்டிக் காட்டினார்.

வந்த வீரர்கள் அந்தக் காலையும் சுற்றுமுற்றும் உடைந்து கிடந்த சிலைகளையும் பார்த்துவிட்டு, "ஐயோ! சளுக்க ராட்சதர்கள் இந்த வீட்டுக்குள்ளும் புகுந்து இப்படியெல்லாம் அக்கிரமங்கள் செய்துவிட்டார்களா?" என்று வருத்தப்பட்டார்கள்.

பிறகு அந்த வீரர்களில் ஒருவன், புலிகேசி காஞ்சியை விட்டுப் போனதிலிருந்து அன்று மணிமங்கலத்துக்கருகில் நடந்த பயங்கரமான சண்டை வரையில் எல்லாம் விவரமாகச் சொன்னான். அவன் கூறியதின் சாராம்சமாவது:

புலிகேசி கோட்டையிலிருந்து வெளியேறியதும் தன்னுடைய சைனியத்தைச் சிறு சிறு படைகளாகப் பிரித்துப் பல்லவ நாட்டுக் கிராமங்களைச் கொளுத்தவும், ஜனங்களை இம்சிக்கவும், சிற்பங்களை நாசமாக்கவும், சிற்பிகளை அங்கஹீனம் செய்யவும் கட்டளையிட்டு அனுப்பினார். இதையறிந்த சக்கரவர்த்தி கோட்டைக்குள்ளிருந்த சொற்பப் படைகளுடன் வெளிக் கிளம்பினார். அன்று காலையில் மணிமங்கலம் என்னும் கிராமத்துக்கருகில் புலிகேசியின் படை வீரரும் பல்லவ வீரர்களும் கைகலந்தார்கள். புலிகேசியின் வீரர்கள் எண்ணிக்கையிலும் ஆயுத பலத்திலும் அதிகம் ஆன போதிலும் மகேந்திர

சக்கரவர்த்தியே நேரில் தலைமை வகித்த படியால் காஞ்சி வீரர்கள் பிரமாதமான வீரப் போர் நடத்தினார்கள். எதிர்ப்பக்கத்தில் வாதாபிச் சக்கரவர்த்தி புலிகேசியே தலைமை வகித்து நடத்தினார். இரு சக்கரவர்த்திகளும் போர்க்களத்தின் மத்தியில் நேருக்கு நேர் சந்தித்து வீரவாதம் செய்த பிறகு ஒருவரையொருவர் தாக்கிக் கொண்டார்கள்.

பல்லவ சைனியம் ஏறக்குறைய தோல்வியடைந்திருந்த நிலைமையில், சற்றுத் தூரத்தில் பெரிய குதிரைப் படை ஒன்று வரும் சத்தம் கேட்டது. ரிஷபக் கொடியைப் பார்த்ததும், "இதோ மாமல்லர் வந்துவிட்டார்!" என்ற கோஷம் கிளம்பியது. சற்று நேரத்துக்கெல்லாம் மாமல்லரின் குதிரை வீரர்கள் சளுக்கர் படை மேல் இடியைப் போல் விழுந்து தாக்கினார்கள்.

சளுக்க வீரர்கள் ஓட ஆரம்பித்தார்கள். அரக்கன் புலிகேசியும் ஓடிப்போனான். ஆனால் போகும்போது தன் கையிலிருந்த சிறிய கத்தி ஒன்றை மகேந்திரர் மீது குறி பார்த்து எறிந்துவிட்டான். மகேந்திரர் பிரக்ஞை இழந்து தரையில் விழுந்தார்.

வாதாபி வீரர்கள் போர்க்களத்தை விட்டு ஓடிய பிறகு மாமல்லரும் பரஞ்சோதியும் மகேந்திர பல்லவர் விழுந்திருந்த இடத்துக்கு வந்தார்கள். அவருக்குத் தக்க சிகிச்சை செய்து காஞ்சிக்குப் பத்திரமாய் எடுத்துப் போகக் கட்டளையிட்டு விட்டு, புறமுதுகிட்டு ஓடிய வாதாபி வீரர்களைப் பின் தொடர்ந்து சென்றார்கள்.

மேற்படி விவரங்களைக் கூறிய பின்னர் காயமடைந்த பல்லவ வீரர்கள் காஞ்சியை நோக்கிச் சென்றார்கள்.

மகேந்திர பல்லவருக்கு மரண காயம் என்பதைக் கேட்டதில் ஆயனர் அளவற்ற துயரமடைந்தார். ஆனாலும் மாமல்லரும் பரஞ்சோதியும் சளுக்க வீரர்களைத் தொடர்ந்து போயிருக்கிறார்கள் என்னும் செய்தி அவருக்குச் சிறிது ஆறுதலையளித்தது. அவர்கள் சிவகாமியைச் சிறை மீட்டுக் கொண்டு வந்துவிடுவார்கள் என்ற நம்பிக்கை அவருடைய உள்ளத்தில் உதயமாகியிருந்தது.

மணிமங்கலம் சண்டை நடந்து ஒரு வாரம் ஆகிவிட்டது. ஆயனர் தினந்தோறும் ஏதேனும் நல்ல செய்தி வராதா என்று ஆவலுடன் காத்திருந்தார். வாசலில் ஏதேனும் சத்தம் கேட்டால் அவர் திடுக்கிடுவார். யாரோ செய்தியுடன் வருகிறார்கள் என்று பரபரப்புடன் எழுந்து உட்காருவார்.

இம்மாதிரி எத்தனையோ தடவை ஏமாற்றம் அடைந்த பிறகு கடைசியில் உண்மையாகவே இரண்டு குதிரைகள் அவர் வீட்டை நெருங்கி வரும் சத்தம் கேட்டது. வந்த குதிரைகள் வீட்டு வாசலில் நின்றன என்பது தெரிந்தது.

வாசற்படி வழியாக நுழைந்து வரப் போகிறவர்கள் யார் என்று கொட்டாத கண்களுடனும் துடிதுடித்த நெஞ்சுடனும் ஆயனர் பார்த்துக் கொண்டிருந்தார். அவருடைய ஆசை வீண் போகவில்லை. ஆம்! மாமல்லரும், பரஞ்சோதியும்தான் உள்ளே வந்தார்கள்.

அவர்களைப் பார்த்ததும் முதலிலே ஆயனருடைய முகத்தில் மகிழ்ச்சிக் களை படர்ந்தது. ஆனால் அவர்கள் நெருங்கி வரவர மகிழ்ச்சி குன்றியது.

மாமல்லரின் முகத்தில் தோன்றிய கேள்விக் குறியானது ஆயனருடைய உள்ளத்தில் சகிக்க முடியாத வேதனையை உண்டாக்கிற்று.

மாமல்லர் வாய் திறந்து கேட்பதற்கு முன்னால் அவர் கேட்கப் போகும் கேள்வியைத் தாமே கேட்டு விடத் தீர்மானித்தார் ஆயனர்.

அந்தச் சிற்ப மண்டபமும், வெளியிலிருந்த அரண்யமும் பிரதித்வனி செய்யும்படியான சோகம் நிறைந்த குரலில், "பிரபு! என் சிவகாமி எங்கே?" என்று அலறினார்.

(தொடரும்)

ஆங்கிலத் தலைப்புகளின் மோகத்தில் கட்டுண்டு கிடக்கும் கோடம்பாக்கத்தில் சமீபத்திய ஆறுதலாக, தமிழ்த் தலைப்பொன்று கண்ணில்பட்டது நதிகரையினிலே! நதிக்கும், கரைக்கும் இடையில் வரவேண்டிய ஒற்றெழுத்தான 'க்' காணாமல் போயிருக்கும் போது, இது எப்படி நல்ல தமிழ்த் தலைப்பாகும்? சந்தேகத்தை படத்தின்



• நதிகரையினிலே - ராம்ஜி, சுவலட்சுமி

# கட்சி ஆரம்பிக்கிறார் சரத்?



• காயத்ரி ரகுராம்

இயக்குனர் பொன் வண்ணனிடம் கேட்டோம். "தெரிந்தே தான் ஒற்றெழுத்தை ஓரம் கட்டினோம். படத்தின் கதை அப்படி" என்று பொடி வைத்துப் பேசினார்.

"படத்தில் நதி ஒரு பாத்திரம். அதன் ஒரு கரையில் கணவன். மற்றொரு கரையில் தகப்பன். சமூகமென்கிற நதி வெள்ளத்தில் தத்தளித்துக் கொண்டிருக்கும் நாயகி, எந்தப் பக்கமும் கரையேற முடியாம கஷ்டப்பட்டுகிறாள். இது நதியின் ஒரு கரையில் நடக்கும் கதையல்ல. அதன்

இருகரைகளையும் உள்ளடக்கிய கதை. எனவேதான் ஒற்றெழுத்தைத் தவிர்த்தோம். (தமிழுக்குப் பொன் வண்ணமான புது இலக்கணம், போங்க!) சாரா அபு பக்கர் எழுதி 'சந்திரகிரி ஆற்றங்கரையிலே' என்ற சிறுகதையைப் படித்து முடிந்ததும், எழுந்த கொதிநிலை காரணமாக இந்தப் படத்தை உருவாக்கினேன்'' என்கிறார் இயக்குனர்.

ஆனால் ''தலாக் முறையை மறுபரிசிலனைக்கு உட்படுத்தும் கமர்ஷியல் சினிமா இது'' என்று கவனமாகப் பேசுகிறார் பொன்வண்ணன்.



* பாப்கார்ன் - மோகன்லால், சிம்ரன்



* கட்சிக் கொடி

நல்ல சினிமா எடுத்து கையைச் சுட்டுக் கொண்ட நாசர் இந்த முறை, மோகன்லால், சிம்ரன், விவேக் என்று வியாபாரமாகும் முன்னணி நட்சத்திரங்களைக் கொண்டு 'பாப்கார்னை' இயக்கி முடித்திருக்கிறார். ''படத்தின் தலைப்பே படுகமர்ஷியல் என்பதைச் சொல்கிறதே, எப்போ கொறிக்கத் தரப் போறீங்க'' என்றால், டிசம்பர் இறுதியில் என உறுதி தருகிறார். ''மோகன்லால் ஒரு பாடகர், சிம்ரன் ஒரு நடனக் கலைஞர். இவர்கள் இருவரும் இணைந்து, இசை, நடனம் இரண்டிலும் மேற்கொள்ளும் புது முயற்சிக்குச் சவாலாக முளைக்கும் மரபு ரீதியான பிரச்சனைகளைத்தான் உணர்ச்சி பூர்வமான கதையாகக் கையாண்டு இருக்கிறேன்'' என்கிறார்.

விரைவில் மத்திய இணையமைச்சராக ஆகப் போகிறார் என்று தகவல்கள் கசிய ஆரம்பித்ததில் கலங்கிப் போய் அலறி அடித்துக் கூப்பிட்டார் சரத்குமார்.

'' 'திவான்', 'அரசு', '1977' உட்பட நான்கு படங்களை ஒப்புக் கொண்டு பிஸியாக நடித்துக் கொண்டிருக்கிறேன். இப்போது இப்படியொரு வதந்தி கிளம்பினால், என்னை வைத்து முதலீடு செய்துள்ள தயாரிப்பாளர்கள் என்ன நினைப்பார்கள்? தலைவரே கூப்பிட்டு 'மந்திரிப் பதவியை ஏற்றுக் கொள்'னு சொன்னாலும் மறுத்து விடுவேன். என்னை வளர்த்து விட்ட சினிமாவுக்குத்தான் முதல் மரியாதை'' என்று பெரிய முழக்கமே செய்துவிட்டார். கையோடு பிற கட்சிகளைச் சேர்ந்தவர்களும் தமது ரசிகர்களாக இருப்பதால்... ''பொதுவாகப் பயன்படுத்த வேண்டி, இந்தக் கொடியை வெளியிடுகிறேன்'' என்று தமது ரசிகர் மன்றக் கொடியை அறிமுகப்படுத்தினார்.

மிஸ்டர் சரத்... எப்போ கட்சி ஆரம்பிக்கிறதா இருக்கீங்க?



முதலில் அறிமுகமான காயத்ரி ஜெயராமை, தமது நடனத் திறமையால் ஓவர்டேக் செய்தார் காயத்ரி ரகுராம். இப்போது 'ஏப்ரல் மாதத்தில்' படத்தில், காயத்ரி ஜெயராம் போட்டிருக்கும் அதிரடி, ஆட்டத்தில் கலங்கிப் போய் இருக்கிறாராம் காயத்ரி ரகுராம்!

"குண்டு வெடிக்கும் பின்னே, புரளி வரும் முன்னே" என்ற புது மொழியே பிறக்குமளவுக்கு, பாப்ரி மசூதி இடிப்பின் பத்தாவது ஆண்டு நிறைவை ஒட்டி, அத்தனை வெடிகுண்டுப் புரளிகள்! எலக்ட்ரிசிடி போர்டின் தலைமையகம், பாந்த்ரா கோர்ட்டு, ரயில்வே, பஸ் நிலையங்கள், ஷாப்பிங் மால்கள் என்று விதவிதமான இடங்களுக்கு வெடிகுண்டு மிரட்டல்கள் வந்து, காவல் படையை கண்ணுறங்காமல் அடித்தது. பயத்தால் அவரவர் சூட்கேஸுகளையும், கைப் பைகளையும் விட்டுவிட்டு ஓட, அவற்றால் வேறு புதுக் குழப்பம்! மும்பை சென்ட்ரல் பாலத்திற்கு மேலே, ஒரு டாக்டரே தன் பெட்டியை விட்டு விட்டு ஓட, மோப்ப நாய்கள் அதைச் சுற்றிச் சுற்றி வந்து குரைக்க, போலீசோ, இது வெடிகுண்டுக் குரைப்பா, சாதாரணக் குரைப்பா என்று புரியாமல் திணறியது. அரை மணி நேரம் வேலை செய்தால், இரண்டு மணி நேர ஓய்வு கொடுக்கப்பட வேண்டுமாம் மோப்ப நாய்களுக்கு. தொடர்ந்து பன்னிரண்டு மணி நேரம் உழைத்ததில் அவையே தடுமாறிவிட்டன. கடைசியில்... மும்பை சென்ட்ரல் ரயில் நிலையத்திலுள்ள மெக்டொனால்டு உணவகத்தில், ஒரு நாற்காலியின் அடியிலிருந்து நாட்டு வெடிகுண்டு ஒன்று வெடிக்க, இருபத்தைந்து பேர் படுகாயமடைந்ததுடன், அமளி ஓய்ந்தது. அங்கேயே, உணவருந்திய யாரோதான் குண்டை வைத்திருக்கிறார்களாம்! உண்ட வீட்டுக்கே ரெண்டகம்? உப்பிட்டவருக்கே துரோகம்?

# "அபுசலீமா? அப்பாவன்னா?"



துரோகம்... அதுவும் பச்சைத் துரோகம் என்பதல்லால் வேறு என்னென்றுரைப்பது?" யூ டு ஷாருக்? யூ டூ ராகேஷ் ரோஷன்?" என்று ஷேக்ஸ்பியர் ஸ்டைலில் வேண்டுமானால் அங்கலாய்க்கலாம். இருவருமாக, 'அண்டர் வர்ல்ட்' எங்களைத் துரத்துகிறது, பணம் கேட்டு மிரட்டுகிறது என்றெல்லாம் புலம்பி, அனுதாப அலைகளைப் பரப்பி, சோட்டா ஷகில், அபுஸலாம் போன்ற டான்களின் பெயர்களை சாதாரணர்கள் மத்தியில் பாப்புலராக்கிவிட்டு, இப்போது



என்னவென்றால்.. பரத்ஷா, ரிஜ்கி போன்ற தயாரிப்பாளர்கள் மேல் தொடுக்கப்பட்டிருக்கும் வழக்கில் சாட்சி சொல்லும் போது, 'சோடா ஷகிலா? அபுசலீமா? அதாரு?' ரேஞ்சில் பேய் விழி விழித்திருப்பது அடாத செயல். பப்ளிக் ப்ராசிக்யூடர் திருமதி சாலியன், 'நல்லா டயலாக் அடிக்கிறீங்க' என்று ஷாருக்கிடம் சொன்னதற்கு, 'உலகிலேயே தலை சிறந்த நடிகன் நான்' என்று அவர் மார் தட்டியதும், 'சோடா ஷகிலிடமிருந்து ஃபோன் வந்தால் பயப்படுவீர்களா?' என்று அவர் கேட்டதற்கு, 'உங்களிடமிருந்து ஃபோன் வந்தால்தான் பயப்படுவேன் மேடம்' என்று நக்கலடித்திருப்பதும்... சகிக்கவில்லை! யாரையோ காப்பாற்றுவதாக நினைத்துக் கொண்டு, தங்களைக் காப்பாற்ற வந்தவர்களையே தாக்குகிறார்களே... இது நியாயமா?

நியாயமானதாகப்படவில்லை... 'டான்ஸ் பாலே' என்று போட்டுவிட்டு, அதில் டான்சைத் தேட வைத்து விட்டார்களே? அண்மையில் ஷண்முகானந்தாவில் நடந்த, ஹேமமாலினியின் 'திரௌபதி டான்ஸ் பாலேவில் 60% நாடகம், 30% வீடியோ கிளிப்பிங்ஸ், போக 10% தான் நாட்டியமிருந்தது! கிட்டத்தட்ட மஹாபாரதம் டெலி ஸீரியலைப் பார்ப்பது போல் தானிருந்தது; ஆனாலும் ஹாலில் நிரம்பி வழிந்த கூட்டம், 'ஆஹா... ஹேமமாலினி இந்த வயசிலும் என்ன அழகா இருக்காங்க... ஒயிலா மூவ்மெண்ட்ஸ் குடுக்கறாங்க' என்று வாய் பிளந்தது! கலை வேறு... கலா ரசிகர்கள் வேறுதான்!

வேறு வேறு கருத்துக்கள் இருக்க முடியாத ஒரு விஷயம்... குரு மஹாலிங்கம் பிள்ளையின் நாட்டிய மேதைத்துவம்; பரதத்துக்காகவே தம் வாழ்க்கையை அர்ப்பணித்துக் கொண்ட இந்த முதுபெரும் கலைஞரின் மறைவினால், நாட்டிய உலகில் சோக இருள் கவிந்தது. ராஜ ராஜேஸ்வரி நாட்டிய கலா மந்திரில் வைக்கப்பட்டிருந்த அவரது பூத உடலுக்கு, இறுதி மரியாதை செலுத்த சபா நிர்வாகிகளும், கலைஞர்களும், ரசிகர்களும் ஏராளமாகத் திரண்டிருக்க, நடிகை பத்மினி போன்றவர்கள், அமெரிக்காவிலிருந்து தொலைபேசியில் துக்கித்தனர். குரு பரம்பரையில் ஒரு சகாப்தம் முடிந்துவிட்டது தான்; ஆனால் கலைஞர்களுக்கும் கலைக்கும் அழிவேது?

கலைக்கு அழிவே இல்லை என்றுதான் மும்பையில் பதினைந்து நாட்கள் இத்தாலிய விழாவை நடத்தும் 'இந்தோ – இத்தாலியன் சேம்பர் ஆஃப் காமர்ஸ் அண்ட் இண்டஸ்ட்ரி'க்காரர்கள் சொன்னார்கள். அண்மையில் என்.சி.பி.ஏ. டாட்டா தியேட்டரில் நடந்த புகைப்பட, ஆடைக் கண்காட்சிக்குச் சென்றிருந்தபோதுதான், இத்தாலியை இந்தியர்களுக்கு அறிமுகப்படுத்தும் முயற்சியை அவர்கள் ஆடை அணிகலன்கள், புகைப்படம், இசை, சினிமா, உணவு, ஃபாஷன் ஷோ போன்றவற்றின் கண்காட்சிகளின் வழியாக மேற்கொண்டிருப்பதை உணர்த்தினார்கள். அர்மானி, வாலண்டினோ, குக்கி, வர்ஸேஸ், ட்ருஸார்டி, ஃபெண்டி, ஃபெரங்காமோ பேலஸ்ட்ரா போன்ற வாயில் பெயர் நுழையாத டிசைனர் பிரபலங்களின் ஆடைகளைச் சுற்றிக் காட்டிய போது, 'இது அந்த நடிகைக்காக வடிவமைத்தது, இதை இந்த நடிகை போட்டுக் கொண்டார்' என்று ஒரே சினிமா புகழ் பாடினார்கள். இத்தாலிய ஆடைகள் இப்போது ஹாலிவுட்டிலும் பிரபலமென்றார்கள். ஹூம்... எங்கும் சினிமா மோகம்தான்!

– ஜெய்ஸ்ரீ ராஜ்

**வெ**வ்வேறு தலைமுறையைச் சேர்ந்த பாடகர்கள். ஆனால், குரலில் அதே கம்பீரம், பாட்டில் அதே உற்சாகம், விறுவிறுப்புக்குப் பெயர் போனாலும் பாவத்துக்குக் குறைவில்லாத சங்கீதத்தால், ரசிகர்களைத் தங்களோடு கட்டியிழுத்துக் கொண்டு போய்விடுவார்கள்...

# தகர்ந்து விழுந்த தலைமுறை இடைவெளி



அடுத்தடுத்து இருவரும் பாடக் கேட்டதில் கண்ணில் பட்ட (கண்ணில்தான் - காதில் அல்ல!) இன்னொரு ஒற்றுமை - இருவருமே பாடுவதற்குத் தொண்டையை மட்டுமின்றி உடம்பு முழுவதையும் உபயோகிக்கிறார்கள்! ஆனாலும் இறுதிவரை சளைக்காமல் காட்டாற்று வெள்ளம்போல் பாய்ந்து குதித்து நீடிக்கும் அவர்களுடைய சங்கீத சக்திக்கு முதல் பாராட்டு!

கார்த்திக் ஃபைன் ஆர்ட்ஸில் (நாரத கான சபா அரங்கம்) டி.வி.எஸ். கச்சேரி - அவருடைய முத்திரை முதல் பாட்டுடன் ஆரம்பித்தது - கணநாதனே. இதற்கான கற்பனை ஸ்வரங்களின் கலகலப்பு, பக்கவாத்தியக் கலைஞர்களை (டெல்லி சுந்தர்ராஜன் வயலின், திருவாரூர் பக்தவத்சலம் மிருதங்கம், வி.சுரேஷ் கடம்) நிகழ்ச்சிக்குள் உடனடியாக அரவணைத்துக் கொண்டது. முகர்சிங்கின் சுண்டியிழுக்கும் 'ரீங்காரமும்' இருந்தால் இன்னும் ஜோராய் இராதோ!

## தும்புரு

மிஸ்ர சாபு - தர்பார் சேர்க்கையில் அடுத்த பாட்டு. நாராயண தீர்த்தர் தரங்கம் - என்பது புரிகிறது. வார்த்தைகள்...? தோராயமாய் எழுதிவிட்டு மாட்டிக்கொள்ள நான் தயாராயில்லை. ஆளைவிடுங்கள்.



அடுத்து மோகன கல்யாணி ஆலாபனை. எதிர்பார்த்ததுபோலவே, 'புவனேஸ்வரியா' - என்று எடுக்க, ரசிகர்களிடையே திருப்தி மிக்க சலசலப்பு. மதுரை மணியை நினைவூட்டும் கற்பனை ஸ்வரங்கள் - படிக்கட்டுப் பிரயோகங்களில் ஏறி இறங்கி, தாவிக் குதித்து... கைத்தட்டித் தீர்த்து விட்டனர்

* டி.எம்.கே.






• சின்மயா சகோதரிகள்

ஆனால், தொண்டையின் கர கரப்பு மாறி இப்போது நன்றாக இழைய ஆரம்பித்துவிட்டது. 'ராமனுக்கு' என்ற அருணாசலக் கவிராயர் பாட்டு. 'பட்டம் கட்ட ஏற்றவன்' என்ற கடும் பிரயோகத்தை நிரவலுக்கு எடுத்துக் கையாள வேண்டுமா என்ற உறுத்தலை, மீண்டும் ஊதித் தள்ளுகிறது அவருடைய உற்சாகம்.

ஹிந்துஸ்தானி பிரயோகங்கள் தலை காட்டாத காபி ராக ஆலாபனையின் முடிவில் 'இந்த சௌக்ய' கீர்த்தனை; அதன் முடிவில் கற்பனை ஸ்வரங்கள்; அவை முடித்ததும் ஆரம்பித்த தனியாவர்த்தனம் - யாவும் ஒரு முழு உருவம் பெற்றுப் பிரகாசித்தன.

விருத்தம், 'ஸ்ரீநிவாஸ' (ஹம்சாநந்தி), 'எப்போ வருவாரோ' என்று டி.வி.எஸ். ஹிட் பாடல்கள் ஒன்றையொன்று தொடர... 'வாழிய செந்தமிழ்' பாடி முடித்தார்.

ரக்தியும் ஆழமும் குறைவுதான்; குரல் அமைப்பிலும், ஒலி அமைப்பிலும், ஏற்றத் தாழ்வுகள் ஏராளமாய்த் தெரிந்தன. ஆனால் அத்தனையையும் மீறி மதுரை மணி பாணியின் பாசாங்குகளற்ற எளிமையும், டி.வி.சங்கரநாராயணனின் துள்ளும் உற்சாகமும், பழைய நினைவுகளைக் கிளர்த்தி, 'இவர் நம்ம ஆளு' என்ற நெருக்கத்தை ஏற்படுத்தி, ரசிகர்களை அள்ளிக் கொண்டு போய்விட்டது!

ரசிகர்கள்.

ரக்தி ராகமாய் எடுப்பார் என்று எதிர் பார்த்திருக்க, மீண்டும் ரஞ்சகத்துக்கே முதவிடம் தந்து, ஹிந்தோளம் ஆரம்பித்தார் டி.வி.எஸ்.



• டி.வி.எஸ்.

'ஹம்சத்வனி'யில் பாடிய கிருஷ்ணா, பக்கவாத்தியக்காரர்களுக்குப் போட்ட 'பலே! பேஷ்!' உற்சாகத்தை சபையெங்கும் வாரியிறைக்க, சுருதியிலிருந்து அவ்வப்போது அவர் விலகிச் சென்று விடுகிற குறை, மறைந்து போகிறது. பிரும்மாண்டமான திறமை, கற்பனை, அவற்றை ரசிகர்களுக்கு வஞ்சனையில்லாமல் பரிமாறுவதில் கொள்ளும் ஆர்வம் - என்று இந்த இளைஞரின் பலங்கள் முந்திக் கொள்கின்றன.

பக்குவமாய் அமைந்த நாட்டைக் குறிஞ்சி வர்ணத்துடன் ஆரம்பித்த கச்சேரி, முகாரியில் 'க்ஷீணமை' எடுத்த போது ஜிவ்வென்று ஜெட் பிளேனில் ஏறிக் கொண்டது. அப்பாடலை ஏற்கெனவே செம்மங்குடி பாடிக் கேட்டவர்கள் அன்று சில புதிய

விஷயங்களைத் தெரிந்து கொண்டார்கள். ஆலாபனை, உருக்கமான நிரவல், சில ஆவர்த்தனங்களேயானாலும் அரிய கற்பனை ஸ்வரங்கள் எல்லாம் இந்தக் கீர்த்தனைக்குப் பாட முடியும் என்பதோடு, 'க்ஷீணமை' கீர்த்தனைக்கு சாஹித்யம் உண்டு என்பதையும் அன்று தெரிந்து கொண்டார்கள்!

வயலினில் ஸ்ரீராம்குமார் போர்வீரனைப் போல் ஈடு கொடுக்க, ரீதிகௌளையில் பரிபாலயமாம் நோக்கி முன்னேறிய கச்சேரி, ராகத்தின் அமைதியையும் 'பரிபாலயமாம்' கீர்த்தனையின் நிதானத்தையும் வரித்துக் கொண்டது.

வராளி ஆலாபனையின் அழகும் ஆழமும் 'ஏடிஜன்ம' கீர்த்தனையும் கிளைமாக்ஸாக அமைந்துவிட, அதன் பிறகு வந்த கரஹரப்ரியா கொஞ்சம் 'ஆன்டி கிளைமேக்ஸ்' ஆனதில் ஆச்சர்யமில்லை. வராளியில் வலிமையாய் வில்லை ஓட்டிய ஸ்ரீராம்குமார் இப்போது மிருதுவாகத் தட்டிக் கொடுத்து பாடகரோடு இழைந்தார். 'சக்கனிராஜ' எடுத்ததும் ரசிகர்கள் சேர்ந்து பாட ஆரம்பித்து விடுவார்கள் போலிருந்தது! ஆனால் கிருஷ்ணா சில புதிய சங்கதிகளைப் புகுத்தி அந்த விபரீதத்தைத் தவிர்த்துவிட்டார்!

தனியாவர்த்தனம், (டி.வி.ஜி. மிருதங்கம், டி.வி.வாசன் கடம்) அனுபவமும் திறமையும் கைகோத்து நடந்த அழகான கம்பளம் போல் விரிந்து நிறைந்தது.

கமாஸ்ஜாவளி, ராகமாலிகை சுலோகம், (கரசரணக்ருதம்வா) நேயர் விருப்பமாக, 'இரக்கம் வராமல்', 'ஆடுவோமே', 'பவனஜஸ்துதி பாத்ர'... என்று ஆவர்த்தனத்தைத் தொடர்ந்து அழகான கலவை விருந்து தொடர்ந்தது.

இந்த இரு கலைஞர்களும் திரும்பத் திரும்ப ரசிகர்களைத் தங்கள் கச்சேரிகளுக்கு ஈர்க்கும் திறம் படைத்தவர்கள்... அவர்களுடைய இசை மட்டுமே இதற்குக் காரணமில்லை... தனித்தன்மையுள்ள பாணிகளுடன், தணியாத உற்சாகமும், அனுபவித்துப் பாடுவதில் அவர்கள் அடையும் ஆனந்தமும் தலைமுறை இடைவெளியை மட்டுமின்றி, ரசிகர் - கலைஞர் இடைவெளியையும் தகர்த்தெறிந்து விடுகின்றன.

நந்தி பைன் ஆர்ட்ஸ் நிர்வாகிகளை எந்த நந்தி குறுக்கே நின்று தடுத்ததோ, அந்த பரமேஸ்வரனுக்குத்தான் வெளிச்சம்! கோபாலபுரம், வேணுகோபால சுவாமி கோயிலில், ஐந்து மணிக்கு சின்மயா சகோதரிகள் கச்சேரி தொடங்கும் நேரம், நிர்வாகிகள் சார்பில் பேனர் மட்டுமே அரங்கில் தொங்கியது. பத்து நிமிடம் பொறுத்துப் பார்த்துவிட்டு மேடையேறிய சகோதரிகள் சோர்வின்றி, கடமையுணர்வுடன் பாடினார்கள். அதிலும் உமா பாடிய பைரவி ஆலாபனை திறமைக்கும் உழைப்புக்கும் எடுத்துக்காட்டாக அமைந்தது. முன்னதாக இடம் பெற்ற ராதிகாவின் பூர்வி கல்யாணிக்கு மதிப்பெண் குறைவுதான்.

ஒன்றரை மணி நேரக் கச்சேரிக்கு 'பாலகோபால' மிகப் பெரிய கீர்த்தனை. எனினும், ஆலாபனையின் கனமும் நயமும் கீர்த்தனையிலும், நிரவல் ஸ்வரங்களிலும் தொடராமல் போனதற்கு நேரமின்மை மட்டுமே காரணம் அல்ல. அடிப்படைகள் சுத்தமாய் அமைந்தாலும் அந்த கம்பீர கீர்த்தனைக்குரிய பாவமும் அழுத்தமும் இல்லை.

தொய்வில்லாமல் நிகழ்ச்சியை நடத்திச் செல்ல கைகொடுத்த பக்கவாத்தியக் கலைஞர்கள் தியாகராஜன் (வயலின்), நெல்லை பாலாஜி (மிருதங்கம்), திருச்சி முரளி (கடம்).

சின்மயா சகோதரிகள், நெய்வேலி சந்தானகோபாலனின் சிஷ்யைகள்... அவர் பாட்டில் கேட்கக் கிடைக்காத சில அழகியல் விரோத சமாசாரங்கள் இவர்கள் இசையில் தெரிகிறது. அவற்றைத் துணிவுடன் தூக்கியெறிந்தால் என்ன?... ●

---

**"அதிசயமா இருக்கே! தீப் பிடிச்ச மறு வினாடியே தீயணைக்கும் வண்டி வந்திடுச்சே!"**

**"யோவ்.. எரியறதே தீயணைக்கும் நிலையம்தானய்யா..!"**

**- புன்னகை மன்னன்**



உலக உருண்டையின் மேற்பரப்பில் ஏற்படுகிற பருவ நிலை மாறுபாடுகளைப் பற்றிக் குறிப்பிடுகிறபோது 'யெல் நைனோ விளைவு' (EL-NINO EFFECT) என்று குறிப்பிடுகிறார்கள்.

பசிபிக் பெருங்கடல் பரப்பில் ஏற்படுகிற சூழ்நிலைக் கோளாறுகளையே 'யெல் நைனோ' என்று வழங்குகிறார்கள். இதன் விளைவாக, உலகப் பரப்பு முழுவதிலுமே பருவநிலை ஏற்றத் தாழ்வுகள் உண்டாகின்றன, என்று கண்டறிந்துள்ளார்கள்.

இந்த 'யெல் நைனோ'வுக்கும் கிறிஸ்துமஸ் காலத்துக்கும் தொடர்பு உண்டு. ஏனெனில் 'யெல் நைனோ' என்பது ஸ்பானிஷ் மொழியில், 'சின்னப் பையன்' என்று பொருள்படும் 'குழந்தை இயேசு'வின் பெயர். கிறிஸ்துமஸ் காலத்தையொட்டிக் கடல் பரப்பில் இந்தச் சூழ்நிலைக் கோளாறு உண்டாவதால், இதற்கும் 'யெல் – நைனோ' என்று பெயர் சூட்டி விட்டார்கள்.

பசிபிக் பெருங்கடல் பரப்பில் ஒவ்வோர் ஆண்டின் தொடக்கத்திலும், வழக்கத்துக்கு மாறாக, நீர்ப்பரப்பு வெம்மையடைவதை முதன்முதலாய்க் கவனித்தவர்கள் தென் அமெரிக்கக் கடற்கரைப் பகுதி மீனவர்கள்தாம்!



# வா நைனா!

ஆஸ்திரேலியாவில் உண்டாகும் முரட்டுத்தனமான காட்டுத் தீ, மேற்கு பஸிபிக்கில் உண்டாகும் மோசமான வெள்ளப் பெருக்கு, கடும் வறட்சி, அமெரிக்கா, பெரு பகுதிகளில் ஏற்படும் கூடுதலான மழை - இவற்றுக்கு இந்த 'யெல்-நைனோ' விளைவுதான் காரணம் என்கிறார்கள்.

தென்கிழக்கு, வடகிழக்குத் திசைகளிலிருந்து நில நடுக்கோட்டை நோக்கி நிலையாக வீசிக் கொண்டிருக்கும் காற்றுக்கு 'வியாபாரக் காற்று' (trade wind) என்று பெயர் சொல்கிறார்கள். இந்தக் காற்று, மேற்கு பசிபிக் கடல் பகுதியின் மேற்குப் பகுதியை சூடேற்றிக் குவிக்கிறது என்கிறார்கள். நில நடுக்கோட்டுப் பகுதியில் உள்ளதைவிட, இந்தோனேஷியக் கடற்பகுதி அரை மீட்டர் உயர்ந்து விடுகிறதாம்.

'யெல் - நைனோ' விளைவின்போது, முன்னால் சொன்ன 'வியாபாரக் காற்று' மத்திய மற்றும் மேற்கு பசிபிக் பகுதிகளில் மையம் கொண்டு விடுகிறது. இதனால் கிழக்குப் பசிபிக் பகுதியில் காற்றழுத்தம் உண்டாகிறது என்றும் சொல்கிறார்கள்.

கடல் நீர்ப் பரப்பில் வெப்பம் கூடுவதால் ஏற்படுகிற விளைவுகளைப் போலவே, குறைவான வெப்ப அளவும் விளைவுகளை உண்டாக்குகிறது. இதை 'வா-நைனா' என்று குறிப்பிடுகிறார்கள். இதன் பொருள் 'சின்னஞ்சிறு பெண்' என்பதாகும்.

சில 'யெல் - நைனோ' ஆண்டுகளுக்குப் பின்னர் 'வா - நைனா' உருவாகக் கூடும். *1997 – 98* ஆண்டுகளில் ஏற்பட்ட 'யெல் - நைனோ' மிகவும் வலுவானது என்கிறார்கள் அதேபோல் குளிர்ச்சியை அதிகப்படுத்துப் 'வா - நைனா' விளைவு, *1986 -89*இல் வலுவுடையதாய் ஏற்பட்டிருக்கிறது.

தென் அமெரிக்கக் கடல் பகுதியில், கடலடியிலிருந்து பொங்கி வரும் நீரின் காரணமாகக் குளிர்ச்சி நிலவுகிறது. இதை விட மேற்குப் பகுதியின் கடல் பரப்பின் வெப்பம், எட்டு டிகிரி கூடுதலாக இருக்கிறது என்கிறார்கள்.

குளிர்ச்சி கூடுதலான இந்தக் கடல் நீரில் ஊட்டச்சத்து மிகுதி என்றும், விதவிதமான கடல் உயிரினங்கள் பல்கிப் பெருக உதவுகிறது என்றும் சொல்கிறார்கள்.

— சுப்ர. பாலன்

"சுந்தரீ.ச......" என்று இந்த அத்தியாயத்தையும் தொடங்கினால் கப்புடுகளாகவும் தும்புருகளாகவும் மாறி வாசகர்கள் குதறியெடுக்கத் தலைப்படுவார்கள். ஆனால் வேறு வழியில்லை.

பாப்பா நெஞ்சிலும், நினைவிலும், குரலிலும் காதல் ததும்ப, 'சுந்தரி என் ஸ்வப்பனத்தில் வந்ததார் சொல்வாய்..' என்று கமாஸ் ராகத்தில் உருகுவதை நாம் இப்போதே நின்று காது கொடுத்துக் கேட்டுவிடுவது நல்லது. இல்




லாவிட்டால் அவன் முற்றிலுமாகக் கரைந்து, காணாமல் போய்விடும் அபாயம் மேலிடுகிறது!

அவள் அப்பா அம்மாவுக்குத்தான் பாவம், அவன் நிஜக் காதலில் உருகுகிறான் என்பது அடியோடு புரியவில்லை. பாப்பாவைப் பாடகியாகவே பார்த்தார்கள்; கமாஸை ராகமாகப் பார்த்தார்கள்; பாடலைத் தமிழாகப் பார்த்தார்கள்... மூன்றிலுன்றும் நிறைந்து நின்ற மின்சார சமாசாரம், சம்சார சாகரத்தை அவர்கள் கடந்து வந்த இந்த இருபத்திரண்டு வருடக் காலத்தில் எங்கோ வழிதவறிப் போயிருந்தது. கனவிலும் நனவிலும் அவர்களை ஆக்கிரமித்தது பாப்பாவின் கச்சேரிகள் மட்டுமே!

"இந்த சீஸன்ல நாலு இடத்துலயாவது இந்தப் பாட்டைப் பாடிடணும் பாப்பா!"

பாப்பா நெடியதொரு பெருமூச்சு விட்டாள்...

அதைக் கவனியாத சத்தியமூர்த்தி, தனது கணித வல்லமையின் அடிப்படையில், தீர்மானங்களை நிறைவேற்றிக் கொண்டிருந்தான்.

"மொத்தம் பதினஞ்சு கச்சேரி இருக்கு... பதினஞ்சு பர்ஸன்ட் ஆடியன்ஸ் நாலு கச்சேரிக்குத் திரும்பத் திரும்ப வந்தாக் கூட, வெவ்வேற திக்குல நடக்கற நாலு கச்சேரில பாடிட்டா ரிபீட் ஆகற மாதிரி தெரியாது..."

சுந்தரி வேறு கணக்குகளில் மும்முரமாய் இருந்தாள். இனி சீஸனுக்கு சீஸன் கச்சேரிகளின் எண்ணிக்கை கூடுமேயொழிய, குறையப் போவதில்லை. இந்த வருடம் பதினைந்து கச்சேரிகளிலும் பதினைந்து வெவ்வேறு பட்டுப்புடைவைகள், அதற்கேற்ற நகைகள் என்று தயார் பண்ணியாயிற்று. பாடிய பாட்டுகள் மீண்டும் ஒரு ரவுண்ட் வந்தாலும், உடுத்திய புடைவைகளே மீண்டும் வரலாகாது. 'போன வருஷம் இதே மெரூன் அண்ட் க்ரீன்

தானே வேணு கான சபாவிலே உடுத்திண்டி ருந்தா..' என்று கிளிப் பேச்சு அடிபட அனு மதிப்பது, பாப்பாவின் கௌரவத்துக்கு இழுக் காகி விடாதோ! அவனையும் அவன் சங்கீதத்தையும், அவள் கௌரவத்தையும் காப்பதற்காக மட்டுமே கடவுள் தன்னைப் படைத்திருப்பதாக சுந்தரி அகமகிழ்ந்த கணத் தில், அவள் முகமும் சற்றுக் கனிந்து, காணப் பட்டிருக்க வேண்டும். அதைக் கவனித்த பாப்பா, தன் ஸ்வப்பனத்தில் வந்தவற்றைச் சொல்லிவிட இதுதான் சரியான நேரம் என்று தொண்டையைக் கனைத்துக் கொண்டு ஆரம்பித்தாள்...

"அம்மா! கொஞ்சம் பேசணும்..!"

# ஸரிகம பாப்பா

## சீதா ரவி

"என்ன பாப்பா...? அடுத்த வருஷத்துக்குத் தானே...? மாசம் இரண்டு புடைவைன்னு வாங்கிட்டா இரண்டு டஜன் கைவசம் இருக் கும். அப்புறம் இரண்டு வருஷத்துக்குக் கவலை வேண்டாம்... இப்போ அதைப் பத்தியெல்லாம் பேசி, தொண்டையைப் பாழாக்கிப்பானேன். இன்னும் மூணு கச்சேரி இந்த வாரமே இருக்கு..." – எழுந்து போய்விட்டாள்.

**பா**ப்பாவின் இளம் உள்ளத்து ஸ்வப்பனங்கள் அவள் உடுத்திய புடைவைகளைக் காட்டிலும் வண்ணமயமாய் வளர்ந்திருந்தன. அவள் அணிந்த புதுப் புது நகை களைக் காட்டிலும் மின்னிமினுக்கி மயக்கின.

அவள் கனவுகளின் நாயகன், மின் அஞ்சல் மூலம்தான் முதலில் அறிமுகமானான்:

"ஹலோ! நீ 'பெரிய்ய' குழந்தை மேதையாமே! எனக்குக் கர்னாடக சங்கீதமே சுத்தமா பிடிக்காது. ஆனா இப்போ எல்லா மாகஸீன்லயும் உன் படத்தைப் போடறாங்களே... அந்த முகம் ரொம்பப் பிடிச்சிருக்கு... – பாஸ்கர்."

கம்ப்யூட்டர் திரையில் இப்படி யொரு விமர்சனத்தைப் படித்ததுமே பாப்பாவுக்குப் பிடித்து விட்டது.

கண்ணாடியிலும், போட்டோ ஆல்பத்திலும், கத்திரித்து வைத்த பத்திரிகைச் செய்திகளிலும் தன் முகத்தை மீண்டும் மீண்டும் பார்த்துக் கொண்டாள். திரும்பவும் பாஸ்கரின் ஈமெயிலைப் படித்தாள். மீண்டும் முகத்தைப் பார்த்துக் கொள்ள... அது நாள் வரை அவள் நொந்து கொண்ட குண்டுக் கன்னங்களும் சப்பை மூக்கும் கூட அழகாய்த் தெரிந்தன.

"ஹலோ! என் பாட்டைப் பிடிக்காவிட்டாலும் என்னைப் புடிச்சிருக்குன்னு சொல்ற ஒரே ஆத்மா நீயாகத்தான் இருக்க முடியும். அதனாலே, உன் முகம் எப்படியிருக்கும்னு தெரியாட்டாலும் உன்னை எனக்குப் பிடிச்சிருக்கு... அமிர்தவர்ஷினி அலையஸ் பாப்பா."

விரைவிலேயே அந்த முகத்தைப் பார்க்கக் கிடைத்தது பாப்பாவுக்கு. ஸ்கேன் செய்த உருவமாக அது அவன் கம்ப்யூட்டர் திரைக்கு வந்து சேர்ந்தபோது, தமிழகத்துப் பெண்களின் தூக்கத்தைக் கெடுத்துவிடும் வெள்ளித்திரை முகங்களைக் காட்டிலும் அழகு மிக்கதாய்த் தோன்றியது; வீரம் மிக்கதாய்த் தெரிந்தது; குணமும் கல்வியும் நிறைந்த அறிவுக்களை படைத்ததாய்த் தீர்மானமாய்த் தெரிந்தது.

"உன்னைப் போல் எனக்கு வலைத்தளமெல்லாம் கிடையாது; நான் யார் என்பதற்கான அடையாளமும் அனுப்புவதே நியாயம்" என்று போட்டோவுடன் கூடிய தனது மல்டி நேஷனல் கம்பெனி அடையாள அட்டையை, மீண்டுமொரு ஸ்கேன் செய்து பாஸ்கர் அனுப்ப... அவளுடைய கணிப்பில் மேலும் உயர்ந்து கனவில் நிலைத்துப் போனான். எனினும், பத்திரிகைகளுக்குப் பயந்து கொண்டு பாப்பா அவனுடன் நேர் சந்திப்புகளைத் தவிர்த்தாள். இருவரும் தங்கள் தனித் தொடர்புக்கென்று ரகசிய இணைய முகவரிகள் ஏற்படுத்திக் கொண்டு, இதயச் சுரங்கத்தின் இனிய ரகசியங்களைக் கொட்டித் தீர்த்துக் கொள்ள...

இனியும் தாளாது என்கிற கட்டத்தை எய்திவிட்ட நிலையில்தான் பாப்பா தன் அம்மாவிடம் பேச முற்பட்டாள்.

ஆனால், சுந்தரியோ, பிரதான கலைஞரின் மனோநிலையைத் துளியும் புரிந்து கொள்ளாத அல்ப அரைவேக்காட்டுப் பக்க வாத்தியக்காரரைப் போல், முற்றிலும் வேறு திசையில் சஞ்சரித்துக் கொண்டிருந்தாள்...

சத்தியமூர்த்தியோ, சங்கீத வாசனை அறியாத சபா செயலர் தில்லானா பாடும்போதே திரையை இறக்கத் தயாராவதுபோல் பாப்பாவின் உணர்வுகளுக்குப் படுதா போர்த்திக் கொண்டிருந்தான்.

ஒரு நாள் கம்ப்யூட்டர் திரையை நோக்கி பாப்பா காற்றில் முத்தங்களைப் பறக்க விட்டபடி உட்கார்ந்திருப்பதை இருவருமே பின்புறமிருந்து பார்க்க நேர்ந்தது. அப்போதும் கூட அந்த ஆதர்ச பெற்றோர், அவள் ஏதோ ஆவேசமாய்க் கையசைத்துப் பாடுவதாகத் தங்களைத் தாங்களே ஏமாற்றிக் கொள்ளத் துணிந்தார்களேயொழிய, பாப்பா குமரியாகி விட்டதைப் பதிவு செய்து கொள்ளவில்லை.

பெற்றோரின் பாராமுகம் உணர்ந்த பாப்பா, கிழவரானாலும் தன் கன்னிக் கனவுகளைப் புரிந்து கொள்ளக் கூடியவர் பஞ்சாபகேசன்

சார்தான், என்று முடிவு செய்து, அவரிடத்தில் புகலடைந்தாள்.

தமது நாற்பது வருட டியூஷன் அனுபவத்தில் இப்படியொரு சிக்கலைச் சந்தித்த தில்லை பஞ்சாபகேசன். இதுவரை அவர் கண்ட சிஷ்யர்கள் சமர்த்தர்கள். காதல், கத்திரிக்காய் போன்ற அனாவசியங்களில் சிக்கிக் கொள்ளாமல் அப்பா – அம்மா பார்த்து வைத்த பெண்ணையோ, பையனையோ கல்யாணம் பண்ணிக் கொண்டிருந்தார்கள். அவர்களுள் சிலர், சம்ஸார சாகரத்தில் மூழ்கி, சங்கீத ஸாகரத்தை முற்றிலும் மறந்து போனதால் தன் பெயர் காப்பாற்றப்பட்டிருக்கிறது என்ற நிம்மதி வேறு பஞ்சாபகேசனுக்கு இருந்தது. இந்த பாப்பா மட்டும் எல்லாவற்றிலுமே விதிவிலக்கு. மற்ற மாணவர்கள் அவர் வீட்டுக்கு வந்து கற்றுக் கொள்வார்கள். பாப்பாவுக்கு மட்டும் இவர் போய் வகுப்பு நடத்த வேண்டும். மற்றவர்களோடு பஞ்சாபகேசன் பாடாய்ப்பட வேண்டியிருக்கிறதென்றால், பாப்பா அவரைப் பாடாய்ப் படுத்தி வைக்கிறாள். சங்கீத சந்தேகங்கள் கேட்டுத் துளைத்தெடுத்தது போதாதென்று, தன்னிடம் போய் காதல் கேள்விகளை இப்போது எழுப்புகிறாள்!

" 'சுந்தரி என் ஸ்வப்பனத்தில்' பாடட்டுமா சார்...?" என்று கிளாஸுக்கு வந்து உட்கார்ந்ததுமே கேட்டாள்.

பதிலுக்குக் காத்திராமல் பாடவும் ஆரம்பித்தாள்.

"சுந்தரி என் ஸ்வப்பனத்தில் வந்ததார்
சொல்வாய்...
இந்த்ரஜாலமுள்ள செந்தூர் கந்தன்தானோ
எந்தன் தோழி..."

முடித்துவிட்டு மூச்சு விடாமல் கேட்டாள்: "என் ஸ்வப்பனத்திலே தினம் தினம் யார் வரா தெரியுமா ஸார்...?"

"யாரு....?"

"பாஸ்கர்...!"

வலைத்தளம் வளர்த்த காதலைப் பற்றி பாப்பா விவரிக்க விவரிக்க, பஞ்சாபகேசனின் கண்கள் அகன்று வெளியே தெறித்து விடும் அளவுக்கு விரிந்தன!

பாப்பா, தனது காதல் ஆலாபனையின் மேல் ஸ்தாயியை எட்டிய கட்டத்தில் பஞ்சாபகேசன் அழுதுவிடுவார் போலிருந்தது.

"என்ன சார்...? உடம்பை ஏதாவது செய்யறதா...?" அவர் முகம் போன போக்கைப் பார்த்துவிட்டு பாப்பா கேட்க, "கொஞ்சம் தண்ணி குடு...!" என்றார் பஞ்சாபகேசன்.

அவள் அதை எடுத்துவர சமையலறைக்குச் சென்று வந்த ஒரு நிமிடத்தில் அவளிடம் என்ன சொல்வது என்று ஒத்திகைப் பார்த்துக்கொண்டார்... திரும்பி வந்து தண்ணீர் பாட்டிலையும் டம்ளரையும் வைத்த பாப்பாவைப் பார்த்துச் சொன்னார்,

"இதோ பாரு... உனக்கு அந்த பாஸ்கர் வேண்டாம். சரிப்படாது மறந்துடு..."

"ஏன் ஸார்...?"

"அவனுக்கும் சங்கீதத்துக்கும் ஸ்நானப் பிராப்தி கிடையாது..."

"அது உங்களுக்கு எப்படித் தெரியும் ஸார்...?"

"ஏன்னா, பாஸ்கர் என்னோட பிள்ளை..."

பாப்பா ஆச்சர்யப்படக் கூட நேரம் கொடாமல் தொடர்ந்தார்:

"நானும் அவனுக்குச் சங்கீதம் கத்துத்தர தலைகீழா நின்னு பார்த்துட்டேன். ஸ ப ஸ கூட பிடிக்க வரலை... அதாவது போகறது... பாட்டு கேட்பானான்னா அதுவும் கிடையாது... உங்க அப்பா – அம்மா உனக்கு நல்ல சங்கீத ரசனை உள்ள பையனாத்தான் பார்த்துக் கல்யாணம் பண்ணி வைக்கணும்ன்ற முடிவுல இருக்கா... எங்கிட்டேயே சொல்லி மாப்பிள்ளை பார்க்கச் சொல்லியிருக்கா... நீ சரஸ்வதிகிட்டே வரம் வாங்கிண்டு வந்து பிறந்திருக்கே பாப்பா... உனக்கு இந்த விபரீத ஆசையெல்லாம் வேண்டாம், கேட்டியா...!"

பதினைந்து வருடங்களாக வகுப்பெடுக்கும் பஞ்சாபகேசன், ஒரு சேரப் பதினைந்து வார்த்தைகளுக்கு மேல் பேசி இதுவரை கேட்டிராத பாப்பாவுக்கு, கட்டபொம்மன் டயலாக் கணக்காக இப்போது அவர் பேசப் பேச, கோபம் பொத்துக் கொண்டு வந்தது. அப்பா – அம்மா பேரிலும், பஞ்சாபகேசன் ஸார் பேரிலும், சரஸ்வதி பேரிலும், பாழாய்ப் போகிற சங்கீதத்தின் பேரிலும், ஏன்... பாஸ்கர் பேரிலும் கூட கோபம் வந்தது!

(அடுத்த இதழில் முடியும்)



"இப்படி ஆபீஸுக்குக் குடிச்சிட்டு வந்து நிக்கறீங்களே கேவலமா இல்ல..."

"குடிச்சிட்டு அவனவன் நடு வீதியில விழுந்து கிடக்கறான். நான் ஸ்டெடியா நிக்கறேன்னு சந்தோஷப்படுங்க சார்..."

— தமிழ்




# பிஞ்சுகள் பாடிய பஞ்சரத்னக் கீர்த்தனைகள்!

பதினைந்து வயதுக்கு உட்பட்ட குழந்தைகளைப் பஞ்சரத்னக் கீர்த்தனைகளைப் பாட வைத்து, சமீபத்தில் சென்னைத் தொலைக்காட்சியில் ஒளிபரப்பானதைப் பார்த்துவிட்டு ஆகா போட்டவர்கள் ஏராளம்.

''என் மகள் லக்ஷ்மியை பல்வேறு இசைப் போட்டிகளில் கலந்து கொள்ள அழைத்துச் செல்லும்போது, வசீகரமான குரல் கொண்ட பல குழந்தைகளின் அறிமுகம் கிடைத்தது. உடனே இவர்களையெல்லாம் ஒருங்கிணைத்து, பஞ்சரத்னக் கீர்த்தனைகளைப் பாடச் செய்தால் என்ன என்று ஐடியா உருவானது. சுலோசனா பட்டாபிராமனிடம் சொன்னபோது, "திறமை மிக்க குழந்தைகளை நீங்கள் கண்டு பிடியுங்கள்... அவர்களைப் பாட வைப்பது என் பொறுப்பு" என்று மகிழ்ச்சியுடன் ஒப்புக் கொண்டார்'' என்றார் நிகழ்ச்சித் தயாரிப்பாளர் கற்பகம் மாதவன்.

"பெண் குழந்தைகளைச் சுலபமாகச் சேர்த்துவிட்டோம். ஆனால் பதினைந்து வயதுக்குட்பட்ட ஆண் குழந்தைகளைச் சேர்ப்பதுதான் பெரும் பாடாகி விட்டது. ஒரு மாணவனைத் தேர்ந்தெடுத்து, பயிற்சி கொடுத்திருப்போம். திடீரென்று குரல் உடைந்து சுருதி சேராமல் போய்விடும். மறுபடி, ஐந்தரைக் கட்டை சுருதிக்குப் பொருந்தக் கூடிய குரலைத் தேடுவோம்..." என்றார் கற்பகம்.



• கற்பகம்

''பயிற்சி என்றால் அப்படி ஒரு தீவிரப் பயிற்சி கொடுக்கிறார் சுலோசனா பட்டாபிராமன். எதிரே நோட்டு எதையும் வைத்துக் கொண்டு பாடாமல் ஐந்து பாடல்களையும் முழுவதுமாக மனப்பாடம் செய்து பாட வைத்திருக்கிறார்.

''பெரியவர்களே பாடத் தடுமாறிப் போகும் வராளி ராக கீர்த்தனையைக் கூட குழந்தைகள் அருமையாகப் பாடினார்கள்'' என்று பாராட்டினார் சுலோசனா.

டிசம்பர் பத்தொன்பதாம் தேதி அன்று, மிருதங்க வித்துவான் காரைக்குடி மணி நடத்தும் மார்கழி இசை விழாவில், ஆழ்வார்பேட்டை ஆஸ்திக சமாஜத்தில் மாலை ஏழரை முதல் ஒன்பது வரை, மறுபடி இந்த நிகழ்ச்சியை வழங்கப் போகிறார்கள்.

''தொலைக்காட்சியில் தவற விட்டவர்கள், நேரில் வந்து ரசிக்கலாமே!'' என்கிறார் சுலோசனா பட்டாபிராமன்.

சந்திப்பு:
**எஸ்.வி.என்**

வண்ணப் படங்கள்: **யோகா**



சுலோசனா பட்டாபிராமன்



# தெய்வம் தயாரித்த தைலம்!

**ஆ**யுர்வேதம் என்றவுடன் நமக்கு என்ன ஞாபகம் வரும்? தைலம் ஞாபகம் வரும். வலி வரும்போது 'தெய்வமே' என்று கூப்பிடுகிறோம். அந்தத் தெய்வமே மனிதனுக்குத் தைலம் தயாரித்த அதிசயம் கேரளத்தில் 'தகழி' என்ற இடத்தில் நடந்துள்ளது.

ஸ்ரீ பரசுராமன், கேரளத்தின் பாதுகாப்புக்காக, மலை மீது அய்யப்பனையும், . கடற்கரையில் பகவதியையும் பிரதிஷ்டை செய்து உள்ளார் என்பது ஐதீகம். பண்டைய திருவிதாங்கூரில் திருவல்லா என்ற மலையில், ஒரு சாஸ்தாவை பிரதிஷ்டை செய்திருந்தார்கள். ஒரு சமயம் மழைக் காலத்தில் காட்டாற்று வெள்ளம் ஏற்படவே, அய்யப்பன் சிலை இழுத்துச் செல்லப்பட்டு, ஒரு புதை குழியில் புதைந்துவிட்டது. சில காலம் கழித்து அந்த வழியாக வந்த யோகி ஒருவர், நிலத்திலிருந்து ஒளிக்கீற்று வருவதைக் கண்டு, மண்ணைத் தோண்டினார். அங்கே அய்யப்பன் சிலை கிடைத்ததும், மனமகிழ்ந்து, பிரதிஷ்டை செய்தார். அவ்விடம் கால ஓட்டத்தில் 'தகழி சாஸ்தா' எனப் பெயர் பெற்றது.

அக் கோவிலில் ஏழை நாயர் ஒருவர் பணிவிடை செய்துகொண்டிருந்தார். குழந்தைகளுக்கு, அன்போடு பாடம் சொல்லிக் கொடுத்ததால், எல்லோரும் அவரை 'ஆசான்' என்று அழைத்தனர்.

அப்படி இருக்கும்போது அவருக்கு கொடுமையான கால் வலி ஏற்பட்டது. வலியால் துடித்த அவர் அய்யன் அய்யப்பனிடம் அழுது முறையிட்டார். அன்றிரவு அவர் கனவில் அய்யப்பன் தோன்றி, 'நீ கவலைப்படாதே. திருவல்லா பக்கம் ஒரு மலையில் உள்ள எண்பத்து நான்கு விதமான ஆயுர்வேத பச்சிலைகளைக் கொண்டு வந்து, அவற்றின் சாறெடுத்து, அறுபத்து நான்கு கடைச் சரக்குகளை நல்லெண்ணெய் தவிர, மற்ற எண்ணெய்களில் போட்டுக் காய்ச்சவும். அதற்குரிய பணத்தை வைத்திருக்கிறேன்'' என்றார்.

**கா**லையில் தமது தலைமாட்டில்

தேவமருந்து-20

டாக்டர் எல். மகாதேவன்

பணம் இருப்பதைக் கண்ட ஆசான், மெய் சிலிர்த்து, அய்யனை வணங்கி ஆட்களை மலைக்கு அனுப்பினார். அங்கு சென்ற அவர்கள் மருந்து எது, என்று தெரியாமல் எல்லாவற்றையும் பறித்துகொண்டு வந்தார்கள். அவற்றை சுவாமி நடையில் வைத்தார்கள். எண்ணெய் மற்றும் கடை மருந்துகளையும் தயார் செய்தார்கள்.

ஆசான் இறைவனிடம், "அப்பனே, நான் வைத்தியன் இல்லை. நீதான் எனக்கு எண்ணெய் காய்ச்ச உதவ வேண்டும்" என மனமுருக வேண்டினார். மறுநாள் வேண்டாத பச்சிலைகள் மட்டும் கீழே கிடந்தன. அவற்றை நீக்கி விட்டு, மற்றவைகளை இடித்துச் சாறாக்கி, கடை சரக்கையும், எண்ணெயையும் சேர்த்து காய்ச்சினார்கள். அப்போது உச்சிக் கால பூஜை நடந்து நடை அடைக்கப்பட்டிருந்தது. எண்ணெய்ப் பக்குவம் எப்படிப் பார்ப்பது என ஆசான் வருந்திய வேளை, கோவில் மணி சப்தம் கேட்டது. அதையே உத்தரவாக ஏற்று, எண்ணெயை வடிகட்டி இறக்கினார்.

அந்தத் தைலத்தைப் பயன்படுத்திய சில நாட்களிலேயே ஆசானின் கால்வலி நீங்கி, பூரண குணம் அடைந்தார். இதைக் கண்ட மக்கள் அவரிடம் எண்ணெய் கேட்டு வந்தார்கள். அவரும் அய்யப்பனுக்குத் தட்சணை வைக்கச் செய்து, எண்ணெய் கொடுத்தார். எண்ணெயின் விசேஷத்தால் பல நோயாளிகள் குணமடைந்தனர். சுவாமிக்கும் நிறைய காணிக்கை சேர்ந்தது. அதைக் கொண்டு ஆசான் திருப்பணிகள் செய்தார். தகழி கோவிலில் இப்பொழுதும் அவர் ஞாபகமாக சிலை வைக்கப்பட்டுள்ளது. அய்யப்பன் அடியார்க்கு அடியாராகவும், அபூர்வ வைத்தியராகவும் திகழ்கிறார். ஆயுர்வேத சிகிச்சைக்கு 'கைவல்ய பாச்ரய' சிகிச்சை என்று பெயர்.

(அடுத்த வாரம்...)

# துணைத் தலைவரான வீணைக் கலைஞர்

**கா**ங்கிரஸ் துணைத் தலைவர்கள் பட்டியலில் புதிதாக இடம் பெற்றிருக்கும் ராணி வெங்கடேசன் ஒரு வீணைக்



கலைஞர்.

அடையாறு இசைக் கல்லூரியில் படித்துத் தேறியவர். இவரது கணவர் உயர் போலீஸ் அதிகாரியாக இருந்து ஓய்வு பெற்றவர். "திருவையாறு தியாகப் பிரம்மம் விழாவில் தொடர்ந்து வாசிக்கிறேன். இது தவிர, தனிக் கச்சேரிகள் பல செய்துள்ளேன்" என்று சொல்லும் ராணி வெங்கடேசன், "ஸ்ரீரங்கம் கோயிலில் வாசித்ததை மறக்க முடியாது" என்கிறார். காரணம்? "அங்கே கோயில் வழக்கம் என்னவென்றால் சுவாமி புறப்பாட்டுக்கு முன் கோயிலின் ஆஸ்தான வித்வான்தான் சுவாமிக்கு முன் உள்ள மண்டபத்தில் வாசிக்க வேண்டும். ஆனால் என் கணவர் திருச்சியில் பணிபுரிந்தபோது எனக்கு அந்த அரிய வாய்ப்பு கிடைத்தது."

அரசியலைப் பொறுத்தமட்டில் புது முகம்தான். இருந்தாலும் சோனியா பிறந்த தினத்தின்போது ரத்ததான முகாம் நடத்தி அசத்திவிட்டார். எல்லா கோஷ்டிகளும் ஒப்புக் கொண்டால் சாத்தான்குளத்தில் இவர்தான் காங்கிரஸ் வேட்பாளர் என்கிறார்கள்.

- கௌசி

படம் : ராஜன்

புன்னகை பூமி - 8

# ராமனின் தங்கை சீதை!

தாய்லாந்தில் மற்ற எந்த இந்து மதத் தாக்கத்தையும் விட, ராமாயணம் ஏற்படுத்திய தாக்கம் மிக அதிகம். இது 'ராமகீர்த்தி' என்றும் இன்னும் பிரபலமாக 'ராமகியன்' என்றும் அழைக்கப்படுகிறது.

கதை என்னவோ அப்பட்டமாய் அதேதான். கம்பர் கேஸ் போட்டிருக்கலாம். ராமா, ஹனுமான், ஜனகா என்கிற பாத்திரங்களின் பெயர்கள் அப்படியே இருக்கின்றன. சிதா, லக்சனா, தொசரதா, ப்ரோத், இந்தரசித், கும்ப்பகரனா என்று சில பெயர்கள் பாலி மொழியின் பாதிப்பினால் சற்றே மாறியிருக்கின்றன. தசகாந்தா (ராவணன்), மங்குட் (குசா) என்று சில பாத்திரங்களுக்கு, முற்றிலும் புதிய பெயர்கள் அமைந்திருக்கின்றன.

• தாய் ராமாயணத்தில் சீதாப் பிராட்டி, ராவணனின் மகள். தசரதர் புத்திர பாக்யம் வேண்டி செய்யும் வேள்வியின் போது ஒரு காக்கை, பிரசாத அன்ன உருண்டையில் ஒரு பகுதியைக் கவ்வி எடுத்துக்கொண்டு இலங்கைக்குப் பறந்து போய்விடுகிறது. மண்டோதரி அந்த அன்னத்தின் ஒரு பகுதியை சாப்பிட்டவுடன் கர்ப்பமுறுகிறாள். மண்டோதரிக்குப் பிறக்கும் பெண் குழந்தைதான் சீதா. அந்தப் பெண் குழந்தையால் (அப்பா) ராவணனுக்கு இறப்பு நிகழும் என்று கணிக்கப்பட்டவுடன், ராவணன் குழந்தையை ஒரு பாத்திரத்தில் வைத்து நதியில் எறிய... அது ஜனக மகாராஜாவைச் சென்று அடைகிறது.

• கட்டை பிரம்மச்சாரியான ஆஞ்சநேயருக்குத் தாய் ராமாயணத்தில் இரண்டு மனைவிகள். முதல் மனைவி நம் ராமாயணத்தில் இல்லாத பினாயகி என்கிற பாத்திரம். பினாயகி விபீஷணனின் மகள். அசுரபாத் என்று இவர்களுக்கு ஒரு ஆண் குழந்தை இருக்கிறது.

இது போல, சின்னச் சின்னதாய் சம்பவ மாற்றங்கள். பாத்திரப் படைப்பிலும் பெரிய வித்தியாசங்கள் இருக்கின்றன.

சீதாப் பிராட்டியின் சுயம்வரத்திற்கு முன் ராமனும் சீதையும் 'கண்ணோடு கண் கவ்வி ஒருவரை ஒருவர் பார்ப்பது', வால்மீகி ராமாயணத்தில் இல்லாமல், கம்பராமாயணத்தில் மட்டுமே இருக்கிறது. அதே காட்சி தாய் ராமாயணத்தில் வருகிறது. சீதா, ராமனைப் பார்த்து காதல் வயப்பட்டு, ராமனே வெல்ல வேண்டும் என்று பிரார்த்திக்கிற காட்சியமைப்பு, தாய் ராமாயணத்தில் இருக்கிறது.

சூர்ப்பனகையின் வரவு வால்மீகி ராமாயணத்தில் ஓர் அரக்கியின் வடிவிலேயும், கம்பராமாயணத்திலே ஓர் அழகியின் வடிவிலும் இருக்கிறது. தாய்லாந்து ராமாயணத்திலும் அழகி வேஷமிட்டுத்தான் சூர்ப்பனகை வருகிறாள்.

இந்த ஒற்றுமைகள் இருப்பதால், தாய்லாந்தவர்கள் எடுத்தாண்டது கம்ப ராமாயண வடிவமா, என்றால் அதுவும் இல்லை. சம்பவ மாற்றங்கள் மற்றும் அனுமன், ராமர் பாத்திரப் படைப்பில் இருக்கும் மாற்றங்களால் நிச்சயமாக கம்பராமாயணத்தை ஒட்டி எழுதப்படவில்லை. ராமர், சீதையைக் கொன்று விடச் சொன்னார் என்பதும், அனுமார் இரண்டு பெண்களை மணந்தார் என்னும் முரண்பாடுகளும் கம்ப ராமா


• சீதை


• ராவணன்

யணத்துக்கும் தாய் ராமாயணத்துக்கும் உள்ள முரண்பாட்டைத்தான் ஊர்ஜிதம் செய்கிறது.

இந்தோனேசியாவின் மற்றொரு ராமாயண வடிவமான 'செரட் கந்தா'வுக்கும், தாய்லாந்து ராமாயணத்துக்கும் நிறைய ஒற்றுமைகள் இருக்கின்றன. சீதா மண்டோதரிக்குப் பிறந்தது, மயூரப் என்கிற பாத்திரம், ராமர் சீதை மேல் சந்தேகப்பட்டு காட்டுக்கு அனுப்புவது, லவ உருவாக்கப்படுவது. ராமரும் சீதையும் இணைவது, என்று தாய் ராமாயணத்தின் வித்தியாசமான அம்சங்கள் அத்தனையும், இந்தோனேசிய 'செரட் கந்தா'வில் இருக்கிறது. மலேய ராமாயணமான 'ஹிக்காயட் சிரி ராம்'மிலும் இந்த அம்சங்கள் இருக்கின்றன. அதனால் தாய் ராமாயணம் இந்தோனேசியாவிலிருந்தோ மலேயாவிலிருந்தோ வந்திருக்க முடியுமா?

இதற்கெல்லாம் விடை இந்தியாவில் இருக்கும் மற்ற ராமாயண வடிவங்களை ஆராய்ந்தால் கிடைக்கிறது. தாய்லாந்து ராமாயணத்திற்கும், இந்திய (வால்மீகி, கம்ப) ராமாயணத்துக்கும் உள்ள வேற்றுமைகள் இவர்களாகவே உருவாக்கியது இல்லை. அந்த மாற்றங்கள் இந்தியாவில் இருந்த மற்ற சில வடிவங்களில் இருந்திருக்கிறது.

தெற்கு ஆசியாவில் சில இடங்களில் இருக்கும் ராமாயண வடிவத்தின் அதீத முரண்பாடுகள் கூட, இந்தியாவிலிருந்துதான் வந்திருக்கிறது. உதாரணம் 'லாவோஸ்' நாட்டில் (டீலு) உள்ள ஒரு ராமாயணம். இதன்படி ராமருக்கு, லக்ஷ்மணனைத் தவிர ஒரு தங்கை உண்டு. அது சீதா! ஜீரணிக்க மிகச் சிரமமான ராமாயண வடிவம்!

(தொடரும்)



ஆனந்த் ராகவ்



''டாக்டர், நீங்க சொன்னபடியே தினமும் ரெண்டுவேளைதான் டானிக் குடிச்சேன்.''

''ஆனா வேளைக்கு ஒரு டீ.ஸ்பூன் குடின்னு சொன்னதை ஒரு பாட்டில்னு தப்பா நினைச்சுக்கிட்டது யார் தப்பு?''

''டாக்டர் நீங்க சொன்னபடியே உங்க 'லேபி'லே என் சுண்டு விரல் வலிக்காக ஈ.ஸி.ஜி, எக்கோ, ரத்தப் பரிசோதனையெல்லாம் எடுத்துட்டேன்.''

''ஒரு எம்.ஆர்.ஐ.ஸ்கானும் எடுத்துடுங்க. இன்னிக்குத்தான் அந்த மெஷினை வாங்கியிருக்கோம்.''




# சொன்னது சொன்னபடி!



"நீங்க சொன்னபடி தினமும் அரை மணி நேரம் வாக்கிங் போறேன். ஆனா நல்லா வேர்க்குது. அதுதான் பயம்மா இருக்கு."

"வேகமாக நடந்தால் வேர்க்கத்தான் செய்யும். நல்லதுதான்."

"கனவிலே நடந்தா நிஜத்திலே வேர்க்குதே டாக்டர்?"





"டாக்டர், ஆபரேஷனுக்கப்புறம் இவருக்கு என்ன கொடுக்கணும்?"

"பாலோ, கங்கைத் தண்ணியோ, அரிசியோ அது உங்க பழக்கத்தைப் பொருத்தது."




**குல்லூ**

என்னதான் பண்ணப் போறேள்?"

ராதாகிருஷ்ணன் ரேவதியை உற்றுப் பார்த்தார்.

"புரோகிதமும் உங்களுக்குத் தெரியாதே."

"கத்துக்கலாமே..."

"என்ன, திவச சாப்பாடு சாப்பிடப் போறேளா?"

"அப்படியில்லை. ஹோமம் பண்றதுக்கு."

"அது பெரிய படிப்பில்லையா..."

"ஆமாம். ஒரு வருஷத்துப் படிப்புன்னு வச்சுப்போம். ஒரு வருஷத்துல நிறைய விஷயங்கள் மனப்பாடம் பண்ணி, தெரிஞ்சுண்டு, உதவியா போய்ப் போய், பிறகு சுயமா செய்ய முடியாதா? அந்த ஒரு வருஷத்துல உதவியா போகற வரைக்கும் இதுவேர்ந்து வர வட்டிக்காக நமக்குச் சரியா வராதா? ஏழு லட்ச ரூபாய்க்கு ஏழு கிரவுண்ட் நிலம் வாங்கறது. ரெண்டு லட்ச ரூபாயைச் சாப்பாட்டுக்கு வச்சுக்கறது. செலவுக்கு வச்சுக்கறது.

"உங்களைப் புரோகிதரா பார்க்க எனக்குப் பிடிக்கலையே..."

"எனக்குள்ள ஒரு கர்வம் இருக்கு. அந்தக் கர்வம் என்னைப் புரோகிதனா வேலை செய்யச் சொல்றது. எனக்குப் புரோகிதனா இருக்கறதுக்குப் பிடிக்கும்."

"எனக்குப் பிடிக்கலை. இப்படி கிராப்பை வச்சுண்டு எப்படி புரோகிதரா இருக்கறது?"

"இல்லை. நான் குடுமிக்குப் போயிடப் போறேன். பேண்ட் போடப் போற தில்லை. இனிமே பஞ்சகச்சம் வேஷ்டிதான்."

"என்ன தடார்னு மாறிட றேளே."

"என்னமோ, உள்ள அப்படித்தான் மாறி டுத்து."

"புரோகிதம்தானா...?"

"இல்லை. அதை யும் உறுதியா என் னால சொல்ல முடியலை."

"அப்பா... பொழைச் சேன்."



பாலகுமாரன்

"வேற ஏதாவது ஒரு வழி இருக்கும்."

"நிலம் விக்கறது வாங்கறது, புரோக்கரா, போனா..."

"பகவானே... ரேவதி உனக்குப் பைத்தியமா பிடிச்சருக்கு? ஏகப்பட்ட பொய் சொல்லணும். என்னால பொய் சொல்ல முடியாது ரேவதி!"

"ஒண்ணுமே வழியில்லைன்னா, என்ன பண்றதா இருக்கேள்..."

"இதே தம்புச்செட்டித் தெருவுல, அரண்மனைக்காரத் தெருவுல எனக்கு ஏதாவது ஒரு கம்பெனியில, ஏதாவது ஒரு வேலை கிடைக்கும். தாம்பரத்துலேர்ந்து ட்ரெய்ன் பிடிச்சு துறைமுகம் இறங்கி, துறைமுகத்துலேர்ந்து மெல்ல நடந்து ஆபீஸுக்கு வந்து, வேலை செய்து போகணும்."

"அதாவது கார்த்தால ஏழு மணிக்குப் போயிட்டு ராத்திரி எட்டு மணிக்கு வரணும்."

"ஆமாம். கடைசிப்பட்சம் அந்த வேலை இருக்கு. ஆனால், இந்த அலைச்சல் இல்லாத வேற ஏதோ வேலை கிடைக்கும்னு தோண்றது."

"இந்த ஆபீஸ் வேலையே வேண்டாம்னு சொன்னாரே சங்கரய்யர்."

"ஆமாம். எதனால சொன்னாருன்னு தெரியலை. நாம முதல்ல தாம்பரம் பக்கம் போயிடுவோமா?"

"போயிடுவோம். அதுக்கு முன்னாடி ஒரு ரவுண்ட் அடிப்போம்."

அவர்கள் நல்ல நேரம் பார்த்து தாம்பரத்திற்கு மின் வண்டி ஏறிப் போனார்கள். அங்குள்ள புரோக்கர்களிடம் வீடு விசாரித்தார்கள். கார் வைத்துக் கொண்டு ஊர் சுற்றினார்கள். அந்த வழியே போகிற ஒரு அந்தணரை நிறுத்தி இங்கு ஏதேனும் வாடகைக்கு வீடு கிடைக்குமா



என்று கேட்க, அவர் இரண்டு மூன்று இடங்கள் காண்பித்தார். உள்ளடங்கி சில வீடுகள் உடனடியான குடியேற்றத்திற்குத் தயாராக இருந்தன. ஆனால், அது குழந்தைகளுக்கு, பள்ளிக்கூடத்திற்குத் தொலைவாக இருந்தது. மழைக் காலத்தில் சேறு அதிகமாக இருக்கும் என்று சொல்லப்பட்டது. தாம்பரம் ரயில் நிலையத்தை ஒட்டி ஒரு ஃப்ளாட்டுக்குள் வீடு தேடினார்.

ஆறு ஃப்ளாட் அடங்கிய ஒரு கட்டடத்தைக் காண்பித்தார்கள். அங்கு போய் நிற்க, "மாடியில இருக்கற ஒருத்தரைக் காலி பண்ணச் சொல்லியிருக்கேன். ரெண்டு மாசம் டைம் கேட்கறா. நீங்க இப்பவே அட்வான்ஸ் கொடுத்தேன்னா, அடுத்தபடியா உங்களுக்கு விட்டுடறேன்."

"அவாள ஏன் காலி பண்ணச் சொல்றேள்?"

"மாமிசம் சாப்பிட மாட்டேன்னு சொல்லிட்டு, இப்போ மாமிசம் சாப்பிடறா. எனக்குப் பிடிக்கலை. முட்டை சமைக்கறாங்க. அந்த வாசனை அக்கம்பக்கம் போகுது. அவங்க குத்தம் சொல்றாங்க. எங்களால சகிச்சுக்க முடியலைன்னு சொல்றாங்க. இவங்க முட்டை தானே பரவாயில்லைன்றாங்க. ஆனா, முட்டை மட்டுமில்லை. கடைலேர்ந்து மாமிசம் வாங்கிச் சாப்பிடறதா கேள்விப்பட்டோம். கேட்டதுக்கு ஆமான்னு சொல்லிட்டாங்க. காலி பண்ணுங்கோன்னு சொன்னோம். சரின்னு சொல்லிட்டாங்க. நீங்க வந்தீங்கன்னா எனக்கும் சந்தோஷம். ஆனா, இப்பவே சொல்லிடுங்க."

அவர்கள் அந்த வீட்டைச் சுற்றிப் பார்த்தார்கள். அவருக்கு வீடு பிடித்திருந்தது.

இப்பொழுது இருக்கற குடித்தனம் சரியில்லை என்பது நாற்காலி, மேஜையிலிருந்து தெரிந்தது. அதிகம் படிப்பவர்கள், வெளிநாட்டுக்குப் போகத் துடிப்பவர்கள், வெளிநாட்டுப் பழக்கங்களை இங்கேயே கொண்டு வந்தவர்கள் என்பது தெரிந்தது.

"இன்னும் ஆறு மாசம் பொறுத்தா்னா நாங்க அத்தனை பேரும் கனடா போயிடுவோம் ஸார். எங்களுக்கு இங்க பரீட்சை ஒண்ணு இருக்கு. இவர் சொன்னா கேட்க மாட்டேங்கறார். உடனே காலி பண்ணு, உடனே காலி பண்ணுங்கறார்."

"அவருக்குப் பிடிக்காத விஷயத்தைச் செய்யாம இருந்தா நன்னாயிருக்குமே? ஆறு மாசம்தானே. நீங்க சாப்பிட வேண்டியதை வெளிய சாப்பிட்டுக்கலாமே. அவருக்குத் தொந்தரவுதானே."

"இவர் ஒண்ணும் தொந்தரவு இல்லை ஸார். எதிர்வீட்ல ஒரு பொம்பளை சும்மா டீஸ் பண்ணுது. நாங்க வெளியூருக்குப் போகப் போறோம்னு சொல்லிட்டோம். அந்த அம்மாவுக்குப் பொறாமை. அந்த அம்மாவோட பசங்களெல்லாம் தத்திங்க. எதுவும் படிக்காம ஊரைச் சுத்திண்டிருக்காங்க. நாங்க வெளிதேசம் போறோம்னவுடனே அந்தம்மா எங்க மேல காண்டு ஆயிடுச்சு."

"என்ன படிக்கிறீங்க?"

"என் தம்பி ஃபார்மஸி லைன்ல இருக்கான். நான் பிஸியோதெரபிஸ்ட். என் ஸிஸ்டர் லண்டன்ல இருக்கா. கல்யாணமாயிடுச்சு. லண்டன் போய் ஒரு இன்ஸ்டியூட்ல ஜாயின் பண்ணி, பிறகு அங்கேர்ந்து கனடா போயிடலாம்னு நினைச்சுண்டிருக்கோம். ஆறுமாசம் தான். இங்க எங்க படிப்பு முடிஞ்சுடும். தயவு செய்து நீங்க முதலியார்கிட்ட சொல்லுங்க ஸார்."

---

**"இந்த ஆபீஸ்ல லஞ்சம் கேட்பது குற்றம்னு போர்டு எழுதி வச்சிருக்கீங்களே?"**

**"ஏன், கேட்காமலே நீங்க கொடுத்துட்டுப் போகக் கூடாதா என்ன!"**

***- சீர்காழி வி.ரேவதி***

---

"உங்ககிட்ட ஜாதகம் இருக்கா?"

"என்னது?"

"உன்னுடைய ஜாதகம் இருந்தாக் கொடு."

கைநீட்டிப் பேசிய பையனை, கனிவாக ராதாகிருஷ்ணன் பார்த்தார்.

அவன் அவரை சோபாவில் உட்காரச் சொன்னான். அவன் கொண்டு வந்த நோட்டுப் புத்தகத்தைப் பிரித்து அவனுடைய ஜாதகத்தை ஆராய்ந்தார்.

"நிச்சயமா உனக்கு வாழ்க்கை வெளிதேசத்துலதான். உன் தம்பிக்கும் அந்த அம்சம் ஜாஸ்தியா இருக்கு. உன் தம்பி திரும்பி வருவான். ஆனால், உனக்குக் கடைசி வரைக்கும், வாழ்வு முழுவதும் வெளிதேசத்துலதான் இருக்கு. ஆயுசும் நன்னாயிருக்கு. கவலைப்படாத. நீங்க இங்க ஆறுமாசம் தங்கறதுக்கு நான் இவர்கிட்ட பர்மிஷன் கேட்கறேன். கொஞ்சம் அசைவ சாப்பாடு மட்டும் இங்க சாப்பிடாம இரு."

"சரி ஸார். நான் சாப்பிடாம இருக்கேன். அந்தம்மா ரொம்ப காண்டு."

"விட்டுடுப்பா. அதைப் பத்திப் பேசாத."

"என் தங்கை நிறை மாசமா இருக்கா. அவங்க இங்க வரமுடியலை. அங்கயே குழந்தை பெத்துக்கறதுதான் நல்லதுன்றாங்க. அம்மாவை அனுப்பச் சொல்றாங்க. அம்மாவை அங்க அனுப்பினாக்க இங்க சமைக்கறது கஷ்டம். நாங்க முட்டை சமைக்

கறதுக்கே சொல்றாங்க. அம்மாவும் போயிட்டாக்க, நாங்க வேற என்ன சமைப்போம்?"

"அம்மா போயிட்டா சமைக்காம இருக்கலாம். வாங்கிச் சாப்பிடலாம். அம்மாவை அங்க அனுப்பு. அது நல்லது. தங்கைக்குப் பொண் குழந்தை பிறக்கும்."

"எப்படி ஸார் சொல்றீங்க?"

"அவ ஜாதகம் சொல்றதே. நோட் புக்ல எல்லா ஜாதகமும் எழுதியிருக்கீங்களே..."

"இது மாப்பிள்ளை ஜாதகம் ஸார்."

"அடடா... உத்திரட்டாதி நட்சத்திரம். ரொம்ப நல்லவன். ரொம்ப இனிமையானவன். தாசனாவே இருப்பான். அவனைக் கொண்டாடினா அவனுக்கு ரொம்ப பிடிக்கும்."

"ஆமாம் ஸார். மாப்பிள்ளைக்கு அவரைப் புகழ்ந்து சொன்னா ரொம்ப சந்தோஷமாயிடறார்."

"அம்மாவை அனுப்பு. மாப்பிள்ளைய மரியாதையா நடத்தச் சொல்லு."

"ஸார் வந்து... கடவுள் மாதிரி பேசறீங்க."

"கவலைப்படாத தம்பி. ஆறுமாசம் முடியட்டும். அப்புறம் இந்த வீட்டை நான் எடுத்துக்கறேன். அவருக்கு இப்பவே அட்வான்ஸை கொடுத்துட்டுப் போறேன்."

ஆயிரத்து ஐந்நூறு ரூபாய் வாடகை என்று பேசி, பதினைந்தாயிரம் ரூபாய்க்கு அவரிடம் காசோலை கொடுத்து, ஆறு மாதத்திற்குப் பிறகு இந்த இடம் தனக்கு வேண்டுமென்று எழுதி வாங்கிக் கொண்டார்.

"நான் கொடுக்கறதுக்கு ரெடி. அந்தப் பசங்க நின்னுட்டாங்கன்னா, அப்புறம் என்னைக் கேட்காதீங்க."

"அந்தப் பசங்க நிக்கவே மாட்டாங்க. ஆறு மாசத்துக்கு முன்னாடியே கிளம்பிடுவாங்க. எனக்குக் கொஞ்சம் வெள்ளையடிச்சு சுத்தம் பண்ணித் தரணும்."

"அதெல்லாம் பண்ணிக் கொடுத்துடலாம்."

"எதிர்வீட்ல இருக்கற அம்மா யாரு?"

"அதுவொரு கிறுக்கு. எதுவோ சாப்பிட்டு போறாங்கன்னு இல்லாத, தினம் கீழ வந்து, பாருங்க, சாப்பிடறாங்க பாருங்க. சாப்பிடறாங்கன்னா, எனக்கு பேஜாராயிப் போகுது."

"அந்தம்மாவையும் முடிஞ்சபோது காலி பண்ணச் சொல்லுங்க."

"அந்தம்மாவும் அப்படித்தான் சொல்லுது. எதிர்வீட்ல இருக்கறவங்க காலி பண்ணலைன்னா, நான் காலி பண்றேன்னு சொல்லுது."

"நல்லவேளை. உடனே காலி பண்ணச் சொல்லுங்க."

"மேலயிருக்கும்போது ஜோசியமெல்லாம் சொன்னீங்க போலிருக்கே."

"ஆமாம். எப்படித் தெரிஞ்சது."

"நான் வந்தேன். நீங்க உட்கார்ந்து பேசிக்கிட்டிருந்தது தெரிஞ்சுது. நமக்கு ஜோசியம் சொல்லக் கூடாதா?"

"சொல்றனே. என்ன சமாச்சாரம்?"

"படப்பை பக்கம் நிலம் வாங்கியிருக்கேன். வாங்கினவருடைய பையன் ஒருத்தன் வழக்கு போடப் போறேன்றான். கொஞ்சம் கூட காசு கேட்கறான். நாலு பேர் கையெழுத்து போட்டுட்டாங்க. அஞ்சாவதா ஒரு பையன் இருக்கான். அவன் ரெண்டாவது சம்ஸாரத்துப் பையன். அவன் எனக்கும் உரிமை உண்டுன்றான்."

"ஆமாம். உரிமை உண்டாச்சே."

"அவரு சொல்லவேயில்லை. இப்போ அந்தப் பையன் வந்து நிக்கறான்."

"எவ்வளவு கேட்கறான் கூட."

"நாப்பதாயிரம் ரூபா கேட்கறாங்க."

"கொடுத்துடலாமே."

"இல்லீங்க. ஏற்கெனவே கூட கொடுத்துட்டு வாங்கிட்டேன். இப்போ நாப்பதாயிரம்னு வேற சொன்னா, நான் என்ன பண்றது?"

"உங்களுக்கு என்ன வேணும்?"

"அந்தப் பையனும் வந்து கையெழுத்துப் போடணும்."

"சும்மாவா?"

"பதினைஞ்சாயிரம் வரைக்கும் கொடுக்கலாம்."

"நான் ஒண்ணு பண்றேன். உங்களோட இன்னொரு நாள் வந்து, அவங்கிட்ட பேசிப் பார்க்கறேன்."

"எப்போ வருவீங்க?"

"நீங்க எப்போ சொல்றீங்களோ, அப்போ வரேன்."

"உங்களுக்குப் பட்டணத்துல வேலை ஜாஸ்தியிருக்குமே."

"நீங்க தெரிஞ்சவங்களா போயிட்டீங்க, உதவின்னு கேட்கறீங்க, வந்துதானே செய்தாகணும்."

"நாளைக்குக் காலையில வர்றீங்களா?"

"இதே நேரத்துக்கு வரோம். நீங்க அவங்

களைப் பார்க்கறதுக்கு ஏற்பாடு பண்ணுங்க. நான் போய் சமாதானம் பேசறேன்."

"முரட்டு ஜனங்க."

"அதெல்லாம் பார்த்துக்கலாம்."

மறுநாள் ராதாகிருஷ்ணனும் ரேவதியும் போனார்கள்.

"எவ்வளவு நிலம் வாங்கியிருக்கீங்க?"

"பன்னிரண்டு ஏக்கர்."

"எவ்வளவு?"

"பன்னிரண்டு ஏக்கர்."

"எதுக்கு அவ்வளோ நிலம். விவசாயத் துக்கா?"

"இல்லீங்க. பிரிச்சு விக்கலாம்னு நினைச் சுண்டிருக்கேன்."

"எப்போ?"

"பின்னாடி ஆறேழு வருஷத்துக்கு அப்பால."

"அப்போ விலை போகுங்களா?"

"நல்லா விலை போகும்."

"நான் இப்படித்தானே இந்த இடத்தை வாங்கினேன். இந்திராகாந்தி பதவிக்கு வந்தபோது, நான் இந்த இடத்துக்கு வந்தேன். இந்த நிலத்தை வாங்கிப் போட்டேன். இன்னிக்கு இதே நிலத்தை வித்து வித்து இந்தக் கட்டடம் கட்டினேன். இது மூணு கால் இரவுண்ட். நான் வாங்கினது பன்னிரண்டு இரவுண்ட்."

"அதென்ன பன்னிரண்டு?"

"எனக்கென்னமோ பன்னிரண்டு நல்ல நம்பரா வருதுங்க."

"பன்னெண்டு நல்ல நம்பரா வந்தாக்க செவ்வாய் உமக்கு உச்சம்னு அர்த்தம். காலை யில உங்க ஜாதகத்தையும் எடுத்து வைங்க. நாங்க வந்து பார்க்கறோம்."

"நேத்து வந்தீங்க. பதினைஞ்சாயிரம் ரூபா கொடுத்தீங்க. உதவி செய்யறேன்னு சொல் றீங்க. ஆச்சரியமா இருக்கு. ஏன் மெட்ராஸை விட்டு இங்க வர்றீங்க?"

"மெட்ராஸ் ரொம்ப நெரிசலாப் போச்சு. என்னால அங்க இருக்க முடியலை. கொஞ்சம் காத்தோட்டமா இருக்கணும்னு தோணுது."

"வந்திருங்கய்யா, இந்த இடத்துக்கு வந்திருங்க. சின்னப்பசங்க படிக்கறதுக்கு தாம் பரம்தான் வாட்டமான இடம். அடுத்தபடியா நிலம் வாங்கறதுக்கு நான் உதவி செய்யறேன். நம்ம பக்கத்து நிலங்களெல்லாம் கூட இருக்கு. நீங்க வந்து அந்த மாதிரி இடங்களெல்லாம் பாருங்க. உங்களுக்கே தோட்டம் தொரவு வாங்கணும்னு தோணிரும்."

ராதாகிருஷ்ணனும் ரேவதியும் வீடு திரும்பினார்கள்.

"என்னமோ கனா மாதிரி இல்லை. நாம போனதும், யாரையோ பார்த்ததும், யார் கிட்டயோ பேசினதும், அவன் யாரையோ அறிமுகப்படுத்தினதும், அறிமுகப்படுத்தியவன் தோட்டம் வாங்க உதவி செய்யறேன்னு சொன்னதும் ஏதோ திகைப்பா இல்ல."

"ஆமாம். கடவுள் வழிகாட்டறார்னு தோணறது. யாரோ நம்மை அழைச்சுண்டு போறான்னு தோணறது."

"சங்கரய்யரா கூட இருக்கலாம்."

ராதாகிருஷ்ணன் அடிக் குரலில் பேசினார்.

"நிஜமாவா. சங்கரய்யர் பேரை இவ்வளவு அன்பா சொல்றேள்."

"எனக்கு அவரைப் பத்தி ஒரு சந்தேகம் இருந்தது. ஆனா, இப்போ மாறிடுத்து. சங்கரய் யர் உள்ளுக்குள்ள ஆளை நகர்த்தத் தெரிஞ் சவர். என்னை எங்கயோ நகர்த்திண் டிருக்கார்னு படறது."

ராதாகிருஷ்ணன் சொல்லிவிட்டு, தலை குனிந்துகொண்டார். குளித்து விட்டு தோளில் மேல் வேட்டி யைப் போர்த்தி, கிழக்குப் பார்த்து ஜபம் செய்யத் துவங்கினார்.

மறுநாள் அந்த முதலி யாரோடு பெருங்களத்தூர் பக்கம் போய், அவர்கள் நிலம் பார்த்தார்கள்.

ராதாகிருஷ்ணனுக்கு அந்த இடம் பிடித் திருந்தது.

(தொடரும்)

---

**"நிறைய இன்கம்டாக்ஸ் ஒழுங்கா கட்டினவங்களை மெச்சிப் பாராட்டு விழா நடத்தறாங்க, தெரியுமில்ல...?"**

**"ஆமா கபாலி, அதுக்கு என்ன இப்ப...?"**

**"நானும்தான் மாமூலைத் தப்பாம கட்டிக்கிட்டு வர்றேன்... ஒரு பரிசோ, பாராட்டோ... ஹும்... ஒண்ணும் கிடை யாதா?..."**

**- சீர்காழி வி.ரேவதி**



# கேஸ் கட்டும் கீ போர்டும்!

சட்டப் புத்தகக் குவியல்களுக்கிடையே ஒருவர் கீபோர்டு வாசித்துக் கொண்டிருந்தால் ஆச்சரியம் வராதா என்ன?

'விகடன்' படத்தின் இசையமைப்பாளர் ஜெரோம் புஷ்பராஜைப் பார்த்ததும் அதுதான் தோன்றியது.

"நான் ஹைகோர்ட் வக்கீல். இது என் தொழில், இசை என் உயிர்" என்கிறார் அமைதியாக.

"ஏழாவது படிக்கும்போதே இசையார்வம் வந்துவிட்டது. என் நண்பர் மாத்யூ அப்பவே விளையாட்டாக இசை கம்போஸ் பண்ணுவார். நானும் ஏதாவது இசைக் கருவியை எடுத்து நோண்டிக் கொண்டிருப்பேன். பிறகு சர்ச்சில் ஏகப்பட்ட இசை வாத்யங்கள் இருப்பதைப் பார்த்து, அதில் ஒவ்வொன்றாகக் கற்றுக் கொண்டேன். ஒரு பக்கம் பி.எல், எம்.எல்,னு படிச்சுட்டே, இன்னொரு பக்கம் நடிகர் விசுசாரோட குருப்ல சேர்ந்தேன். விஜய் ஆனந்த், அந்தோணி முத்து, நான் மூணு பேரும்தான் அவரோட 'விஸ்வசாந்தி' நாடக குருப்புக்கு இசையமைப்பாளர்கள். இப்படி வளர்ந்த இசை ஆர்வம், கல்யாணத்துக்குப் பிறகு தடைப்பட்டுப் போச்சு" என்றார்.



• ஜெரோம்



• மனைவி சோபியா மற்றும் குழந்தைகளுடன்

இந்தத் தடைக்குக் காரணம் அவர் மனைவியாம்!

"ஆமா...கல்யாணம் முடிஞ்சு ஹனிமூனுக்கு பெங்களூர் போயிருந்தோம். அங்க இசையமைப்பாளர் விஜய் ஆனந்த் ஒரு படத்துக்கு இசை கம்போஸ் பண்ணிட்டிருந்தார். மனைவியை ஹோட்டல்ல இருக்க வச்சுட்டு, நான் கம்போஸ் பண்ணப் போயிட்டிருந்தேன்... மூணு நாள் முடிஞ்சி சென்னைக்கு வந்ததும் ஒரே ரகளை! 'நான் வக்கீலைத்தான் கல்யாணம் பண்ணினேன்; சினிமாக்காரனையில்லை"ன்னு மனைவி சொல்ல, சரின்னு இசைக்கு முழுக்குப் போட்டேன். வேறென்ன செய்ய முடியும். மனைவி சொல்லே மந்திரம்!" என்கிறார் மனைவியைப் பார்த்துச் சிரித்துக்கொண்டே.

"இப்ப எப்படி சம்மதிச்சாங்க?"என்றால், அவங்ககிட்டேயே கேளுங்க" என்று மனைவியைக் கை காட்டுகிறார்.

"இப்ப ஓரளவு செட்டிலாகியாச்சு. குழந்தைங்க படிச்சிட்டிருக்காங்க. ஒரு பிடிப்பு வந்திருக்கு. அது மட்டுமில்லாம, இவர் எப்பப் பார்த்தாலும் மியூசிக் மியூசிக்குன்னு இருக்காரு. அவர் இசைக்கு அடிமையாகி, ஓ.கே சொல்லிட்டேன்" என்கிறார் சோபியா ஜெரோம்.

ஏ.ஆர். ரஹ்மான், வித்யாசாகர், மணிசர்மா, டிரம்ஸ் சிவமணி எல்லோருமே ஒரு காலத்தில் இவருடன் பணிபுரிந்தவர்களாம்!

"நடிகர் அருண்பாண்டியன் 'தேவன்' படம் பண்ணும்போது அடுத்த படத்துல உனக்கொரு சர்ப்ரைஸ் தரேன்னார். 'விகடன்' ஆரம்பிச்சதும் நீதான் மியூசிக் பண்றேன்னார். சந்தோஷத்துல ஆடி போய்ட்டேன். ஏன்னா, நான் இதை எதிர்பார்க்கலை. முதல் படம் ரொம்ப நல்லா பண்ணியிருக்கேன் என்கிற ஜெரோமை ஒரு பக்கம் கேஸ் கட்டோடும் இன்னொரு பக்கம் கீபோர்டோடும் பார்க்க வித்யாசமாகத் தானிருக்கிறது.

- சலாம்ஜி




# கேட்டால்தான் புரியும்!

**க**ர்நாடக இசையிலும் சரி, இந்துஸ்தானி இசையிலும் சரி, ராகம் முக்கிய இடத்தை வகிக்கிறது. ஒவ்வொரு ராகத்துக்கும் தனிப்பட்ட வடிவம் இருக்கிறது. ஒன்று போல இன்னொன்று இருக்காது. ஆனால் சில குறிப்பிட்ட ராகங்கள் விஷயத்தில், சிறிய ஸ்வர வேறுபாடு வந்துவிட்டால் கூட வேறு ராகத்தின் சாயல் அதற்கு வந்துவிடும் ஆபத்து உண்டு! உதாரணமாக, ரீதிகௌளை ராகம் பாடும்போது, ஸ்ரீரஞ்சனிக்குள் புகுந்துவிடும் அபாயம் உண்டு.

ஒவ்வொரு ராகத்துக்கும் உருவும், அழகும் சேர்ப்பது கமகங்களும், அனுஸ்வரங்களும் தான். இதை எல்லாம் எழுதியோ, படித்து விட்டோ, எளிதில் புரிந்து கொள்ள முடியாது. கேட்டால்தான் புரியும்.

அவ்வாறு புரிய வைக்க, 'சங்கீத சாகரம்' என்று ஒரு ஸி.டி. வடிவமைத்திருக்கிறார் செம்மங்குடி சீனிவாசய்யரின் சிஷ்யர் வி. சுப்பிரமணியம்.

''வெகு நாட்களாகவே இதைத் தயாரிக்க வேண்டும் என்று நினைத்துக் கொண்டிருந்தேன். என் குருநாதரிடம் சொன்னபோது ''பேஷா பண்ணுடா!'' என்று அவருக்கே உரிய பாணியில் ஆசி கூறினார். ஒவ்வொரு ராகத்தைப் பற்றியும் கேட்டார். அவற்றின் லட்சண அமைப்பு பற்றிக் கேட்டார். அவருடைய வழிகாட்டுதல் இதில் முழுக்க முழுக்க இருக்கிறது!'' என்கிறார் சுப்பிரமணியம்.

குரு செம்மங்குடியின் இசையுடன் கே.வி.என், டி.கே.ஜெ, ரமா ரவி போன்றவர்களின் இசையையும் தமது விளக்கங்களுக்குப் பயன்படுத்தியிருக்கிறார்.

முப்பது ராக விளக்கங்கள் கொண்ட இந்த ஸி.டி. டிசம்பர் 25 அன்று அகாடமியில் வெளியிடப்படுமாம். வெளியிடுபவர் – டி..டி. வாசு. முதல் பிரதி பெறுபவர்... செம்மங்குடியைத் தவிர வேறு யாராக இருக்க முடியும்!

— சாருகேசி





# குமுட்டி அடுப்பில் சமைத்த ருசி!

✉ காஷ்மீர் தீவிரவாதிகளின் விடுதலை விவகாரம், தமிழக பஸ் போக்குவரத்து தனியார் மயமாக்கல் விவகாரம், வீரப்பனின் கடத்தல் விவகாரம் மூன்றையும் கார்ட்டூன்களாக்கிய விதம் அருமை.

பெங்களூர்-84, அ. சங்கரன்.

✉ சஞ்சய் சுப்ரமண்யனின் வசந்தகால நினைவுகளைப் படித்து முடித்ததும், ஒவ்வொரு கேசட் கடையாகத் தேடியலைந்து திருமதி. எம்.எல்.வியின் இரண்டு ஆடியோ கேசட்டுகளை வாங்கி வந்து அலமாரியில் சேர்த்த பிறகுதான் நிம்மதியாகத் தூக்கம் வந்தது. (எம்.எல்.வி.யின் தேவகானங்களைக் கேட்டதாலும்).

ஆதமங்கலம் புதூர், கே. சண்முகம்.

✉ ஒரு பாடகனுக்கு உற்சாகம் அளிப்பதே ரசிகர்களின் கரகோஷம்தான். அப்படியிருக்க, கைத்தட்டலை எதிர்பார்த்து கச்சேரி செய்யக் கூடாது என்ற எஸ்.வி.கே.யின் கருத்து ஏற்றுக் கொள்ளத்தக்கதல்ல. கச்சேரி ரம்யமாயிருக்க வேண்டும் என்றால் பாடகர் நன்றாகப் பாட வேண்டும். நன்றாகப் பாடினால் அப்ளாஸ் தானே கிடைக்கும்!

திருப்பரங்குன்றம், டி.கே. சுப்பிரமணியன்.

## வட்ட மேஜை

✉ 'ரமணா' படத்தை அற்புதமாகவும் மனம் குளிர்ந்தும் பாராட்டியுள்ளீர்கள். நன்றி! மார்க் போடுவதில் கஞ்சத்தனம் பண்ணி விட்டீர்களே!

சென்னை, கே.என். பாலகிருஷ்ணன்.

✉ ஷாராஜின் 'நன்றி' கிராமிய மணத்துடன் அருமையாகச் சென்று இறுதியில் நெஞ்சைக் கனக்க வைத்துவிட்டது. கதையின் தலைப்பு மனிதர்களிடம் குறைவு என்பதை எடுத்துக் காட்டிய கடைசி வரி நெஞ்சைச் சுட்டது.

திருவண்ணாதபுரம், முகதி. சுபா.

✉ ''சிவகாமியின் சபதம்' தொடரில் சோகமான கட்டங்கள் கடந்த இரு வாரங்களாக. ''.......... என் மகள் சிவகாமி எங்கே?'' ஆயனரின் அளவற்ற சோகக் கதறல், நம்மை நெகிழ வைக்கிறதே! இந்த துக்கத்திலிருந்து சற்று மீள சீதா ரவியின் 'ஸரிகம பாப்பா' உதவுகிறது. அதி புத்திசாலி 'பாப்பா'வை வெகு நேர்த்தியாக உருவாக்கிக் கொண்டு வருகிறார் ஆசிரியர்.

சென்னை - 90, ரங்கமணி கிருஷ்ணஸ்வாமி



✉ தலைவர்களின் தர்க்கம் - மக்களின் துக்கம்! தலையங்கம் சரியான தேசிய மார்க்கம்! புண்ணுக்கேற்ற மருந்தையும் கூறி, புண்ணே வராதவாறு காக்கின்ற கருத்துக்களையும் விவரமாகக் கூறிய அறிவுரைகள் ஆழமானவை. தேர்தலில் அரசியலையும் தேர்தல் முடிந்தபின் ஆட்சியையும் கவனிப்பது ஒன்றுதான் தலைவர்களுக்கு அழகு! இந்த அரிச் சுவடியை அருமையாகப் படம் பிடித்துக் காட்டிய அற்புதமான தலையங்கம். சபாஷ்!

திசையன்விளை, ஆர்.ஜி. விநாயகா.

✉ செம்மங்குடி, அரியக்குடி டேப்புகளை ஒப்பிட்டு, மதிப்பீடு செய்வது சரியான அளவுகோல் ஆகாது. இன்றைய உலகம் வேகமான யுகம், எல்.வி.கே.யின் ஆங்கில விமர்சனம் நானும் படித்து ரசித்திருக்கிறேன். ஆனால் 'அந்தக் காலம் மாதிரி இல்லை' என்று எப்போதும் சொல்லுவது 'குமுட்டி அடுப்பில் சமைத்த ருசி இப்போதைய சமையலில் இல்லை' என்று கூறுவது போலிருக்கிறது.

சென்னை, வாதூரலன்.



U

# ஏப்ரல் மாதத்தில்

இந்தப் படத்தைப் பார்த்து விட்டு, வீடு திரும்பும் இளம் ரசிகர்கள், வழியில் தென்படும் மரங்களைக் கட்டாயம் கூர்ந்து கவனிப்பார்கள். மரத்தில் எங்கேனும் பெயர்கள் எழுதப்பட்டிருக்கிறதா, எனக் கலங்கிய கண்களால் தேடுவார்கள். அப்படியொரு பாதிப்பைத் தருகிறது படம்!

முதலில் நட்பு, பிறகு காதல் என்ற கல்லூரி வளாகத்து ஃபார்முலா காதல் கதைதான். ஆனால் அப்படியொரு பழைய வர்ணத்தைப் பூசிக் கொள்ளாதது போல, பனிச்சென்று புதிதாய்த் தெரியும் காட்சி அமைப்புகள்; சினிமா பார்க்கிறோம் என்கிற நிலையிலிருந்து அடிக்கடி நம்மை விடுவித்து, கல்லூரி வாழ்க்கையை ரீவைண்ட் செய்து பார்ப்பது போல உணர வைக்கின்றன.

வரிய குடும்பத்தை முன்னேற்றும் லட்சியக் கனவுகளோடு கிளம்பி, கல்லூரிக்குள் அடிவைத்து, நட்பைப் பருகி, காதலை மனசுக்குள் மென்று, வளாக மரத்தை நண்பனாய் நேசித்து, அம்மாவை ஒருமுறையேனும் விமானத்தில் கூட்டிப் போவதை லட்சியமாக வரித்துக் கொண்டு, அப்பாவையே ரோல் மாடலாக பாவித்து, சிகரெட் குடிக்கும் கதாநாயகன் கதிர், கிராமம் விட்டு நகரம் நோக்கி வரும் ஆயிரக்கணக்கான இளைஞர்களின் பிம்பம்.

கதிராகத் தன்னை மாற்றிக் கொண்டிருக்கும் நடிகர் ஸ்ரீகாந்த், பாடல் மற்றும் சண்டைக் காட்சிகளில் மட்டும்தான் நடிகராகத் தெரிகிறார். பனிப்பார்வையும், பன்னீர்ப் புன்னகையும், கூடவே கௌரவமான ஆடைகளிலுமாய்த் தன்னை ஸ்வேதாவாக வரித்துக் கொண்டிருக்கிறார் சிநேகா.

முதல் நாற்பத்தைந்து நிமிடம் கல்லூரி வளாகத்திற்குள், துள்ளலும் துடிப்புமாய் நகரும் படம், பட்டென்று செமஸ்டர் விடுமுறையில் ஸ்ரீகாந்த் வீட்டிற்கு இடம் பெயரும் போது, அவரைப் போலவே நாமும் தவிக்க வேண்டி வருகிறது!

ஸ்ரீகாந்த் நண்பர்கள் குழு (சோழன், வெங்கட்பிரபு, தேவன், அஞ்சு மகேந்திரன்) ஒருபுறம் இயல்பான கல்லூரி நகைச்சுவைத் தோரணங்களை உதிர்த்து கைத்தட்டல்களை அள்ளிக் கொள்ள, மற்றொரு பக்கம் கருணாஸ் குட்டியாய் ஒரு காமெடி அரசாங்கமே நடத்துகிறார். கதையோட்டத்தின் வேகத்திற்கு உதவும் காயத்ரி ஜெயராம், சுரேஷ் பாத்திரப்படைப்புகள், முத்தாய்ப்பு என்றாலும், திரைக்கதை கொஞ்சம் திணறவே செய்கிறது.

அவ்வப்போது அப்பாவைப் போலவும், சில சமயம் ரகுமான் போலவும், பின்னணி இசையைக் கையாளும் யுவன்சங்கரின் மெட்டுக்களில் மென்மை.

படத்தின் முடிவு படமாக்கப்பட்ட விதத்தில், சினிமாத்தனம் வெளிப்படையாகத் தெரிந்தாலும், இதயத்தை கனமாக்கிவிடும் இலக்கியத் தரமான முடிவு. இதுபோன்ற முயற்சிகள் மூலம்தான் தமிழ் சினிமாவுக்கு விடிவு என்று வழிகாட்டியிருக்கிறார் இயக்குனர் எஸ்.எஸ்.ஸ்டேன்லி!

● அபவ் அவரெஜ் — விஷுவல்தாசன்.

# இலக்கணம் மாறாத வில்லன்!

## ரிமோட்

பெங்களூரில் இன்னும் தமிழ் சானல்கள் ஒளிபரப்பப்படுவதாகத் தெரியவில்லை. ஆனால் இங்கே "உஷே" சானலில் ஒளிபரப்பான ஒரு பாடல், காதுக்கு மிகவும் பரிச்சய மானதாக இருந்தது. அட, 'அதாண்டா இதாண்டா அருணாச்சலம் நான் தாண்டா''தான். கன்னடத்



* சிவாஜி

தில். ரஜினிக்குப் பதிலாக விஷ்ணுவர்த்தன். அருணாச்சலேஸ்வரருக்குப் பதிலாக நஞ்சுண்டேஸ்வரர்!

டி.டி. ஸ்போர்ட்ஸில் பார்வையிழந்தவருக்கான கிரிக்கெட்டை ஒளிபரப்பினார்கள். ஒலியெழுப்பும் பந்து, தரையோடு ஒட்டி வீசப்படுகிறது, என்ற சிறப்பு விதியை அறிந்து கொண்டதுமே பாதி வியப்பு அடங்கிவிட்டது. விக்கெட் கீப்பர் எப்படிச் செயல்படுவார் என்ற மற்றொரு பெரிய கேள்வி "விக்கெட் கீப்பராக மட்டும் பார்வையுள்ளவர் ஆடுவார்'' என்பதை அறிந்தவுடன் அடங்கியது. பார்வையாளர்களாக வந்தவர்களில் பலரும் பள்ளிச் சிறுவர்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

அந்தக் காலத்து வசன கர்த்தாக்கள் எவ்வளவு தொலைநோக்கோடு(!) செயல்பட்டிருக்கிறார்கள் என்பது ஸ்டார் விஜய்யில் விஜய் கிருஷ்ணராஜ் அளித்த பேட்டியில் தெரிந்தது. "கல்தூண் போன்ற பல நாடகங்களுக்கு வசனம் எழுதியிருக்கிறேன். மேஜர் சுந்தரராஜன் கதாநாயகனாக நடித்த இது போன்ற நாடகங்களுக்கு, அவரை ஓரளவும், சிவாஜி கணேசனை மனத்திற்குள்ளும் வைத்துக் கொண்டுதான் வசனங்களை எழுதுவேன். காரணம், அந்த நாடகம் திரைப்படமாகும்போது, அதில் சிவாஜிதான் முக்கிய பங்கேற்பார் என்ற எதிர்பார்ப்புதான்'' என்றார்.



* முத்துராமன்

முத்துராமனின் மனைவியாக மனோரமா நடித்த படம் எது? பலரும் பதிலளிக்கத் திணறக்கூடிய இந்தக் கேள்விக்கான விடை சன் டீவியில் ஒளிபரப்பான "போக்கிரிராஜா'' திரைப்படத்தில் கிடைத்தது. இது தான் முத்துராமன் இலக்கணம் மாறாத வில்லனாக நடித்த முதல் படம், என்பதை விட இதுவே அவரது இறுதிப்படம் என்பது வருத்தத்தை அளித்தது.



* விஜய் கிருஷ்ணராஜ்

- சேனல் பாய்

# 'புஸ்'ஸான வெளிநாட்டு முதலீடு!

உலக அழகிப் போட்டி, கடைசி நிமிடத்தில் மாறி லண்டனில் நடத்தப்பட்டதற்காக, தாம் மிகவும் எதிர்பார்த்த வெளிநாட்டு முதலீடுகள் இனி கிடைக்காதே என்ற ஏக்கம்!

தொடக்கத்திலிருந்தே உலக அழகிப் போட்டி தொடர்பாக நைஜீரிய அரசு பலவித சிக்கல்களை எதிர்கொண்டது. 'கிறிஸ்தவர்களும், முஸ்லிம்களும் கிட்டத்தட்ட சமமாக வாழும் ஒரு நாட்டில் ரம்ஜான் மாதத்தில் இந்த அழகிப் போட்டியை ஏற்பாடு செய்வது ரொம்ப அவசியமா?' என்று கேட்டார்கள். 'இதையெல்லாம் முடிவு செய்வது தங்கள் கையில் இல்லை' என்றது அரசு.

உலக அழகியாகத் துருக்கி நாட்டைச் சேர்ந்த அஸ்ரா தேர்ந்தெடுக்கப்பட்டு விட்டார். நைஜீரியா நாட்டு அதிபர் ஒலுசிகன் ஒபசனோ தான் இடிந்து போயிருக்கிறார். தனது நாட்டு அழகி தேர்ந்தெடுக்கப்படவில்லை என்பதற்காக அல்ல, தமது நாட்டில் நடந்திருக்க வேண்டிய



• ஒபசனோ



• அஸ்ரா

ஆனால் முழுக்க தன் வசமிருந்த ஒரு விஷயத்தில் தவறு செய்ததற்காக, இப்போது தலையைக் கவிழ்த்துக் கொண்டிருக்கிறது நைஜீரியா. தொடக்கத்தில் கிறிஸ்தவர்கள் அதிகம் கொண்ட, நாட்டின் கிழக்குப் பகுதியில் உள்ள போர்ட் ஹர்கோர்ட் என்ற நகரில்தான் இந்தப் போட்டி நடைபெறுவதாக இருந்தது. ஆனால் நாட்டின் மையத்தில் உள்ள அபுஜா நகர்தான் இதற்கு ஏற்றது என்று ஏற்பாடுகளை மாற்றியமைத்தது. இந்தப் பகுதியின் அருகில் முஸ்லிம்கள் எக்கச்சக்கமாக வசிக்கிறார்கள். எனவேதான், முகமது நபியைக் குறித்த ஒரு தவறான கட்டுரை, நாளிதழ் ஒன்றில் வெளியானதும், அதைத் தொடர்ந்து கலவரங்கள் நடந்து, அழகிப் போட்டியையே லண்டனுக்கு மாற்றும்படியாகி விட்டது.

ஆனால் நைஜீரியாவைப் பற்றி சமீபமாக அடிபடும் சில குற்றச் சாட்டுகள் திரித்துக் கூறப்படுபவை. முக்கியமாக, நைஜீரிய நீதிமன்றம், திருமணமல்லாத முறையில் குழந்தை பெற்றுக் கொண்ட அமீனா லவால் என்ற பெண்மணியைக் கல்லால் அடித்துக் கொல்ல வேண்டும் என்று தீர்ப்பளித்ததாகச் சொல்வது புனை கதையாம்!

இந்தியாவில் உள்ள நைஜீரியாவின் தூதர், "இதுவரை யாரும் எங்கள் நாட்டில் கல்லால் அடித்துக் கொல்லப்பட்டதில்லை. இனியும் அப்படி நடக்க வாய்ப்பில்லை" என்கிறார்.

எப்படியோ, இது தொடர்பாக எழுந்த சர்ச்சையினால், பல நாடுகள் (டென்மார்க், நார்வே, தென்னாப்பிரிக்கா, கோஸ்டாரிக்கா போன்றவை) அழகிப் போட்டிக்குத் தங்கள் பிரதிநிதிகளை அனுப்பவேயில்லை.

— ஜி.எஸ்.எஸ்



# தீர்ந்தது திருகு வலி!

ஏகப்பட்ட பிரச்னையில் சிக்கித் தவித்த 'விரும்புகிறேன்', வரும் இருபத்திரண்டாம் தேதி ரிலீஸ்!

பிரசாந்தும், சினேகாவும், நெற்றியில் கைவைத்து புன்னகைப்பதைப் பார்த்தாலே தெரிகிறதே திருகு வலி தீர்ந்து விட்டது என்று!

மணிரத்தினத்தின் தலைமைச்சீடர் சுசிகணேசன், தமது ஒட்டுமொத்த திறமையையும் கொட்டி உருவாக்கிய முதல் படம் இது.

''விரும்புகிறேன் என்று எந்த நேரத்தில் பெயர் வைத்தேனோ, படம் முடிந்து எல்லா ஏரியாவும் விற்றுத் தீர்ந்தும், வெளிவரவில்லையே'' என்று கலங்கிய சுசிகணேசனைத் தேற்றி, பைவ் ஸ்டார் பட வாய்ப்பைக் கொடுத்தார் குரு, மணிரத்தினம்.

அந்தப்படமும் வெளிவந்து வெற்றிகரமாக ஓடி முடிந்துவிட்ட நிலையில், 'விரும்புகிறேன்' வெளிவராததில் மொத்த படக்குழுவே வெம்பி வருத்தப்பட்டது. காரணம் தீயணைப்பு வீரராக பிரசாந்த உயிரைப் பணயம் வைத்து நடித்த படமாம் இது. தவிர தமிழ் சினிமாவுக்குக் கௌரவம் சேர்க்கும் படைப்பு என்று படம் பார்த்தவர்கள் எல்லாம் பாராட்டிக் கொண்டிருக்கிறார்கள்.

எல்லோரையும் விட எக்கச்சக்க சந்தோஷத்தில் இருக்கிறார் சுசிகணேசன். "என் முதல் படம். நான் அதிகமாக எதிர்பார்த்த, என் கனவுகளைக் கொட்டிய படம் அது. அந்தப் படத்தில் பிரச்னை ஆரம்பித்தபோதே நொந்துவிட்டேன். பத்துவருட கனவு அது. இப்போது என்னைவிட வேறு யார் அதிகமாகச் சந்தோஷமடைவார்கள். இந்த நேரத்தில் படத்தின் பிரச்னைகளைப் பற்றித் தோண்ட விரும்பவில்லை" என்கிறார் சுசி.

— ஜெய்

20

'நடாத்தூர் அம்மாள்' என்று ஓர் ஆசார்யருக்கு ஏன் பெண் பெயர்...? அம்மா என்பது காரணப் பெயராக வந்தது இங்கே.

அவர் காஞ்சிபுரத்திலே தேவாதிராஜனுக்கு தினமும் பாலை நிவேதனம் பண்ணுவாராம். பாலை நன்றாகக் காய்ச்சி, அதிலே பரிமள திரவியங்கள் எல்லாம் சேர்த்து, நல்ல முறையிலே பகவான் உகக்கும்படியாக, அதை ரொம்ப அழகாகக் கொண்டு வந்து வைத்து... அதிலே விரலை விட்டு விட்டுப் பார்ப்பாராம்! பகவான் அதை ஸ்வீகரிக்கும்படியாக இருக்கிறதா, என்று தொட்டுத் தொட்டுப் பார்த்துவிட்டுத்தான், சமர்ப்பிப்பாராம். நன்றாக ஆறி, இளஞ்சூடாக இருக்கிறபோது தான் நிவேதனம் பண்ணுவாராம்!

சின்னக் குழந்தைக்கு என்ன தெரியும்! சூடு பார்த்துச் சொல்லத் தெரியாது அல்லவா? அதனால், தாயார்தான் பாலாடையில் பாலை விட்டுப் புகட்டுகிறபோது விரலை விட்டுப் பார்த்துவிட்டுக் கொடுப்பாள்.

அந்த மாதிரி எம்பெருமானுக்கு நிவேதனம் பண்ணுகிறபோது பண்ணுவாராம் நடாத்தூர் ஆசார்யார். பகவானே அவரைப் பார்த்து 'அம்பா' என்று கூப்பிட்டானாம். 'அம்பா' என்றால் அம்மா என்று அர்த்தம். 'எனக்கு அம்மா என்றால் யார் என்பது தெரியாது. என் அவதார

# குறையொன்றுமில்லை

காலத்திலே, சில பேர் எனக்கு அம்மாவாகவும் அப்பாவாகவும் இருந்திருக்கிறார்கள். ஆனால் நீர்தான் எனக்கு அம்மா' என்று பகவான் சொன்னானாம். அதனால், நடாத்தூர் ஆசார்யருக்கு நடாத்தூர் அம்மாள் என்று பெயர் நிலைத்துவிட்டது.

எவ்வளவு புகையப் புகையச் சூடாக இருந்தாலும் பாலை பகவான் சாப்பிடுவான், ஏற்பான். அதிலே எந்தவித ஆட்சேபணையுமில்லை. ஆனால், நாம் எவ்வாறு பரிபக்குவமாகச் சாப்பிடுகிறோமோ, அதே மாதிரிதான் பகவானுக்கு நிவேதனம் பண்ண வேண்டும். அப்படியே உஷ்ணமாக, அடுப்பிலிருந்து இறக்கி நிவேதனம் பண்ணக் கூடாது.

நாம் நிவேதனம் செய்வது வெறும் படத்துக்குத்தானே; விக்ரஹத்துக்குத்தானே என்று நினைக்கக் கூடாது, எம்பெருமான் அங்கே உட்கார்ந்திருக்கிறான் என்கிற எண்ணம் இருக்க வேண்டும். அவன் ஒவ்வொரு காரியத்தையும் பார்த்துக் கொண்டிருக்கிறான்.

மகான்கள் பூஜை பண்ணுகிறபோது எவ்வளவு ஜாக்கிரதையாகப் பண்ணுகிறார்கள் என்று பார்க்க வேண்டும். இன்னும் சற்று நேரம் பண்ண மாட்டார்களா, நாம் பார்க்க மாட்டோமா என்று ஆசை வரும். அர்க்கியம் சமர்ப்பிப்பது, பாத்யம் சமர்ப்பிப்பது, கண்டா (மணி) நாதம் பண்ணுவது, எல்லாமே பவ்யமாக இருக்கும்.

இந்த பவ்யம் நமக்கு பகவான் எதிரிலே எப்போதும் இருக்க வேண்டும். 'மடக்குற துவண்டு நின்றான்' என்கிற ரீதியிலே வணக்கம், ஒடுக்கம், ஒழுக்கம் எல்லாமே வேண்டும்.

அப்படி இருந்தால்தான் அவன் நம்மை உகப்பான். நாம் செய்கிற பூஜை, உபசாரங்களில் ஏதேனும் கெடுதல்கள் இருந்தாலும், அதையெல்

முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

"என்ன தலைவா, வேலைக்காரன், வேலைக்காரி, தோட்டக்காரன், டிரைவர்ன்னு யாரைப் பாத்தாலும் பயப்படறீங்க..."

"எதுக்கெடுத்தாலும் தாறுமாறா பேசறாங்க, 'கன்னா பின்னா'ன்னு எல்லாரையும் திட்டறாங்க... நம்மடி கட்சியில பெரிய ஆளா வந்துடுவாங்களோன்னு பயமா இருக்கு..."

— தமிழ்



லாம் போக்கி விடுவான்.

ஆகையினாலே, நம்மிடத்திலே இருக்கிற தோஷங்களையெல்லாம் போக்கி அனுக்கிரஹம் பண்ணுவதனாலே, அவனைப் பரமாத்மா என்று அழைக்கிறோம்.

இதை மேலும் அழகாக விளக்குகிறார் ஆசார்யர். கர்ம காண்டத்திலே ஒரு அழகான மந்திரம் வருகிறது. உதக சாந்தி ஹோமம் பண்ணுகிற போது, கலசம் வைப்பதற்காக அரிசியைப் பரப்பி, அதிலே தர்ப்பத்தால் கோடு போடுவார்கள். அப்படிப் போடுகிறபோது இந்த மந்திரத்தைச் சொல்லிப் போடுவார்கள். அப்புறம்தான் கலச பிரதிஷ்டை. போதாயன மஹரிஷி இந்த மந்திரத்தைச் சொல்கிறார்.

நாமெல்லாம் மந்திரத்தைச் சொல்கிறோம். ரிஷிகளோ மந்திரத்தைப் பார்த்தவர்கள்! அதற்கான உள்ளீடான தேவதையை தரிசித்தார்கள். அந்த மந்திரத்திலே சித்தி பெற்றார்கள்.

விச்வாமித்ர மஹரிஷி இருக்கிறார். காயத்ரி மந்திரத்துக்கு உரிய தேவதையைப் பிரத்யக்ஷமாகப் பார்த்தவர் அவர். நாமும் தான் காயத்ரி மந்திரம் சொல்கிறோம். ஒரு நாளாவது அந்த தேவதையைப் பார்த்ததுண்டா! அந்த தேவதையினுடைய சாக்ஷாத்காரம் நமக்கு ஏற்பட்டதா? இல்லையே!

ஏனென்றால், மந்திரத்தை நாம் வெறுமே சொல்கிறோம். ரிஷிகள் பல நாள் உபவாஸம் இருந்து, ரொம்ப வைராக்கியத்தோடு ஊன் வாட வாட, உண்ணாது உயிருக்குக் காவல் இட்டுள்ளார்கள். சரீரத்தை வருத்தி, ஆத்ம தாரணம் பண்ணி, அந்த மந்திரத்துக்கு உண்டான தேவதையை அவர்கள் கண்டார்கள்.

'ரிஷிர் தர்சனாத்' என்கிறார் பாணினி. வியாகர்ண சூத்திரத்தை அனுக்கிரஹம் பண்ணியவர் பாணினி. ரிஷிர் சப்தத்துக்கு என்ன அர்த்தம்...? 'பார்ப்பதனாலே அவர்கள் ரிஷிகள்' என அர்த்தம் என்கிறார் பாணினி.

அதனால்தான் பெரிய வாச்சான் பிள்ளை, திருப்பாவை மூவாயிரப்படி வியாக்யானத்திலே வெகு அழகான விளக்கம் ஒன்று தருகிறார்.

நித்ய சம்சாரிகளான நமக்கும், மந்திரத்தைப் பார்த்த மஹரிஷிகள் இருக்கிறார்களே... அவர்களுக்கும் 'பர்வத பரமாணு வோட்டை வாசி' என்கிறார். அப்படியானால் ரிஷிகள் பர்வதம், அவர்களை ஒப்புநோக்க, நாம் பரமாணு (சின்னஞ்சிறு தூசித்துகள்) என்று அர்த்தம்.

அதே மாதிரி ரிஷிகளையும் ஆழ்வார்களையும் ஒப்பிட்டார் பெரியவாச்சான் பிள்ளை. அப்படி ஒப்பிட்டால், ரிஷிகள் கீழே இருக்கிறார்கள்; ஆழ்வார்கள் உச்ச ஸ்தானத்திலே இருக்கிறார்கள்.

இவர்கள் சிரமப்பட்டுத் தங்களை வருத்திக் கொண்டு பகவானைக் கண்டார்கள். ஆனால், ஆழ்வார்களோ அவனே காட்டக் கண்டார்கள். ஆகையினால், அவர்கள் ரிஷிகளைக் காட்டிலும் உயர்ந்தவர்கள்.

அதிலும் பெரியாழ்வார் மற்ற ஆழ்வார்களைக் காட்டிலும் உயர்ந்தவர். அவன் பெருமையைப் பாராமல், தன் சிறுமையைப் பாராமல், அவனுக்கே அவர் பல்லாண்டு பாடிவிட்டார் அல்லவா!

அதிகமாக ப்ரீதி ஏற்பட்டது என்றால் அங்கே சாஸ்திரம் விலை செல்லாது; குறைகளும் விலை செல்லாது... — இதையும் சாஸ்திரமே சொல்லியிருக்கிறது.

ஏகமாகப் ப்ரீதி ஏற்பட்டுவிட்டது ஒருத்தருக்கு பகவான் பேரிலே.... காலை எழுந்தவுடனே பூஜையறைக் கதவைத் திறந்து 'கௌசல்யா சுப்ரஜா ராமா' என்று அழைத்து கை தட்டி, பகவானுடைய

திருமுக மண்டலத்தைப் பார்த்தார்... 'ஐயோ!' முகத்தைப் பார்த்தால் பகவானுக்குப் பசிக்கிற மாதிரி தோன்றியது அவருக்கு. பண்ணி வைத்திருந்த பிரசாதத்தைக் கொண்டு வந்து நிவேதனம் பண்ண ஆரம்பித்து விட்டார்.

எம்பெருமானுக்கு முறைப்படி பூஜை பண்ண வேண்டாமா? ஸ்நானம் பண்ணி வைக்க வேண்டாமா? கிரமப்படி அலங்காரம் ஆசனம் அப்புறம்தானே நிவேதனம்...?

ஆனால், அதெல்லாம் கிடக்கட்டும் என்று நிவேதனம் பண்ண ஆரம்பித்து விட்டார் அவர்! ஏனென்றால் அதிக ப்ரீதி ஏற்பட்டுவிட்டால், அங்கே சாஸ்திரம் விலை செல்லாது.

கல்லடி பட்டாலும் கண்ணடி படக் கூடாது என்று கருதி, தன்னுடைய சிறுமை பாராது, எம்பெருமானுடைய பெருமை பாராது, அவனுக்கே பல்லாண்டு பல்லாண்டு என்று மங்களா சாஸனம் பண்ணிய – மங்களமான ஆசாஸனம் என்று பொருள் – அந்த உயர்ந்த வழி பெரியாழ்வாருடையது. விஷ்ணு சித்தர், பெரியாழ்வார் என்ற பெயரைப் பெற்றது அதனால்தான். எம்பெருமானுக்கே, அந்த ரங்கநாதனுக்கே மாமனார் அவர்.

படுத்துக் கொண்டிருந்த எம்பெருமானைத் தட்டி எழுப்பி, அவன் சொன்னதை அவனுக்கே எடுத்துச் சொல்லி, அவனையே திருக் கல்யாணம் பண்ணிக் கொண்டாள் ஆண்டாள். அதனால் பெரியாழ்வாரைக் காட்டிலும், ஆண்டாள் உயர்ந்தவளாகிப் போனாள்!

ரிஷிகள் எவ்வாறு மந்திரங்களை நன்கு உணர்ந்து, உள்ளுக்குள்ளே இருக்கக் கூடிய எம்பெருமானை உணர்ந்து வழிபட்டார்கள் என்று சொல்ல ஆரம்பித்தேன் அல்லவா – ரிஷி தர்சனாத்.

இந்திந்த இடத்திலே இன்னின்ன மந்திரங்களைச் சொன்னால், பலனைக் கொடுக்கும் என்று காட்டிக் கொடுத்தார்கள் அவர்கள். இந்த இடத்திலே இந்த மந்திரத்தைச் சொன்னால் இந்தப் பலன் கிடைக்கும் என்று காட்டிக் கொடுத்தார்கள்.

போதாயன மஹரிஷி சொல்கிறார். பரப்ரும்மத்தினுடைய அறிவு நமக்கு முதலில் வேண்டும் என்று. எம்பெருமானைக் குறித்து தெரிந்து கொள்ள வேண்டும். அந்த ஞானத்தைச் சம்பாதிக்க வேண்டும் – அதைத்தான் இன்னொரு இடத்திலே ஆசார்யர்கள் எடுத்துச் சொல்கிறார்கள். – வேத கருத்தைச் சொல்கிறார்கள். அர்த்த பஞ்சகம் என்று அதற்குப் பெயர். வேதமோ, இதிகாசமோ, புராணமோ...எத்தனை சாஸ்திரம் நாம் பேசினாலும், அர்த்த பஞ்சகம் என்ற ஐந்தின் மேல்தான் அத்தனையும் நிற்கிறது.

அதை அப்படியே தமிழ்ப்படுத்திக் காட்டினார்.

*மிக்க இறை நிலையும் மெய்யா*
*உயிர்நிலையும்*
*தக்க நெறியும் தடையாகித் தொக்கியலும்*
*ஊழ்வினையும் வாழ்வினையும் ஓதும்*
*குருகுயர்கோன்*
*யாழினிசை வேதத் தியல்.*

– நாம் அடைய வேண்டிய பொருள் பரப்ரும்மம், அவனுடைய ஸ்வரூப – ரூப – குண ஐச்வர்யாதிகள் என்று சொல்வார்கள் ஆசார்யர்கள். அவனுடைய ஸ்வரூபமென்ன, ரூபமென்ன, ஐச்வர்யமென்ன, பலம் என்ன, அவன் எப்படிப் பட்டவன் என்று எம்பெருமானைக் குறித்து, தெளிவான ஞானத்தை நாம் சம்பாதிக்க வேண்டும். பகவத் ஞானம் மிகவும் அவசியம்.

கீதையிலே இது குறித்து ரொம்ப கவலையுடன் பகவானே பேசுகிறான்....

(வளரும்)



''காதல் கல்யாணம் பண்ணிக்குவேன்னு ஒத்தக் காலுல நின்ன உங்க பையன் மனச எப்படி மாத்துனீங்க?''
''என் வாழ்க்கை ரகசியத்தை என் பையன் முன்னால போட்டு உடைச்சதாலேதான்!''
''அது என்ன ரகசியம்?''
''நான் காதல் கல்யாணம் பண்ணிக்கிட்டவன்கிற ரகசியம்தான்!''
– வி. சகிதா முருகன்

இரவின் அமைதியை உடைத்து விட்டு வந்தது லாரி. கோகிலாம்மாவின் வீட்டுக்கு முன் நின்றது. வீட்டுக்குள்ளிருந்து கோகிலாம்மா ஓடி வந்தாள். அவள் இடுப்பில் இரண்டு வயசுப் பேரப் பயல் அமர்ந்திருந்தான். நோஞ்சான் பயல் அவன். அவள்தான் பருமனான உருவம். தோலும் சதையுமாய்ச் சரிந்த தேகம். ஐம்பதுக்கு மேலிருக்கும் வயசு. 'மூச்மூச்' சென்று இரைத்துக் கொண்டு நின்றாள். ஒரு நொடியில் அவளுக்குப் பின்னே அவசரம் அவசரமாய் பிரதாப் வந்து நின்றான். லுங்கியும் பனியனும் அணிந்திருந்தான். ஒடிசல் தேகம். உருண்டை முகம். நறுக்கு மீசை.

அவர்களைக் கண்டதும் ஓட்டுநரும், கூடவே ஒரு கூலியாளும் கீழிறங்கி வந்தனர். தன் கையிலிருந்த ரசீதுகளைப் பிரதாப்பிடம் தந்து விட்டு, அவன் முகத்தையே பார்த்துக் கொண்டு நின்றார் ஓட்டுநர். ரசீதுகளை 'படக்'கென்று வாங்கிக் கொண்ட பிரதாப், சற்று நேரம் கூர்மையாக அவற்றைப் பார்வையிட்டான். விவரங்கள் சரியாகத்தான் இருக்கின்றன என்பதற்கு அறிகுறியாய், அவன் மெதுவாகத் தலையாட்டிக் கொண்டான்.

லாரியின் பின்புறம் ஓட்டுநரும் கூலியாளும் 'மளமள'வென்று ஏறினர். கயிறுகளை வேகம் வேகமாய் அவிழ்த்தெடுத்துப் பாரங்களைக் கீழே இறக்கினார்கள். கீழே பிரதாப் மட்டும் ஒண்டியாய் நின்றிருப்பதைப் பார்த்து வீட்டுக்குள்ளிருந்து அவன் மனைவி சாந்தினி ஓடி வந்தாள். பதமாக, மிகப் பதமாகப் பொருட்கள் இறக்கப்பட்டன. உயர்ந்து விரிந்த ஸ்டீல் பீரோ ஒன்று, அகன்று பரந்த கட்டில் ஒன்று, ஒரு குளிர்சாதனப் பெட்டி, ஒரு ஸ்டீல் மேசை, இரண்டு நாற்காலிகள். தூரத்தில் நின்றிருந்த கோகிலாம்மா, அவர்களிடம் அவற்றை எச்சரிக்கையாய் இறக்கி வைக்கும்படி அறிவுரை சொன்னாள். இறங்கிய மேனிக்கே அவை வீட்டுக்குள்ளும் போயின. வேர்த்து விறுவிறுத்துப் போனார்கள் பிரதாப்பும் அவனின் மனைவியும். வேறு என்ன செய்ய? அவர்களின் காரியங்களை அவர்களே செய்தாக வேண்டும். பக்கத்து வீட்டுக்காரர்கள் உதவிக்கு வருவார்கள் என்பதை நினைத்துக் கூடப் பார்க்க முடியாதிருந்தது. அந்த 'ப்ளாக்'கில் ஆக்கிரமித்திருந்த நான்கு வீட்டுக்காரர்களுமே



நான்கு கோணங்களில் இருந்தார்கள். தத்தம் வீடுகளுக்கு முன்நின்று வேடிக்கைப் பார்த்துக் கொண்டிருப்பதில் மட்டும் ஒற்றுமையைக் கடைப்பிடித்தனர்.

பாரங்களை இறக்கிவிட்ட நிம்மதியில் பெருமூச்சு விட்டுக் கொண்டே லாரி விரைந்து போயிற்று. இன்று மாலையில் பிரதாப்தான் கடைவீதிக்குப் போய் அந்தப் பொருட்களுக்கெல்லாம் விலை பேசி விட்டு வந்திருந்தான். இரவில் லாரியில் அனுப்பித் தருவதாகக் கடைக்காரரின் ஒப்பந்தம். சரியாக ஒன்பது மணிக்கு அவை வந்திருந்தன.

## அபிமானி

பொருட்கள் எல்லாம் சரியாக வந்திருந்த மகிழ்ச்சியில் எல்லோ ரும் வீட்டுக்குள் போனார்கள். சிறிது நேரத்தில் கையில் ஐந்தாறு மிளகாய் வத்தலையும், கொஞ்ச மாய் உப்பையும், ஒரு தீப்பெட்டி யையும் பொத்திக் கொண்டு கோகிலாம்மா வெளியே வந்தாள். லாரி நின்று போயிருந்த தரையின் பக்கத்தில் பேரனை இறக்கி விட் டாள். தன் 'ப்ளாக்'கை வெறுப் போடு திரும்பிப் பார்த்தாள். தன் வீட்டுக்கு நேர் மேல்வீட்டு பால்கனியில் சுகந்தாவும் அவளின் இரண்டு பெண் குழந்தைகளும் நின்றிருப்பது தெரிந்தது. கோகி லாம்மாவின் மருமகள் வயதுதானி ருக்கும் சுகந்தாவுக்கும். பிரதாப் பைப் போலவே சுகந்தாவின் கணவனும் அலுவலகத்தில் எழுத் தர் பணி செய்து கொண்டிருந் தான். ஆனால் சுகந்தாவின் கணவன் தன் வருமானத்தை எல்லாம் குடிப்பழக்கத்தில் கரைத் துக் கொண்டிருந்தான் என்பது எல்லோருக்கும் தெரிந்திருந்த யாப் போச்சு. இவளுவ கண்ணு பட்டாலே ஒண்ணும் கரச் சேராது. கண்ணுல கொள்ளிய வைக்க."

தரையில் வத்தலையும் உப்பையும் ஒன்று சேர்த்துப் போட்டு தீக் கொளுத்தினாள் கோகிலாம்மா. நெருப்பின் ஜுவாலையில் 'பட்பட்'டென்று தெறித்துச் சிதறின வத்தல் கள். எல்லாவற்றையும் எரித்துவிட்ட சந் தோஷத்தில், மேலெழுந்து கிளைப் படர்த்திப் போயின புகைக்கீற்றுகள். அவளுக்குப் புகைச்சல் எழவில்லை.

"கொஞ்சமாவது தொண்டைக் கமறு தான்னு பாரு... எல்லாம் அவளுவ கண் திருஷ்டி.. நாசமாப் போறதுக்கு."

சுகந்தாவைப் பார்த்துக் குற்றக் கணை களை வீசிக் கொண்டே தன் பேரனை எடுத்து மடியில் உட்கார வைத்தார் கோகி லாம்மா. மற்ற 'ப்ளாக்கு'களின் வாசல்களுக்கு முன்னும் மனித முகங்கள் தெரியாமலில்லை. ஆனால் கோகிலாம்மாவின் கோபம் சுகந் தாவின் மீதே நிலைத்திருந்தது.

ஆத்திரப்பட்டாள் சுகந்தா. எவ்வளவு நேரந்தான் பொறுமை காக்க முடியும்?

"சும்மா வாயில வந்தபடி எல்லாம் பேசினா மரியாதை கெட்டுப் போயிரும்.. நா நாசமாப் போனா ஒனக்கென்ன சந்தோ சம்? என் சக்களத்தியா நீ?"

கோகிலாம்மாவுக்குத் தேகம் கொதித்தது. பேரனைத் தூக்கிக் கீழே நிறுத்தி விட்டு,

# இருப்பவர்கள்

உண்மையாய் இருந்தது. வறிய ஜீவனம் சுகந்தாவுக்கு. அந்த வறுமையே அவளை கோகிலாம்மாவிடமிருந்து அந்நியப் படுத்தி யிருந்தது. சுகந்தாவின் மேல் இளப்பத்தை யும், எள்ளலையும் உருவாக்கியிருந்தன. கோகிலாம்மாவுக்கு வருமானம் அதிகம். தன் மகன் பிரதாப்பின் சம்பளமும், தாலுகா அலு வலகத்தில் பணி செய்து இறந்து போன கண வரின் குடும்ப ஓய்வுத் தொகையும், அவ ளைப் பணத்தில் திளைக்க வைத்தன.

மேலே பார்த்துக் கொண்டே கோகி லாம்மா முணுமுணுத்தாள்.

"பாக்கிறாளுவ பாரு, மேல நின்னுக்கிட்டு. அடுத்த வீட்ல என்ன எறங்குது, ஏது நடக்குதுன்னுப் பாக்கறதே இவளுவ வேலை

வீறாப்பாய் எழுந்து நின்றாள்.

"யாரைடி சக்களத்திங்கற? ஒன் வய சென்ன, என் வயசென்ன?"

"தெரியுதில்ல, ஒன் வயசுக்கும் என் வயசுக்குமுள்ள வித்தியாசம்? பிறகு ஏன் எப்பப் பாத்தாலும் என்கிட்டயே மல்லுக்கு வர்ற? ஒன் வீட்டுக்குப் பொருள் வந்திச்சின்னா எனக்கென்ன? கண்ணிருந்தா பாக்க மாட்டாங்களா? பேசறியே பெருமக் கொளிக்க."

'சரசர'வென வீட்டுக்குள்ளிருந்து பிர தாப்பும் அவன் மனைவியும் ஓடி வந் தார்கள். அம்மாவை அதட்டிச் சப்தம் போட்டுக் கொண்டே, வீட்டுக்குள் கூட்டிப்

"தரகரே, பொண்ணு எதுவரை படிச்சிருக்கா?"
"துணுக்கு, சிறுகதைன்னு படிச்சிட்டிருந்தவ இப்ப தொடர் கதை படிக்க ஆரம்பிச்சிருக்கா!"

— வி. சகிதா முருகன்



போனான் பிரதாப். குழந்தையை சாந்தினி எடுத்துக் கொண்டாள். நல்ல வேளை, இந்நேரம் சுகந்தாவின் கணவன் வீட்டில் இல்லை. மதுக்கடைக்குப் போயிருந்தான். இரவு பதினொரு மணிக்கு மேல்தான் வீடு திரும்புவான். இந்நேரம் அவனிருந்திருந்தால் ஒரு யுத்தமே அரங்கேறியிருக்கும்.

இப்போது அந்தக் குடியிருப்புப் பகுதியின் எல்லா வாசல்களுக்கு முன்னேயும் முன்னைவிட அதிகமான முகங்கள் தெரிந்தன.

மேலிரண்டும் கீழிரண்டுமாய் நான்கு வீடுகளைக் கொண்ட 'ப்ளாக்கு'கள் மொத்தம் நாற்பது இருந்தன அங்கே. அலுவலகப் பணியாளர்களுக்காக நிர்வாகம் கட்டித் தந்திருக்கும் குடியிருப்புகள். ஒருசில வீடுகளில் உள்ளவர்களே ஒற்றுமையாய் இருந்தார்கள். மற்றவர்களுக்குள் மனப்புகைசல்கள். அதிலும் பக்கத்துப் பக்கத்து வீடுகளில் வசிப்போருக்குள் அநேகமாய் முரண்பாடுகள் தான். ஒரு சிறு தவறு நிகழ்ந்தாலும் பெரிதாக்கி மோதினார்கள்.

கோகிலாம்மாவுக்கும் சுகந்தாவுக்கும் இடையில் புகைந்து நின்றது பொருளாதார முரண்பாடுதான். அதுவே பல சண்டைகளுக்கு அடிப்படையாய் இருந்தது. ஆகாத மருமகள் கைப்பட்டாலும் குற்றம், கால் பட்டாலும் குற்றம் என்கிற மாதிரி, வசதியில் குறைந்திருந்த சுகந்தாவின் வீட்டிலுள்ளவர்களின் சாதாரணப் போக்குகள் கூட, கோகிலாம்மாவுக்கு விஷமமாகப் பட்டன. மேல் வீட்டிலிருந்து ஒரு தூசித் துரும்பு கீழே விழுந்தாலும் போதும், சுகந்தாவின் வீட்டிலுள்ளவர்கள்தான் வேண்டுமென்றே கீழே தூக்கிப் போட்டதாகக் குற்றச்சாட்டுகள் எழும். வார்த்தைகள் தடிக்கும். வம்பில் முடியும். கோகிலாம்மா கொடிகட்டிக் கொண்டு நிற்பாள்.

கோகிலாம்மாவின் பணச் செழிப்பே அவளை இப்படி ஆட்டம் போட வைத்தது. தனக்கு மற்றவர்கள் யாரும் நிகரில்லை என்கிற ஆட்டம். தன் வசதி வாய்ப்புகளை மற்றவர்களால் தாங்கிக் கொள்ள முடிவதில்லை என்கிற தற்பெருமை. குறிப்பாக சுகந்தாவால்! இன்று இறங்கியிருந்த பொருட்கள் கூட, கோகிலாம்மாவின் பெருமையைப் பறைசாற்றும் பொருட்டுத்தான். அவளின் இளைய மகளுக்கு சீர்வரிசையாய்ப் போகப் போகின்றன அவை. பட்டப் படிப்பு முடித்து விட்டு வீட்டிலிருக்கும் அவளுக்கு, வங்கி மாப்பிள்ளையைப் பார்த்திருந்தாள். இன்னும் ஒரு வாரத்தில் - அடுத்த புதனில் - கல்யாணம். பத்திரிகைகள் அடித்து விநியோகம் பண்ணியாயிற்று. அந்தக் குடியிருப்புப் பகுதியில் சுகந்தாவின் வீடு தவிர, மற்றவர்களுக்கெல்லாம் பத்திரிகைப் போயாயிற்று. அதுபற்றி சுகந்தா ஒன்றும் பெரிதாக நினைத்துக் கொள்ளவில்லை. ஒரு பெண் பிள்ளை வாழ்க்கைப்பட்டுப் போவதில் அவளுக்கு உள்ளூர மகிழ்ச்சி யாயிருந்ததே உண்மை.

'பேண்டு' வாத்தியங்கள் முழங்க... ஊர் அழைத்து... விருந்து வைத்து... கல்யாணத்தை நடத்தி...

எல்லாம் ஒரு நிமிடத்தில் நிகழ்ந்து முடிந்தது போலத் தோன்றின. மாப்பிள்ளையும் பெண்ணுமாய் காரில் அனுப்பி வைத்து, அன்றிரவே லாரிகள் நிறைய சீர் செனத்திகளை எல்லாம் ஏற்றி விட்டாயிற்று. லாரிகள் நிறையச் சீர் வரிசைகள். இரண்டு லாரிகள். அந்தப் பகுதியிலே அது போன்ற திருமணக் கொண்டாட்டங்களும், சீர்வரிசைகளும் யாருமே நிகழ்த்தியதில்லை என்கிற பேச்சுக்களில், கோகிலாம்மா மகிழ்ந்து போனாள்.

மறுவீடு இத்யாதிகள் எல்லாம் முடிந்து, கல்யாணக் களேபரங்கள் மறந்து கொண்டிருந்தது. சரியாக ஒரு மாதம் ஆகியிருக்கும்.

அன்று மதியம் போல ஊரிலிருந்து தனிக்கட்டையாய் வந்து கொண்டிருந்தாள் கோகிலாம்மாவின் மகள். மாப்பிள்ளை வரவில்லை. எல்லோரும் கதிகலங்கிப் போனார்கள்.

"என்னால இனி அவரோட குடும்பம்

நடத்த முடியாது. ஒரு மரக்கட்டைக்குப் போய் என்னைய கல்யாணம் பண்ணிக் குடுத்திருக்கிங்களே!"

கேவிக்கேவி அழுதாள் அவள். அவள் சொன்னதன் அர்த்தம் புரிந்தது எல்லோருக்கும். ஒரு குமரிப் பெண் தன் வெட்கத்தை விட்டுச் சொல்கிறாள் என்றால் இவ்வளவு நாட்களும் எத்தனை இறுக்கத்துடன் அவள் இருந்திருக்கிறாள் என்பது புரிந்தது. கோகிலாம்மாதான் மிகவும் மனமொடிந்து போனாள். தாம்பத்திய வாழ்க்கைக்குத் தகுதியில்லாதவனிடமா தன் குலக்கொழுந்தைத் தாரை வார்த்து விட்டோம் என்று குமுறினாள். மகளைத் தேற்றுவதற்குக் கூட அவளுக்குத் தைரியமில்லாமல் போயிற்று.

மறுவாரமே மாப்பிள்ளை வீட்டிலிருந்து சமாதானம் சொல்லி ஆட்கள் வந்தனர். மாப்பிள்ளைக்கு நேர்ந்திருப்பது தற்கால இழப்புதான், நாளாவட்டத்தில் அது நிவர்த்தியாகி விடும் என்றனர்.

மகள் ஒப்புக் கொள்ளவில்லை. கோகிலாம்மாவுக்கும் அவளின் மகனுக்கும் கூட சம்மதம் இருக்கவில்லை. ஏதோ தங்கள் வாழ்க்கையில் கெட்ட கனவொன்றைக் கண்டு விட்டதாகப் பரிதவித்தார்கள். மீண்டும் மீண்டும் அந்தக் கனவைக் காண அவர்களுக்கு விருப்பம் இல்லாதிருந்தது.

பெண் தாலிக் கொடியைக் கழற்றித் தந்து விட, கல்யாணத்தன்று இவர்கள் அனுப்பி வைத்திருந்த சீர் வரிசைகள் எல்லாம் இங்கே வந்துவிட வேண்டுமாய் முடிவாயிற்று.

இரவின் அமைதியை உடைத்துக் கொண்டு வந்தன லாரிகள். கோகிலாம்மாவின் வீட்டுக்கு முன் நின்றன. தங்கள் முதுகுகளில் தாங்கியிருந்த பாரங்களின் அழுத்தத்தாலோ என்னவோ, அவை அழுவது போல இரைந்து கொண்டு நின்றிருந்தன. சற்றைக்கெல்லாம் வீட்டுக்குள்ளிருந்து கோகிலாம்மா ஓடி வந்தாள். அவள் இடுப்பில் இரண்டு வயசுப் பேரப் பயல் அமர்ந்திருந்தான்.




அவளுக்குப் பின்னே மகனும் மருமகளும் ஓடி வந்து நின்றனர்.

லாரிகளின் இரைச்சல்களை நிறுத்தி விட்டு இரண்டு ஓட்டுநர்களும் மற்றும் இரண்டு உதவியாளர்களும் கீழிறங்கி வந்தனர். பிரதாப்பிடம் சம்மதம் வாங்கிக் கொண்டு மளமளவென்று ஒரு லாரியின் பின்புறம் ஏறினர். பொருட்கள் ஒவ்வொன்றையும் மெதுமெதுவாகக் கீழிறக்கினர். கீழே பிரதாப்பும் அவனின் மனைவியும் ஒன்றாய்ச் சேர்த்து அவற்றை வாங்கி, அதே வேகத்தில் வீட்டுக்குள் சென்று வைத்து விட்டு வந்தனர்.

அடுத்தது மறு லாரி.

ஒவ்வொரு பொருளும் இறங்கி வீட்டுக்குள் சென்ற போது, கோகிலாம்மா அவற்றை மனசுக்குள் சரிபார்த்துக் கொண்டாள். அதே பீரோ.. அதே கட்டில்... அதே மெத்தை... அதே குளிர்சாதனப் பெட்டி... அதே நாற்காலி... அதே... அதே...

எல்லாவற்றையும் இறக்கி விட்ட வெறுமையில் லாரிகள் தடதடவென்று ஓடின. ஒரு சூன்யம் நிலவிற்று அங்கே.

கோகிலாம்மா இடிந்து போய் நின்றிருந்தாள். ஒரு கலவரம் நடந்து முடிந்து விட்டது போன்ற கலக்கமிருந்தது அவள் மனசில். யதேச்சையாய் அவள் பார்வை மேல் வீட்டுக்குப் போயிற்று. வழக்கம் போல பால்கனியில் சுகந்தாவும் அவளின் இரு பெண் குழந்தைகளும் நின்றிருந்தது தெரிந்தது. பக்கத்து வீடுகளிலும் வாசல் நிறைய முகங்கள்.

கோகிலாம்மாவின் இடுப்பில் அமர்ந்திருந்த பேரன் கேட்டான், தன் மழலை மொழியில் :

"ஏம் பாட்டி, நம்ம வீட்டுக்கு நெறைய சாமான்க வந்திருக்கிறத எல்லாரும் பாத்துக்கிட்டு நிக்காங்களே. நீ வத்தலையும் உப்பையும் கொளுத்திப் போடலியா?" ○

"பெண்களுக்கு சம உரிமை கொடுக்க வேண்டும் என்பதை ஒப்புக் கொள்ளுகிறீர்களா?"

"நான் ஒப்புக் கொள்ளுகிறேன். ஆனால் என் மனைவி அதை ஒப்புக் கொண்டு தன் உரிமைகளை விட்டுக் கொடுக்கத் தயாராகணுமே!"

— ஆர்.ஆர் பூபதி



• நீலா, குஞ்சுமணி

# குழல் இனிது; யாழ் இனிது...!

**சிக்கில் சகோதரிகள் குஞ்சுமணி - நீலா இருவருக்கும் இந்த ஆண்டு மியூசிக் அகடமியின் 'சங்கீத கலாநிதி' விருது வழங்கப்படுகிறது. அவர்களைச் சந்தித்த போது...**

• *இந்த விருது உங்களுக்குத் தாமதமாகக் கிடைத்திருக்கிறது என்று நினைக்கிறீர்களா?*

நாம் நினைப்பதில் என்ன இருக்கிறது? அதற்குப் பிராப்தம் என்று ஒன்று இருக்கிறதல்லவா! சிலதெல்லாம் கிட்டே வராப் போல இருக்கும். ஆனால் எட்டிப் போய்விடும். அதனால் விருதையே நினைத்துக் கொண்டு இருப்பது தவறு. சங்கீதத்தை ஐம்பது வருடங்களுக்கு மேலாக யாகம் மாதிரி செய்துகொண்டு வருகிறோம். வாழ்க்கையில் எத்தனையோ பேருக்குப் பாராட்டோ, அங்கீகாரமோ வராமலேயே போய்விடுவது உண்டு. அப்படிப் பார்க்கும் போது, 'சங்கீத கலாநிதி' விருது கிடைப்பது பெரிய பாக்கியம். அதுவும் அகடமியின் பிளாட்டினம் ஜூபிலி ஆண்டில் பெறுவது, இன்னும் சந்தோஷம் தருகிறது.

• *இரண்டு பேராக இசை வழங்கும் போது, சாதாரணமாக மூத்தவருக்கு மட்டும்தான் விருது கொடுப்பார்கள். உங்கள் இரண்டு பேருக்குமே அகடமி விருது வழங்குவது இது முதல் தடவை போலிருக்கிறதே...?*

ஆமாம். ஆலத்தூர் சகோதரர்களுக்குக் கொடுத்தபோது கூட, ஒருவருக்குத்தான் முதலில் கொடுத்தார்கள். எங்கள் விஷயத்தில் இரண்டு பேருக்குமே ஒரே மேடையில் இந்த விருதைக் கொடுப்பதாக இருக்கிறார்கள். தலைவர் டி.டி.வாசு முதலில் ஃபோன் செய்து தகவலைச் சொன்னார். ஏகமனதாக எங்களை விருதுக்குத் தேர்ந்தெடுத்திருப்பதாகச் சொன்னார். மகிழ்ச்சியாக இருந்தது. பிறகு எல்லா செயலாளர்களும் ஃபோனில் வாழ்த்துத் தெரிவித்தார்கள். விருது சங்கீதத்துக்குத்தானே தவிர, தனிப்பட்ட மனிதர்களுக்கு அல்ல, என்பது எங்கள் கருத்து.

• *'குழல் இனிது யாழ் இனிது என்பர், தம் மக்கள் மழலைச் சொல் கேளாதவர்' என்ற திருக்குறள் நினைவிருக்குமே? நீங்கள் சொல்லுங்கள்...*

*குழல் இனிதா, மக்கள் மழலை இனிதா?*

குழந்தையின் மழலையும் அவசியம்தான். அது இனிது தான். ஆனால் அதேசமயம் குழல் இசையின் இனிமையும் வாழ்க்கையில் தேவைதான். குழந்தையின் மழலையை ரசிக்கும்போது, எப்படிப் பாச உணர்வு மேலோங்கி நிற்கிறதோ, அப்படியே குழல் இசையை ரசிக்கும்போது தெய்வீக உணர்வு மேலிடுகிறது. இரண்டுமே தருவது என்ன? சந்தோஷம்தானே? இரண்டையுமே புரிந்து கொண்டு ரசிக்கிறவர்களைப் பொறுத்துத்தான் அந்த மகிழ்ச்சி அமைகிறது!

● *நீங்கள் புல்லாங்குழல் வாசிக்க ஆரம்பித்தபோது, யார் அதிக அக்கறை காண்பித்தார்கள்?*

எங்கள் தகப்பனார்தான். 'அழுத்தி வாசிக்கணும்; ஸ்பஷ்டமாய் இருக்கணும்' என்பார். 'பூவரசம்பூ இலையை வைத்து ஊதுகிற மாதிரி இருக்கலாகாது; நாபியிலிருந்து வரணும் அந்த வாசிப்பு' என்பார். உதாரணமாக, மன்னார்குடி பக்கிரியாப் பிள்ளை அவர்களின் நாகசுர வாசிப்பைப் போல இருக்கணும் என்பார். அவர் வாசித்தால், சுவாமி புறப்பாட்டைப் பார்த்துவிட்டு, பொதுமக்கள் அவர் பின்னாலேயே போய்விடுவார்கள்!

● *கல்யாணக் கச்சேரிகள் நிறைய வாசிக்கிறீர்களே? அந்தக் கூச்சலும் களேபரமும் உங்களைப் பாதிப்பதில்லையா?*

அதை எல்லாம் நாம் ஏன் கவனிக்க வேண்டும்? கேட்டு ரசிக்கிற விருந்தினர் பலர் அருகே வந்து 'நன்றாயிருக்கிறது' என்கிறார்கள். சிலர் சாப்பிடக் கூடப் போகாமல் கச்சேரி முடிந்துதான் எழுகிறார்கள். இவர்களுக்காகவே வாசிப்பதாக நினைத்துக் கொள்வோமா?

● *இரண்டு பேராக வாசிக்கும் போது, முன்னாலேயே திட்டம் போட்டு விடுவீர்களா?*

அப்படி எல்லாம் இல்லை. மனோபாவம் ஒன்றாக இருந்தால், வாசிக்கும்போது சேர்ந்து விடும். ஆடியன்ஸ் எப்படி அமைகிறார்களோ, அதையும் பார்த்துக் கொள்ள வேண்டும். அதனால் பிளான் எதுவும் பண்ணாமல், ஆன் த ஸ்பாட் வாசிக்கிறதுதான் வழக்கம்.

● *நீங்கள் எதிர்பாராத இடத்திலிருந்து உங்களை அழைத்துக் கச்சேரி செய்த அனுபவம் உண்டா?*

டில்லி முனிசிபல் கவுன்ஸிலில் கலாசார ஆலோசகராக இருக்கும் சுரேந்திர மாத்தூர், நேரு பார்க்கில் ஒரு டிசம்பர் மாதக் காலையில், திறந்தவெளிப் புல் அரங்கில் வாசிக்கக் கூப்பிட்டார். எங்களுக்கே ஆச்சரியமாக இருந்தது. சாதாரணமாகத் தென்னிந்திய இசையை அவர்கள் கேட்டு ரசிக்க மாட்டார்களே, என்ற சந்தேகம் கூட எழுந்தது. ஆனால் மாண்டலின் சீனிவாஸ் ஃபோன் செய்து, "நான் அங்கே வாசித்த போது, உங்கள் பெயரைக் குறிப்பிட்டுச் சொல்லி 'அவர்களை இங்கே அழைக்க வேண்டும்' என்று அவர் கூறினார்" என்றார். 'காலை இராகங்கள்' என்ற தலைப்பும் கொடுத்தார்கள். பனி விலகி, மெலிதான குளிர் இருந்தது. இலேசான வெயில் படரத் தொடங்கிய காலை. மணி எட்டரைக்கு வாசிக்க ஆரம்பித்தோம். அருமையாக ரசித்துப் பாராட்டினார்கள்.

● *சீடர்கள் யாரையும் தயார் செய்யவில்லையா?*

ஆமாம். ஆனால் இரண்டே இரண்டு பேருக்கு மட்டுமே சொல்லிக் கொடுக்கிறோம். நாதசுரக் குடும்பத்திலிருந்து வந்திருக்கும் பையன் தேவராஜன். பி.காம். படித்துவிட்டு, ஆடிட்டர் அலுவலகத்தில் வேலை பார்க்கிறார். தண்டையார்பேட்டையிலிருந்து வருகிறார்! இன்னொருவர், ஆண்டான் கோயில் செல்வரத்தினம் என்னும் நாதசுர வித்துவானின் மகன் கனகசபாபதி. எம்.எஸ்ஸி., கணிதம் படித்தவர். இவர்கள் இருவருக்கும் சொல்லிக் கொடுப்பதில் கிடைக்கிற திருப்தி இருக்கிறதே, அது அளவிட முடியாதது. நாம் சொல்லிக் கொடுப்பதைப் புரிந்து கொண்டு, அவர்கள் வாசிக்கும் போது கிடைக்கிற சந்தோஷம் அதைவிட அதிகம்!




சந்திப்பு : **சாருகேசி**

# நடக்கிறன் யார், நடக்கிறேன்!

**மேஷம்** : காவிரி நதி நீர் ஆணையக் கூட்டத்தை, ஜெய லலிதா தொடர்ந்து புறக்கணித்து வருவதுபோல, குபேரனும் உங்களைப் புறக்கணித்து வந்தானல்லவா? இனி, அந்தப் பிரச்னை நீங்கி, பண வசதி சரளமாக ஏற்படும். புதிய முயற்சி கள் கை கூடும். குறிப்பாக, சுய தொழில் மற்றும் வியாபாரத்தில் முன்னேற்றம் உண்டாகும். ஏற்றுமதி இறக்குமதி வகையில் நல்ல ஆதாயம் உண்டு. வெளிநாட்டுத் தொடர்பு அனுகூலம் தரும். பேச்சில் நிதானம் தேவை.

**ரிஷபம்** : பிரபாகரன் தமிழ் ஈழம் கோரிக்கையை, கைவிட்டதுபோல சனி பகவானும் உங்களைக் கைவிட்டு விட்டார். அதாவது, இரண்டாவது சுற்றில் இறுக்கமாகக் கைப் பிடித்துக் கொண்டிருந்த சனீஸ்வரன், "போப்பா... போய் வேலையைப் பார்" என்று அனுப்பி விட்டதால், மிகவும் உற்சாகமாகப் பணிகளில் ஈடுபடுவீர்கள். சமயோசித புத்தியால் திறமையுடன் காரியங்களைச் செய்து, மேலதிகாரிகளின் பாராட்டைப் பெறுவீர்கள். கொடுக்கல் வாங்கல் சுமுகமாக நடக்கும். பெண்களின் எண்ணம் நிறைவேறும்.

**மிதுனம்** : அதிகாரிகளை அடிக்கடி மாற்றும் தமிழக அரசு போல, நீங்களும் உங்கள் தொழிலை அடிக்கடி மாற்றிக் கொண்டிருந்தீர்கள் அல்லவா? இனி, வேலையோ, வியா பாரமோ நிரந்தரமான அமைப்பு ஏற்படும். ராசிநாதன் புதன், ஏழாமிடத்தில் சூரியனுடன் கூடி, சனியின் பார்வை படுவ தால், தெளிவான சிந்தனை, நண்பர்கள், உறவினர்கள் ஆதரவு என சாதகமான பலன்களே உண்டாகும். குடும்பத்தில் கணவன் - மனைவி உறவு நிலையில் இன்பம் கூடும். பொருளா தார மேன்மை உண்டாகும். மாணவர்கள் திறமைக் கேற்ப பலன் அடைவார்கள்.

**கடகம்** : நதி நீர் இணைப்புத் திட்டம் 'கப்சிப் கோயிந்தா' ஆனது போல, உங்கள் அலுவலகத்தில் இதுவரை இருந்த பிரச்னைகளும் திடீரென்று மாயமாகி விடும். மேலதிகாரி களின் பாராட்டு கிடைக்கும். தெய்வ பலம், புனித காரியங் களில் ஈடுபாடு, தெய்வீக ஸ்தல தரிசனம் ஆகியவை ஏற்படும். குடும்பத்தில் ஒற்றுமையும், மக்கள் நலமும், தன அபிவிருத்தி யும் ஏற்படும். உடன்பிறந்தவர்களால் சிறுசிறு பிரச்னைகள் ஏற்பட்டு விலகும். பயணத்தால் அனுகூலமுண்டு.

**சிம்மம்** : தனிக்கொடி நாட்டியிருக்கும் நடிகர் சரத்குமார் போல, சிம்ம ராசி நேயர்களும் உழைப்பாலும், திறமையாலும் வெற்றிக் கொடி கட்டுவீர்கள். உணவு, ஹோட்டல், ஆயத்த ஆடை, அழகு சாதனப் பொருட்கள் போன்றவை லாபம் கொழிக்கும். கலைத் துறையைச் சேர்ந்தவர்கள் புகழும் பாராட்டும் பெற்று சுபிட்சமடைவார்கள். கணவன் - மனைவி உறவு இனிமை தரும். மனை, வீடு, ரியல் எஸ்டேட் வகையில் ஆதாயம் உண்டாகும். சிலருக்கு புது வீடு யோகமும் உண்டு.

**கன்னி** : தங்கம் விலை திடீரென உயர்ந்து உச்சாணிக்கு சென்றதுபோல, அலுவலகத்தில் உங்கள் நிலையும் மிகவும் உயர்ந்து நிற்கும். பணியில் உயர்வு, ஊதிய மேன்மை, விரும்பிய இடத்துக்கு பணி மாற்றம், என மகிழ்ச்சிக்குரிய விஷயங்களே ஏற்படும். கூட்டுத் தொழில் மூலம் பொருளாதார வளர்ச்சி உண்டாகும். பொன், வெள்ளி, நவரத்தினம், ஆபரணம் போன்றவை நல்ல லாபம் கொண்டு வரும். குரு பலம் பூரணமாக இருப்பதால், திருமணம் போன்ற சுப காரியங்கள், நல்ல விதமாகக் கைகூடி வரும். புனித காரியங்களில் ஈடுபாடு அதிகரித்து ஸ்தல யாத்திரை கூட மேற்கொள்வீர்கள்.

**துலாம் :** கோக் குடித்து மகிழ, ஃபோட்டோவில் இருக்கும் மாடலிங் பெண்ணே குதித்து வருவது போல, பிரச்னையில் இருக்கும் உங்களுக்கு உதவ, நண்பர்களும் உறவினர்களும் தாராளமாக முன் வருவார்கள். அதனால், கடினமான காரியங்களையும் கிடு கிடு என முடித்து, பாராட்டு புகழ் பெறுவீர்கள். அரசு விவகாரங்கள் அனுகூலம் தரும். அரசுப் பணியாளர்கள் நன்மை அடைவார்கள். அரசியல்வாதிகளின் மதிப்பும், அந்தஸ்தும் கூடும். குடும்பஸ்தானத்தை, குரு பார்ப்பதால், சுபமங்கள காரிய முயற்சிகள் அனுகூலமாகும். கோர்ட், வழக்குகள் வெற்றி தரும்.

**விருச்சிகம் :** உலக அழகி அஸ்ரா அகின் தட்டிப் பறித்த வெற்றிக்கனி போலவே, உங்களுக்கும் அமோகமான அதிர்ஷ்ட வாய்ப்புகள் உண்டு. எந்தவிதமான சங்கடங்கள், பிரச்னைகள் ஏற்பட்டாலும், சாமர்த்தியமாகத் திறமையுடன் சமாளித்து வெற்றி பெறும் சூழ்நிலை அமையும். புதிய உத்தியோக முயற்சிகள் கை கூடும். வி.ஆர்.எஸ். கோருபவர்கள், அதனைப் பெறுவார்கள். சுய தொழில், வியாபாரம் புரிபவர்களுக்கு, மண்ணை அள்ளினாலும், பொன்னாக மாறும்.

**தனுசு :** முதல் படம் ஊற்றிக் கொண்டாலும், சட்டுபுட்டென்று இரண்டாவது படத்துக்குப் பூஜை போட்டுவிட்ட, நடிகர் சிலம்பரசன் போல, நீங்களும் சுதாரித்துக் கொண்டு, சுதந்தரமாகச் செயல்படும் காலம் வந்துவிட்டது. எடுத்த காரியத்தில் வெற்றி, உற்சாகமான மனநிலை, தெய்வ அனுக்கிரகம் ஆகியவை உண்டாகும். சட்டம், காவல், இராணுவம் போன்ற துறைகளைச் சேர்ந்தவர்களுக்கு, நல்ல எதிர்காலம் உண்டு. பெண்கள் தத்தம் அபிலாஷைகள் நிறைவேறப் பெறுவார்கள்.

**மகரம் :** சந்தனக் கடத்தல் வீரப்பனின் மதிப்பு இரண்டு கோடியாக உயர்ந்துவிட்டது போல, உங்கள் மதிப்பும், ஆற்றலும் திடீரென்று உயரும். குறிப்பாக, உத்தியோகஸ்தர்களுக்கு அதிர்ஷ்டமான காலமாக அமையும். பதவி உயர்வு, ஊதிய உயர்வு, இடமாற்றம் ஆகியவை ஏற்படும். சுய தொழில் புரிபவர்கள் முன்னேற்றம் காண்பார்கள். வியாபாரிகளுக்கு, வர வேண்டிய தொகை வந்து சேரும். பொருளாதார நிலையில் அபிவிருத்தி ஏற்படும்.

**கும்பம் :** 'பாகிஸ்தானில் கிரிக்கெட் ஆட முடியாது' என்று மறுத்து, முஷாரஃபின் மூக்கை உடைத்த இந்தியா போல, நீங்களும் உங்களின் எதிரிகளின் எதிர்ப்புகளை உடைத்துத் தரை மட்டமாக்குவீர்கள். அதற்கான மன உறுதியை தெய்வானுகிரகத்தால் பெறுவீர்கள். வரவுக்கு மிஞ்சிய செலவினங்களினால், சோதனைகள் ஏற்பட்டாலும், சோதனைகளைச் சமாளித்து, சாதனை படைப்பீர்கள்.வெளியூர், வெளிநாடு சம்பந்தப்பட்ட பயணங்கள் அனுகூலம் தரும். மாணவர்கள் திறமைக்கேற்ற பலன் பெறுவார்கள்.

**மீனம் :** பில்கேட்ஸைக் கவர, எய்ட்ஸ் விழிப்புணர்ச்சித் திட்டத்தில் எக்கச்சக்க ஆர்வம் காட்டும் சந்திரபாபு நாயுடு காரு போல, பிரபு தனவான்களின் ஆதரவு பெற, நீங்களும் ராகு, கேது கிரகங்களை வழிபட்டே ஆக வேண்டிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது. உலோகம், காண்டிராக்ட், இண்டஸ்ட்ரீஸ், வர்த்தகம், இயந்திரம் போன்ற தொழில்கள் லாபம் தரும். நிர்வாகம், வர்த்தகம், நிதி போன்ற துறைகளைச் சேர்ந்தவர்கள், பிரமிக்கத்தக்க முன்னேற்றம் அடைவார்கள். பெண்களுக்கு மகிழ்ச்சியான வாரம்.



பின்னணி பாடகர் கார்த்திக் (துலாம்) இந்த வாரம் பாராட்டு, புகழ் பெறுவாராம்.

**அக்னி சர்மா பக்கம்**

**டிசம்பர் 18 முதல் 24 வரை**

# கல்கி



ChennaiOnline

*all @bout the city.*



கல்கி
சென்னை ஆன்லைன்
இணைந்து வழங்கும்



# இசை விழா

## தொகுப்பு





visit @: www.chennaionline.com/musicseason2002


Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Pvt. Ltd.
Editorial Team : C. Egnath Raj, Anuradha Sekhar, C.Jesudoss. Layouts : S.Stephen, P.R. Rajan.
Editor : Seetha Ravi.
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623;
Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 330/-; Half Yearly Subscription : India : Rs. 165/-
Overseas (Air Mail) Annual : 62 U.S. Dollars, Srilanka Rs.2000/-

